# கருப்பு மண்

பாலகும்மி பத்மராஜு
தமிழாக்கம் :
பா. பாலசுப்பிரமணியன்



நேஷனல் புக் டிரஸ்ட், இந்தியா
புதுடில்லி

# முன்னுரை

பத்தொன்பதாம் நூற்றாண்டில் நடுத்தர வகுப்பைச் சார்ந்த ஆங்கிலேயக் குடும்பங்களில் நாவல் படிப்பது என்பது ஓர் அன்றாடச் சடங்காக இருந்து வந்தது. வீட்டில் மூத்த மகளோ, இரண்டாவது மகனோ நாவல் படிக்கத் தொடங்கினால் குடும்பத்தைச் சேர்ந்தவர் அனைவரும் சுற்றி அமர்ந்து ஆவலோடு கேட்பார்கள். அந்தக் காலத்தில் இத்தனை திரைப்படங்களோ, ரேடியோக்களோ இருக்கவில்லை. நாடகங்கள் இருந்ததெனினும் அவை நடுத்தர வகுப்பினருக்கு எட்டக்கூடிய நிலையில் இல்லை. ஒருவேளை சிலருக்கு வாய்ப்பு இருந்தாலும், நாள்தோறும் நாடகத்துக்குச் செல்ல முடியாதல்லவா! ஆகவே, புத்தக வாசிப்பு என்பது அறிவுக்கு விருந்தாகவும், மனத்துக்கு இன்பமாகவும் இருந்து வந்தது.

சர் வால்ட்டர் ஸ்காட்டின் நாவல்கள், வரலாற்றுப் படைப்புகள் என்றால், சார்லஸ் டிக்கன்ஸின் நாவல்கள் சமூக வாழ்வின் பிரதிபலிப்புகள் எனலாம். தொடக்கக் காலத்தில் நாவல் படைப்பு, வரலாறு, சமூக வாழ்வு ஆகிய இரண்டு பிரிவுகளுக்குள்ளேயே அடங்கியிருந்தது. படிப்படியாகச் சமூகப் பிரிவிலிருந்து புனைகதை (romantic) நாவல் தோன்றி வளர்ந்தது. இந்தப் புனைகதைகளிலும், காதல் வாழ்வு பற்றியவை ஒருவகை, அறிவியல் புனைகதை மற்றொரு வகை. நிகழ்ச்சிக் கோவைகளின் பின்னணியில் கதை நடத்துபவர் கால்ஸ்வர்த்தி. முடிச்சுக்குமேல் முடிச்சாகப் போட்டுக்கொண்டே சென்று, இந்த முடிச்சுகள் அனைத்தையும் இறுதியில் அவிழ்ப்பவர் ஜோசஃப் கான்ராட். நம்பிக்கைக்குகந்த ஆர்வத்தோடு ஓட்டத்தைத் தொடங்கி, பிறகு குப்புற விழுவதைப் பரிவுடன் காட்டுபவர் தாமஸ் ஹார்டி. எதிர்காலத்தின் அற்புத உலகங்களுக்குள் அழைத்துச் செல்பவர் எச். ஜி. வெல்ஸ்.

ஆங்கில நாவல் இலக்கியத்தில் டி.எச். லாரன்ஸ் ஒரு புரட்சி வீரர். அதுவரையில் இந்த இலக்கியப் படைப்பு ஒரு முறையான வடிவத்துக்குள் கட்டுப்பட்டிருந்தது. தமக்கு வெளி உலகத்துடன் இருக்கும் பிணைப்பைத் தெளிவு படுத்துவதே கலைஞரின் இலட்சியமென்றும், கலையின் உட்பொருள் என்றும் கூறினர் லாரன்ஸ். தன் கால உலகத்தை ஒரு மனிதன் தன் பார்வைக் கோணத்திலிருந்து சித்திரிப்பதே கலையின் வடிவம் என்று ஆனதிலிருந்து நாவல் படைப்புத் துறையில் பெரும் மாறுதல் தோன்றியது.

கற்பனைப் படைப்பில் கற்பனை எந்த அளவு இருப்பினும், அது நடைமுறை உண்மைக்கு நெருங்கி இருந்தாலொழிய இலக்கியமாகாது.

ஐரோப்பாவிலும், இங்கிலாந்திலும் வெற்றிக் கொடி நாட்டிய நாவல் இலக்கியம், அமெரிக்காவில் ஒரு மகோன்னத நிலையை எட்டியது. அமெரிக்க நாவல் சக்கரவர்த்திகள் ஒருவர் இருவர் அல்லர். இருபத்தைந்து பேருக்கு மேல் இருப்பார்கள். ஜேம்ஸ் கூப்பர், நெத்தானியல் ஹாத்தார்ன், ஹென்ரி ஜேம்ஸ், மார்க் ட்வெய்ன், ஸ்டீபன் கிரேன், ஜாக்லண்டன், வில்லா கேத்தர், ஷெர்வுட் ஆண்டர்ஸன், ஸிங்க்ளேர் லூயி, எர்னெஸ்ட் ஹெமிங்வே, தாமஸ் வுல்ஃப், வில்லியம் ஃபாக்னர்—இவ்வாறு பல பேரைச் சொல்லலாம். ஒவ்வொருவரும் ஒவ்வொரு வழியில் உன்னத நிலையை எய்தினர்.

ஆறுவது வகுப்புடன் படிப்பை முடித்துக்கொண்ட இருபது வயது மாலுமி ஒருவன், தான் எழுத்தாளனாகவேண்டுமென்று உறுதி கொள்கிறான்: சொல்லமைப்பு, சொற்றொடர் அமைப்பிலிருந்து தொடங்கிக் கற்றுக்கொண்டு, பத்தாண்டுகளில் எழுத்தாளனாகப் பெயர் ஈட்டுகிறான்; சாதாரண எழுத்தாளனாக அல்ல, எழுத்துலகமே பெருமைப்படும் அளவுக்குப் புகழ் பெற்ற எழுத்தாளனாக! தன் நாவலைப் பதிப்பாளருக்கு அனுப்பும்போது மூன்று பெயர்களைச் சூட்டுகிறான். முதற் பெயர் : ஸக்செஸ்; இரண்டாவது: ஸ்டார் டஸ்ட்; மூன்றாவது: மார்ட்டின் ஈடென். பதிப்பாளர் இறுதிப் பெயரைத் தேர்ந்தெடுக்கிறார்கள். அதுவே ஜாக் லண்டனின் உலகப் புகழ் பெற்ற நாவல்.

இதே போல ஹெமிங்வே, தம் 'எ ஃபேர்வெல் டு ஆம்ஸ்' என்ற நாவல் முழுவதையும் எழுதி முடித்த பிறகு, 1922-இல், ஹெமிங்வேயின் மனைவி, அந்த நாவலின் எழுத்துப் பிரதியைக் கைப் பையில் வைத்துக்கொண்டு செல்லும்போது, அந்தப் பையில் பொன், வெள்ளி இருக்கிறதென்ற எண்ணத்தில் அதைப் பறித்துக்கொண்டு போகிறான் ஒரு திருடன். எழுத்தாளன் ஒருவன் அவ்வளவு சிரமப்பட்டு எழுதிய நாவல், எந்தப் பெண்மணியோ அடுப்பெரிக்க உதவும் காகிதமாகியிருக்கும்; அல்லது குப்பைக் கூடையில் கலந்து போயிருக்கும். ஆறாண்டுகள் பொறுத்து மீண்டும் அதே நாவலை எழுதுகிறார் ஹெமிங்வே. அந்த நாவலின் வெளியீட்டோடு அவருக்கு உலக இலக்கிய அரங்கில் ஓர் அபூர்வ இடம் கிட்டுகிறது.

இந்த நூற்றாண்டின் முப்பதுகளில் ஆந்திரப் பல்கலைக்கழகம் தெலுங்கு நாவல் போட்டி ஒன்று நடத்தியபோது விஸ்வநாத

சத்திய நாராயண அவர்களின் 'வேயி படகலு' (ஆயிரம் நாகப் படங்கள்), அடவி காபிராஜு அவர்களின் 'நாராயணராவு', குடி பாட்டி வெங்கடசலம் அவர்களின் 'மைதானம்' முதலியன முதல் தரமாக இருந்தன. முதலிரண்டும் பரிசுகள் பெற்றன. இந்த இரண்டு நாவல்களுடன் ஒத்த நிலையில் அமைந்தது உன்னவ லட்சுமீநாராயண அவர்களின் 'மாலபல்லி' (பறைச்சேரி). படிக்க விஷயம் வேண்டும் என்பதாலும், பெண் எழுத்தாளர் பெயர்களில் ஒரு மவுசு இருப்பதாலும், பத்திரிகைகளில் தொடர்கதைகளாக எண்ணற்ற நாவல்கள் வெளியாகி வருகின்றன. மற்றபடி, தெலுங்குச் சிறுகதை அளவு தெலுங்கு நாவல் வளம் பெறவில்லை. சில நாவல்களைப் படிக்கும்போது, சினிமாவுக்காக நாவல் எழுதினார்களா என்று தோன்றுகிறது.

நிற்க, இந்தத் தெலுங்கு நாவல் பிறந்து ஏறத்தாழ ஒரு நூற்றாண்டாகிறது. கோல்ட் ஸ்மித் எழுதிய 'தி விக்கார் ஆஃப் வேக்ஃபீல்'டைத் தழுவிக் கந்துக்கூரி வீரேசலிங்கம் அவர்கள் 'ராஜசேகர சரித்ரமு' (*1879*) என்ற நூலைப் படைத்து, தெலுங்கு மொழியில் முதல் நாவலை எழுதிய பெருமையைத் தேடிக்கொண்டார். பிரம்ம சமாஜ சமயச் சக்தியின் வாயிலாகச் சர்க்கார் மாவட்டங்களில் பெண்கள் முன்னேற்றம், சீர்திருத்த ஆர்வம் ஆகியவை வளர்ச்சியுற்றன. ராஜசேகரன் நிலப்பிரபுத்துவக் கோட்பாட்டின் பிரதிநிதியாக இருப்பினும், வீரேசலிங்கம் அவர்கள் தம் படைப்புகளைச் சமூக விழிப்புணர்ச்சிக் குரிய சாதனங்களாகப் பயன்படுத்திக் கொண்டார். அதன் பிறகு, தெலுங்கில் இரண்டாவது நாவல் 'ராமச்சந்த்ர விஜயமு' (*1894*) ஓர் ஏழைப் பிராம்மண இளைஞன், ஆங்கிலம் படித்துவிட்டு, வேலை தேடிக்கொண்டு முன்னுக்கு வருவதே இதில் முக்கிய அம்சம். மீண்டும் ஒரு கால்நூற்றாண்டுவரை நமக்கு நாவல்கள் அவ்வளவாகத் தென்படாது. *1919*-இல் சிலக்கமர்த்தி லட்சுமீ நரசிம்ஹம் அவர்களின் 'ராஜரத்னமு', ஸ்ரீ பாத சுப்ரஹ்மணிய சாஸ்திரிகளின் 'ஆத்மபலி', வெங்கட பார்வதீஸ்வரரின் 'மாத்ரு மந்திரமு' ஆகியவை வெளியானது முதல், நாவல் இலக்கியத்தில் புதுவிழிப்பு தோன்றியது எனலாம். ஆனால் இதுவரையில் சமூகச் சீர்திருத்தத்தை ஆதரிக்கும் அல்லது எதிர்க்கும் பாத்திரங்கள் மட்டுமே காட்சியளித்தன.

காந்தியடிகள் எழுப்பிய சத்தியாக்கிரகச் சங்கநாதம் மக்கள் திரளைப் புதுப் பாதைகளில் திருப்பவே, வேலூரி சிவராம சாஸ்திரியாரின் 'ஓபய்ய', உன்னவ லட்சுமிநாராயணரின் 'மாலபல்லி'

ஆகியவை வெளியாயின. 'மாலபல்லி' முந்திய தலைமுறையினருக்கு வழிகாட்டியாக இருந்தது. அது வெளியாகி இப்போது ஐம்பத்தைந்து ஆண்டுகள் கடந்திருப்பினும் அந்தப் பாத்திரங்கள் தெலுங்கு மண்ணின் சமூகநிலைக்கு உயிருள்ள எடுத்துக்காட்டுகளாகத் திகழ்கின்றன. அன்றைய பிரச்னைகள் சில தீர்ந்தன எனினும், அவற்றின் நிழல்கள் வேறொரு வடிவத்தில் சமூக, அரசியல் சூழ்நிலைகளில் தாண்டவ மாடிக்கொண்டுதான் உள்ளன.

அதன் பிறகு, முப்பத்தைந்தை யொட்டி வெளிவந்த மூன்று நாவல்கள்: விஸ்வநாதரின் 'வேயி படகலு' வரலாற்றின் அடிச் சுவட்டில் நைந்துபோன இறந்த காலத்திலிருந்து நிகழ்காலத்துக்கு உயிரூட்டம் கொடுத்தது. அடவி பாபிராஜுவின் 'நாராயண ராவு' ஜமீன்தார் இனத்திலிருந்து ஒரு வீரவள்ளலை உருவாக்கியது. அதே சமயத்தில் குடிபாட்டி வெங்கடசலம் தெலுங்கு நாவலுக்குப் புத்தொளி ஊட்டியவாறு, மூளையில் படிந்த மாசை விரட்டுவதற்கு நிறைநிலவிற்கு வரச் சொன்னார். பெண்ணை அடிமையாக்கி வீழ்ச்சி யடைவது ஆடவன்தான் என்று மின்னல் கொடி போன்ற பாத்திரங்கள் மூலமாகத் தெலுங்கர்களுக்கு எடுத்துக் கூறினார். பொருளாதார முடக்கமும், இரண்டாவது உலகப் போரும் ஒன்றி தெலுங்கு மக்களின் மீது உண்டாக்கிய பாதிப்பின் விளைவு, குடும்பராவின் 'சதுவு' (படிப்பு), கோபிச் சந்தின் 'அசமர்த்துனி' (ஜீவயாத்ர), ஜி.வி. கிருஷ்ணராவின் 'கீலு பொம்மலு' (கைப்பாவைகள்) ஆகியவற்றில் காட்சி அளிக்கிறது. புச்சிபாபுவின் 'சிவரக்கு மிகிலேதி' (கடைசியில் மிஞ்சுவது) வெளியான நாள் முதல் மனோதத்துவச் சகாப்தம் தொடங்கியது.

திரு பாலகும்மி பத்மராஜு 'காலிவான' (காற்று மழை) என்ற சிறுகதையின் மூலம் அனைத்துலகப் புகழ் பெற்ற எழுத்தாளரானார். பத்மராஜு அவர்கள் கவிஞர், சிறுகதை ஆசிரியர், நாவலாசிரியர், திறனாய்வாளர், வானொலி எழுத்தாளர், திரைப்பட எழுத்தாளர், இலக்கியச் சொற்பொழிவாளர். அவரைப் போன்ற பல் திறனாளர்கள் மிகக் குறைவு. ஒரு விஷயத்தைச் சொல்வதாயினும் எழுதுவதாயினும், தெளிவாகவும் கோவையாகவும் சுற்றி வளைக்காமலும் சொல்லக் கூடியவர். நாம் எங்கிருக்கிறோம் என்பதை அனைத்துலக இலக்கியக் கோட்பாடுகளுடன் ஒப்பிட்டுப் பார்த்துக் கொள்ள வேண்டும் என்று வலியுறுத்துபவர். தற்கால இலக்கியப் போக்கு எப்படி இருப்பினும், நம்முடையது—தெலுங்குத்தன்மை என்றாலும் சரி, மனிதத்தன்மை என்றாலும் சரி—படைப்பில் காட்சி

யளிக்க வேண்டும் என்று சொல்பவர். அவர் பல நூல்களை வெளியிட்டுள்ளார். இருப்பினும் அவை அனைத்திலும் 'ராமராஜ்யானிக்கி ரஹதாரி' (ராமராஜ்யத்துக்கு நுழைவுச் சீட்டு) என்னும் நாவல் தெலுங்குப் பிரதேசத்தில் காணப்படும் நடுத்தரக் குடும்ப வாழ்க்கையின் பிரதிபிம்பமாக விளங்குகிறது. இருபத்தைந்து முப்பதாண்டுப் பொருளாதாரச் சமூக அரசியல் சக்திகளைப் பரிவோடும் அழகோடும் சித்திரிக்கிறது இந்த நாவல்.

நாவல் படைப்பில் 'நல்ல ரேகடி' (கருங் களிமண்) ஒரு புதுமையான முயற்சி. நிகழ்ச்சிகள் ஒன்றை அடுத்து ஒன்று நிகழும்போது பாத்திரங்கள் அறிமுகமாகின்றன. கதை சொல்லும் முறையிலும் புதுமை உள்ளது. பிளந்துபோன கருங் களிமண் தாகத்தோடு வாய் திறக்கிறதாம். 'வெயில் களிமண்ணுக்குத் தாகத்தைப் பயிற்றுவிக்கிறது; ஆரோக்கியமான தாகம். அந்தத் தாகம் எல்லையில்லாத சக்தியைத் தருகிறது களிமண்ணுக்கு. நீரிலிருந்து, காற்றிலிருந்து ஜீவாகாரத்தை ஈர்த்துக் கொள்ளும் சக்தி உண்டாகிறது. அப்போது களிமண் பொன் விளைவிக்கிறது' என்கிறார் அவர்.

'முப்பது ஏருங்க மூணு நாள்ளே உழறதை—ஒரு நாள்ளே உழுதுடும்' என்கிறான் புதிதாக டிராக்டர் வாங்கிய ராஜு. அந்த ராஜுவை இருவர் காதலிக்கிறார்கள். 'இந்த வீட்டெயும் நிலத்தெயும் விட்டுட்டு எங்கே போகமுடியும்? தான் போயிட்டா, காராப்பசுவுக்குப் புண்ணாக்குத் தண்ணி யார் வைப்பாங்க? எலுமிச்ச மரத்துக்குத் தண்ணி யார் ஊத்துவாங்க? இதெல்லாத்துக்கும் தான் வேணும். தனக்கும் இதெல்லாம் வேணும்' என்று நினைக்கும் மல்லி. 'அந்த லுச்சா மருமகனையிட்டாப் போதும்னு வலிஞ்சிபோனியே ஒரு காலத்திலெ, அப்பொ அவர் லுச்சா இல்லே, இப்பொ அப்படி ஆயிட்டார். உங்களைப் போன்ற ஆம்பிளைங்களுக்குப் பாசங்களைவிடப் போராட்டங்கதான் முக்கியம். எனக்காக யார் கால்லேயும் யாரும் விழவேணும். ஒருத்தரோட ஒருத்தர் உடெச்சிக்கிட்டு உங்க ஆசைங்களெத் தீத்துக்கோங்க' என்று அச்சமில்லாமல் தந்தையிடம் சொல்லும் லட்சுமி. லட்சுமியை ராஜுவுக்குக் கொடுப்பதென்பது திட்டமிடப்பட்டதே; வரதட்சிணை ஏதுமில்லாமல் செய்து கொள்வதற்கும் அவர்கள் தயாராகவே உள்ளனர். எப்படியாயினும், மல்லியினுடையது மானசீகக் காதல் தான்; கொடுத்துவிடாத கடிதங்கள் மூலம் தன் கனவுகளை நனவாக்கிக் கொள்கிறாள்.

செக்கின் மீது அமர்ந்திருக்கும் மங்கியின் தரிசனத்துக்காக, கணக்குப்பிள்ளை தர்மராஜு தன் மகன் லிங்கராஜுவை அறையில்

தள்ளிப் பூட்டும்போது அந்தச் செல்லமகன் சொல்கிறான் : சாகற துக்கு முன்னாடி அம்மாவை இன்ஷூர் பண்ணி, இருபத்தஞ்சா யிரம் வாங்கிக்கிட்டியே. அம்பது குடுக்கச் சொன்னா என்னமோ விளக்கெண்ண குடிச்சா மாதிரி மூஞ்சியை வெச்சிக்கிறியே?’ தந்தை மகன் இருவரையும் தன் இரு கண்மணிகளாக வைத்துப் போற்று கிறாள் மங்கி. தேள் சுபாவம் கொண்ட தர்மராஜுவுக்குத் தன் நரிச் சேட்டைகளால் ராஜு—லட்சுமியின் திருமணம் நின்று போகாதென்று தெரியும். இருந்தாலும், தன்னால் இயன்ற வரையில் கலகங்கள் செய்து குழப்பங்கள் விளைவிக்கிறான். கடைசி யில் மல்லி அம்மனிடம் கலந்து போகிறாள்.

கிராமீயச் சூழ்நிலையிலுள்ள சுப்பையா, ராமையா, வெங்கன்னா, கங்குலு, ரங்கடு, ராமி, சூராலு முதலானவர்கள் உயர்ந்த நிலையில் பேசாமல், சாமான்யர்களாகவே இருந்து தம் உள்ளங் களில் இருப்பதை வெளியிடுகிறார்கள். இவர்களில் யாரும் வாதத் திறனுள்ளவரோ, உபதேச நோக்கமுள்ளவரோ அல்ல. தம் ஆவேசங்களைக் கொட்டித் தீர்க்கும் சொல் ஜாலங்கள் அவர் களிடம் இல்லை. தங்களை அவமானப்படுத்தினால் பதிலுக்கு அவ மானப்படுத்துவதே மிகப் பொருத்தமானது என்று எண்ணுபவர் கள். பரம்பரையாக இருந்து வரும் உயிர்ப்பலி அவர்களுக்குத் தவறாகத் தோன்றாது. தலைமுறை தலைமுறையாக இருந்துவரும் பழக்கவழக்கங்களை மீறிப் போகாமல், அவற்றை அனுசரித்து வாழ்வதில் குறையொன்றும் இல்லை என்று எண்ணும் வெள்ளை மனம் படைத்தவர்கள். ‘நல்ல ரேகடி—அல்வசனம்’—டிராக்டர் நுழைவோடு தொடங்கும் இந்த நாவல், மக்களின் கடமைகள்‘ பந்தங்கள், போட்டிகள், விருப்பு வெறுப்புகளுடன் இழைந்து, காதற் பறவைகளுக்குக் கோவிலில் திருமணம் நடத்திவைத்து மல்லியின் உயிர்த் தியாகத்துடன் முடிவடைகிறது.

‘நான் நாவல் எழுத்தாளன் என்பதால் விஞ்ஞானி, மெய்ஞ் ஞானி, கவிஞன் ஆகியவர்களில் யாரையும்விட உயர்ந்தவனாகக் கருதிக் கொள்கிறேன். ஏனெனில், அவர்கள் யாவரும் தம்தம் துறையில் விற்பன்னர்கள். ஆனால், என்னிடமோ அவர்கள் அனைவரிடமும் இருப்பவற்றில் ஒவ்வோர் அளவு உள்ளது. ஒளி மயமான வாழ்வின் சாரமே நாவல்’ என்றார் லாரென்ஸ்.

பத்மராஜு அவர்கள் அத்தகைய வாழ்க்கைச் சாரத்தை ‘நல்ல ரேகடி’யில் அறிவுறுத்தி யுள்ளார்.

—என். ஆர். சந்தூர்

**கா**லுக்குக் கீழே கறுப்புக் களிமண் சதசதவென்கிறது; மழை பெய்யும்போது. கழுவினாலும் போகாது. கழுவக் கழுவத் தண்ணீரை அழுக்காக்கிக் கொண்டே இருக்கும்; சாம்பல் நிறத்தில் மண் பூத்துக் கொண்டே இருக்கும்.

மழை பெய்யும்போது குழந்தைகளும், பெண்களும், பையன்களும் கறுப்புக் களிமண்ணோடு ஒன்றிவிடுகிறார்கள். குழந்தைகளுக்கும் களிமண்ணுக்கும் மிகப் பொருத்தம். குழந்தைகளும் களிமண்ணும் மிருதுவானவை, மனசு குளிர்ச்சியாக இருக்கும் போது, மழை பெய்யும்போது.

மழை நிற்கிறது. குளிர்ச்சியான வெயில் காய்கிறது. மிருதுவாக உலர்கிறது களிமண். குழந்தைகள் களிமண்ணால் அப்போது கோலி செய்கிறார்கள். விரலால் சின்னக் கட்டிகளை எடுக்கிறார்கள்; விரலால் உருண்டை செய்கிறார்கள். நகத்தால் மெருகேற்றுகிறார்கள். இளம் வெயிலில் காயவைக்கிறார்கள். பிறகு விளையாடுகிறார்கள். மிருதுவாகக் காய்ந்த களிமண்ணால் உருண்டை செய்கிறார்கள். நகத்தால் மெருகு கொடுக்கிறார்கள். குளிர்ச்சியான வெயிலில் காயவைக்கிறார்கள், குறப் பையன்களைப் போலவே. அந்தக் கோலிகள் அவர்கள் உண்டி வில்லுக்கு ஆயுதங்கள். இரும்புக் குண்டுகள் போலக் காய்ந்த கோலிகளை உண்டி வில்லில் வைத்து, காக்காய்களை அடிக்கிறார்கள். அடித்துச் சாகடிக்கிறார்கள் குறவர்கள்.

மிருதுவான வெயில் முற்றிவருகிறது. களிமண் பாளம் பாளமாக வெடிக்கிறது. மிருதுவான களிமண்ணில் மனிதர்களின்-மாடுகளின் கால்சுவடுகள் பதிகின்றன. அந்தச் சுவடுகள் வெடிக்கின்றன. ஊசி மாதிரி—உருவமில்லாத இரும்புக்கட்டி மாதிரி—கெட்டிப்பட்டுப் போகிறது களிமண். மனிதர்கள் காலில் குத்தி வலியைக் கொடுக்கிறது. காலுக்குத் தொல்லை இல்லாதபடி

செருப்பு மாட்டிக் கொள்கிறார்கள் பணக்காரர்கள். செருப்புக்கு வக்கில்லாத கோடிக்கணக்கான மக்கள், கிராமத்து மக்கள் அப்படியே நடக்கிறார்கள், வலியைப் பொறுத்துக்கொண்டு. அவர்கள் கால்கள் வலிக்குப் பழக்கப்பட்டுப் போகின்றன. நாளாவட்டத்தில் காய்த்துப் போகின்றன. வலி தெரிவதில்லை. மாடுகளின் கால் குளம்பு மாதிரியே, பாதத்துக்குக் கீழே தோல் தடித்துப் போகிறது. கிராமத்து மக்களின் பாதத்துக்கு உணர்ச்சியற்றுப் போகிறது. மக்களுக்கு மென்மைத் தன்மை இல்லாமல் போய் விடுகிறது, மாடுகள் மாதிரியே. கிராமத்து மக்களும், பிளந்து போன களிமண் மேல் நடந்து போகிறார்கள். ஊசி போன்ற களிமண் முனைகள் அவர்களுக்கு இனிமேல் வலியைக் கொடுக்காது. வலி தெரியாதபடி மரத்துப் போய் விட்டது, கிராமத்து மக்களுக்கும் மாடுகளுக்கும்.

வெடித்துப் போன கரிய களிமண் தாகத்தோடு வாயைத் திறக்கிறது, வானத்தைப் பார்த்து. அதன் நாக்கு வறண்டு போய், எங்கோ உள்ளே இழுத்துக்கொண்டு போகிறது. முளைகளின் வேரைத் தன் தாகத்தால் பொசுக்கி விடுகிறது களிமண், முளை வளராதபோது. வளர்ந்த முளைகள் செத்து விடுகின்றன. ஆனால் களிமண் செத்துப் போகாது. எப்போதும் செத்துப் போகாது. எப்போதோ அமிர்தம் குடித்திருக்கிறது களிமண். அதனால் அதற்குச் சாவு இல்லை. களிமண் வானத்தை நோக்கி வாயைத் திறந்து கோரத் தவம் பண்ணுகிறது. அந்தத் தவத்தின் அனலில் உலகமெல்லாம் வெந்துவிடுகிறது. தவத்தின் கடுமையில், கையாலாகாத நிலையில் ஜீவராசிகள் துடிதுடித்துப் போய்விடுகின்றன.

அப்போது பலிக்கிறது, களிமண்ணின் தவம். குளிர்ச்சியான மழை குடம் குடமாகக் கொட்டுகிறது. பரபரப்புடன் குடிக்கிறது களிமண், மழைத் தண்ணீரை. தண்ணீரோடு சேர்த்து, காற்றிலிருந்தும், மேகத்திலிருந்தும் சாரத்தைக் கிரகித்துக் கொள்கிறது. நெஞ்சடைக்கும் வரை கரிய களிமண் தண்ணீரைக் குடிக்கிறது. இன்னொரு வருஷம் பயிருக்கு உயிர் கொடுக்கிறது. மனிதர்களுக்கும் மாடுகளுக்கும் உயிரைக் கொடுக்கிறது.

குழந்தைகளுக்கும் களிமண்ணுக்கும் மிகப் பொருத்தம். சிற்பியின் கைகளில் களிமண் கட்டிகள் குழந்தைகள் போல. வெயில் களிமண்ணுக்குத் தாகத்தைக் கற்றுக் கொடுக்கிறது. ஆரோக்கியமான தாகம். அந்தத் தாகம் எல்லையில்லாத சக்தியைக் கொடுக்கிறது, களிமண்ணுக்கு. தண்ணீரிலிருந்தும் காற்றிலிருந்தும் ஜீவசாரத்தைக் கிரகிக்கும் சக்தி. அப்போது களிமண் பொன்னை விளையச்

செய்கிறது. குழந்தைகளிடம் எல்லையில்லாத வேட்கை இருக்கிறது. களிமண்ணின் தாகம் மாதிரியே, அந்த வேட்கை குளிர்ச்சியான மழையைக் கேட்கிறது. மழை பெய்தால் குழந்தைகள் பொன்னை விளைவிக்கிறார்கள், களிமண்ணைப் போலவே—குளிர்ச்சியான மழை பெய்தால், கிராமத்து மக்கள்—அப்போது பிறந்த குஞ்சிலிருந்து, நூறு வயது கிழவன் வரையில்.

''குழந்தைக்கும் களிமண்ணுக்கும் மழைவேணும், சில்லென்ற மழை.
மழை இறுகிப் போயிட்டா? பஞ்சம் வந்துட்டா?
குழந்தைக்கும் களிமண்ணுக்கும் தாகம் அடங்கலேன்னா?
கிராமம் என்னாகும்? உலகம் என்னாகும்?

மேடு-பள்ளம். மேடு, மேடு-பள்ளம். இடது பக்கம் ஏற்றம்—சட்டென்று இறக்கம். டிராக்டருக்குத் தெரியும், குப்புற விழாமல் நடப்பதற்கும், மேடு பள்ளங்களையும் ஏற்ற இறக்கங்களையும் கடப்பதற்கும். அவன் கைக்குத் தெரியும், டிராக்டரை ஓட்டுவதற்கு. முதலிலெல்லாம் கையைப் பலவந்தமாக இழுத்துக்கொண்டிருந்தது டிராக்டரின் சக்கரம். பிறகு சக்கரத்தை மிக நாசூக்காகத் தன் பிடியில் வைத்துக் கொள்ளக் கற்றுக்கொண்டது கை.

**சி**ன்ன வயதிலிருந்தே யந்திரமென்றால் மிக இஷ்டம் ராஜுவுக்கு. கடிகாரம், கிராமபோன் இதையெல்லாம் கழற்றிவிடுவான். முதலிலெல்லாம் கழற்றியதை மறுபடியும் பொருத்துவதற்குத் தெரியாது. அரை மணியில் கழற்றியதை ஆறு நாள் அவதிப்பட்டு மாட்டிவிடுவான். பல் சக்கரம், திருகாணி இவை எல்லாம் சொன்னபடி ஆரம்பத்தில் கேட்காது. இப்போது எவ்வளவு புதுக் கார் என்றாலும், அவன் தொட்டால் போதும், சொன்னபடி கேட்கும், டிராக்டர் கூட.

''டேய் அத்தான்!'' என்று கத்தினான் காத தூரத்திலிருந்து கங்கப்பா. புரட்டிப் போட்ட மண்கட்டிகள் இடையே பெரிய உடம்பைத் தூக்கிக்கொண்டு ஓட ஆரம்பித்தான். ஓட்டம் மாதிரி நடையில் உற்சாகம். அவசரம் அதிகம், வேகம் குறைவு, அந்த நடைக்கு.

டப்—டப்—டும்டப் என்கிறது அவன் கைக்குக் கீழே டிராக்டர். ராஜா மாதிரி உட்கார்ந்திருந்தான் ராஜு, பலகை சீட்டுமேல்.

முப்பது ஜோடி மாடும், முப்பது ஏரும் வேலையை நிறுத்திவிட்டுப் பார்த்தன டிராக்டரையும், அவனையும்.

டு-ர்-ர்-ர்-ர் என்னும் சத்தத்தோடு நிறுத்திவிட்டான் என்ஜினை. திடீரென்று நிசப்தம். கிராமப் புறத்தில் எப்போதும் இருக்கும் நிசப்தம். ராஜு இறங்கினன் பலகை சீட்டிலிருந்து.

''முப்பது ஏரு மூனு நாள்ளெ உழறதை ஒரு நாள்ளெ உழுதுடும். அத்தோட போச்சா? விதை விதைக்கும், அறுவடை பண்ணும், டிரெய்லர்லே தானியத்தைத் தூக்கிப் போட்டா வீட்லெ கொண்டு போய்ச் சேர்த்துடும். புதுமாதிரி யந்திரம்.''

''அப்பாடா!'' என்ருன் கங்கப்பா, பெரிய கண்ணை இன்னும் பெரிதாக்கிக்கொண்டு. ஆச்சரியம் இருந்தது, சந்தோஷம் இருந்தது அந்தக் கண்ணில். ஆனல் அறிவு இல்லை, சுறுசுறுப்பு இல்லை. பெரிய இதயம் இருந்தது, அந்தக் கண்ணின் பின்னல். கங்கப்பாவின் பருமனெல்லாம் இதயந்தான். கங்கப்பாவைப் பார்த்துக் கொண்டிருந்தால் கிராமத்து ஏரிதான் ஞாபகம் வரும் ராஜுவுக்கு. தாமரை இலைகளோடு, பூவோடு நிறைந்து போயிருக்கும் கிராமத்து ஏரி. எதிர்ப் பக்கத்துக் கரை இல்லை கிராமத்து ஏரிக்கு. தாமரை இலைகள் பரவிப் போய் ஏரியில் நீர்க் கண்ணுடியைத் துண்டுத் துண்டாக உடைக்கிறது. ஆனல் வானம் ஏரிக் கண்ணுடியில் முழுதாகப் பிரதிபலிக்கிறது. அகண்டிருக்கும் வானம் மாதிரியே, கங்கப்பாவின் இதயம் அவன் கண்ணில் பிரதிபலிக்கும்.

''உன் வீட்டுக்காரு வந்தாச்சா?'' என்று கேட்டாள் மல்லி, புளியந்தளிரைப் பறித்துக்கொண்டே.

''சீ, கர்மம்! என் வீட்டுக்காருன்னு ஏன் சொல்றே? உங்க அத்தான்'' என்று சொன்னுள் லட்சுமி.

''இன்னைக்கி இல்லேன்னு நாளைக்கி உன் வீட்டுக்காரு ஆகமாட்டாரா?'' என்ருள் ராமி, இன்னெரு சின்னக் கிளையிலிருந்து தளிரைப் பறித்துக்கொண்டே. லட்சுமியின் வாயும் உதடும் வெறுப்போடு பிதுங்கின. கண்ணும் கன்னமும் ஆசைப்பட்டன, 'ஆமாம்' என்பது போல. 'எப்போதோ—எத்தனை நாளுக்கப் புறமோ?' என்பது போல் பிரகாசித்தது; சிவந்து போய்விட்டது.

''அம்மா லச்சம்மா, ராஜு அத்தான் வந்துட்டான், யந்திரம் ஓட்டிக்கிட்டு. அதென்னமோ பேரு! முப்பது ஏரு மூனு நாள்ளெ உழற நிலத்தை...'' மேல் மூச்சு வாங்கவே, அதற்கு மேல் சொல்ல முடியாமற் போய்விட்டான் கங்கப்பா. மிக ஆவேசத்தோடு, முடிந்த அளவு அவசரத்தோடு, உழுத நிலங்களின் குறுக்கே ஓடோடி வந்தான். நடை மாதிரி ஓட்டம். இரண்டு தடவை

நெஞ்சு நிறைய மூச்சு இழுத்துக்கொண்டு, மறுபடியும் சொல்ல ஆரம்பிப்பதற்குள் மேலேயிருந்து விழுந்தது ஒரு சுமை புளியந் தளிர்.

''கொஞ்சம் மென்னு பாரு சின்னேயா. செத்த மூச்சு வாங்கு.''

''புளிய மரத் தளிரைப் பாரு, சின்னப் பொண்ணு திமிரைப் பாரு'' என்று சொல்லிக்கொண்டே தலையைத் தூக்கி மேலே பார்த்தான் கங்கப்பா. புளியம் புதர் இருட்டு நடுவில், ராமியின் மிருதுவான கறுப்புக் கால், முழங்காலுக்கு மேல் மடித்துக் கட்டிய பாவாடைக்குள் மேலும் மிருதுவான துடை கறுப்பாகப் பளிச்சிட்டது. கங்கப்பா அதிர்ச்சி அடைந்து கீழே விழப் போய்ச் சமாளித்துக் கொண்டான். ராமியின் முழங்காலுக்கு மேல் மிருதுவான சதையைப் பார்த்தால் கங்கப்பாவுக்குத் தலை சுற்றும். கங்கப்பா ஆவலோடு முகத்தை முழுதாக மேலே திருப்பிப் பார்த்தான். கறுப்பு முகத்தில் விஷமத்தோடு பிரகாசிக்கும் கண்களும், மேலும் வெளுப்பாக மயக்குவது போல் பிரகாசிக்கும் பல்லும் அவனுக்குச் சவால் விடுபவைபோல் பளபளக்கின்றன. கறுப்பாக மெருகேறிய கன்னங்களில் விழும் குழிகளைப் பார்த்தால் மூச்சு அப்படியே நின்றுவிடும் கங்கப்பாவுக்கு. பாணைத் தடியை நிலத்தில் நட்டு அதன் மேல் சாய்த்தான், முன்னால் விழப் போன தன் கட்டையை.

''காலு சருக்கினா கீழே விழுவே. கொஞ்சம் ஜாக்கிரதையா இரு'' என்று சொன்னான் கங்கப்பா, பார்வையை வேறு பக்கம் திருப்பிக்கொண்டு. ராமியைப் பார்த்துக்கொண் டிருந்தால், அவன் நாக்கும் உதடும் நிலைத்துப் போய், நினைக்கும் வார்த்தையே வெளியே வராது.

''பஞ்சு மூட்டை மாதிரி நீங்க இருந்தா கீழே ஏன் விளறேன், கால் சருக்கினா?'' என்றாள் ராமி.

மல்லி, பூனை மாதிரி சரசரவென்று இறங்கினாள் மரத்திலிருந்து. கங்கப்பாவின் இதயம் தொண்டையில் கார்க் போல அடைத்துக் கொண்டது.

''ஐயய்யோ, மெதுவா இறங்கு. முதல்லே நீ மரத்திலே ஏன் ஏறினே தங்கச்சி?'' என்று கேட்டான் கங்கப்பா.

மல்லி பதில் சொல்லாமல் பை மாதிரி செருகி வைத்த பாவாடையிலிருந்து ஒரு பெரிய புளியந்தளிர் மலையைப் புல் மேல் குவித்துக் கொண்டே, ''அதையும் இதையும் கூடையிலே வாரி வை அண்ணா. இதோ வர்றேன்'' என்று சொல்லிக் கொண்டே விர்ரென்று பறவை மாதிரி பறந்துவிட்டாள். வெள்ளைப் புறவின் இறக்கை மாதிரி

பின்னால் துடித்துக்கொண் டிருந்தது அவள் தாவணி, அவள் வயல் வரப்பில் ஓடும்போது. எந்த வயல் வரப்பு மேலானாலும் விர்ரென்று ஓடமுடியும் மல்லியால். ஆனால் ஓடமாட்டாள். பறந்து போவாள். தங்கை ஓடிக்கொண் டிருந்தால், கங்கப்பாவின் வயிரெல்லாம் நிறைந்து போய்விடும், கண் மிருதுவாகிவிடும் வெண்ணெய்க் கட்டி மாதிரி.

லட்சுமி புளிய மரத்தில் சாய்ந்துகொண்டு கண்ணை இறுக்கிக் கொண்டு தூரத்தில் பார்க்கிறாள், தென்படும் டிராக்டரையும், தென்படாத ராஜுவையும்.

மல்லியையே பார்த்துக்கொண் டிருந்த கங்கப்பா துள்ளி விழுந்தான். ராமி கீழ்க் கிளையிலிருந்து சறுக்கி, அவன் பக்கத்தில் குதித்தாள். குப்புற விழப்போன அவனைப் பிடித்துக்கொண்டாள். சில்லென்று அவள் கை பட்டவுடனே, ஒரேயடியாக விழுந்து விட்டான் கங்கப்பா. திடீரென்று மூச்சு நின்றுவிட்டது. குலுங்கிக் குலுங்கிச் சிரித்தாள் ராமி.

''நான் என்ன பிசாசுன்னு நினெச்சிட்டியா சின்னையா? அப்படி ஒரேயடியாப் பயந்துட்டியே?'' என்று கேட்டாள் ராமி.

கங்கப்பா கால் தடுமாறி அப்படியே கீழே பொத்தென்று உட்கார்ந்துவிட்டான், அவன் தலைமேல் ராமி மரத்திலிருந்து போட்ட புளியந்தளிர் படுக்கை மேல்.

''எழுந்திருய்யா புளியந் தளிர் துவையலை நீ ஒண்ணும் அரைக்க வேண்டியதில்லே'' என்றாள் ராமி. அவன் மெதுவாக எழுந்து உடம்பில் ஒட்டிக்கொண்ட புளியந் தளிரைத் தட்டிவிட்டுக் கொண்டான். ராமி புளியந் தளிர்களைக் கூடையிலும் கோணியிலும் நிரப்பிக்கொண்டே, கங்கப்பாவைப் பார்த்துக் கண் சிமிட்டினாள், லட்சுமியைக் காட்டியபடி.

''அவ்வளவு வெக்கம் கிக்கம் எதுக்கம்மா லச்சம்மா? போயி ஆசை தீரப் பாத்துக்கக் கூடாதா? சின்ன எஜமான் பட்டணத்திலேருந்து வத்துட்டாரோ இல்லையோ?'' என்று சொன்னாள் ராமி.

''போடி!'' என்றாள் லட்சுமி. முகத்தைச் சுளித்துக்கொண்டே போவது போல் பின்னால் திரும்பினாள். புளியமரத்துக்கு அந்தப் பக்கம் போனதும் நின்றுவிட்டாள், மரத்தின் மேல் சாய்ந்தபடி. கோபத்தில் சிவந்த கன்னத்தில் வெட்க ரோஜா பூத்தது. இறக்கிய இமைக்குக் கீழேயிருந்து, வேண்டாமென்று நினைத்துக் கொண்டே பார்த்தாள்—டிராக்டர் பக்கம், ராஜு பக்கம்.

மல்லி மஞ்சள் தடவினாள், குங்குமம் வைத்தாள் டிராக்டருக்கு. மருதாணி இலை, சாமந்தி, பொன்னரளி சேர்த்துக் கட்டிய பெரிய

மாலையைப் போட்டாள், ரேடியேட்டர் மேல். ஆரத்தி எடுத்துத் தேங்காய் உடைத்தாள்.

''வெற்றி!'' என்று கோஷம் போட்டான் கங்கப்பா.

ராஜு, ராஜா போல ஏறி உட்கார்ந்தான் டிராக்டர் மேல். பித்தானை அழுத்தினான். டுஷ். டுஷ். டு—ர்—ர்—ர்—ர் என்று சத்தம் போட்டது டிராக்டர்.

டிராக்டர் நகர்ந்தது. தட்டு மாதிரியான தகடுகள், களிமண்ணைப் பிளந்து திருப்பிப் போட்டுக் கொண்டிருந்தன. டிராக்டருக்குக் கீழ்ப்படிந்து விட்டது, களிமண். துண்டுத் துண்டாக விழுந்து கொண்டிருந்தது, டிராக்டர் கிழித்த சாலில்

''அம்மாடி!'' என்றாள் ராமி. அதற்குள் வயலின் அடுத்த வரப்புக்குப் போய்ப் பின்னால் திரும்பிக்கொண் டிருந்தது டிராக்டர்.

ராமையா பண்ணையார், ரங்கடு, புன்னையா, பதாலு, மாடுங்க, வேலைக்காரங்க—எல்லாரும் கண்ணை அகல விரித்து ஆச்சரியத்தோடு பார்த்துக்கொண் டிருந்தார்கள்.

''பண்ணையாரு டிராக்டர் பிடிச்சிண்டு வந்துட்டார்டா. இனிமே உங்க வாய்லே மண்ணுதான்'' என்று சொன்னார் கணக்கர் தர்மராஜு. லிங்க்கின் ஒரு முனையைப் பிடித்துக் கொண்டு வரப்பு மேல் நடந்துகொண் டிருந்தார். லிங்க்கின் மறுமுனையைப் பிடித்துக் கொண்டு அவருக்குக் கொஞ்சம் பின்னால் வந்துகொண் டிருந்த லிங்கராஜு—தர்மராஜுவின் மகன்—திடீரென்று நின்றுவிட்டான். டிராக்டரைப் பார்த்து அல்ல, மங்கம்மாவைப் பார்த்து.

தெலுக்குல மங்கம்மாவின் உடம்பு எண்ணெய் பூசி மஞ்சள் தடவினாற்போல இருக்கும், பச்சைப் பசேலென்று பளபளக்கும். நீளக் கண். கொஞ்சம் வளைந்த மூக்கு. சின்ன வாய். புருவத்தை மேலே தூக்கி இமையைச் சுருக்கிக்கொண்டு பார்ப்பாள், மங்கம்மா எப்போதும். மங்கம்மா சிரிக்கமாட்டாள்; எப்போதும் சிரிக்க மாட்டாள். பேசிக்கொண் டிருந்தாலும் கேட்டுக்கொண் டிருந்தாலும் இலேசாகத் தலை ஆடும், ஏதோ இஷ்டமில்லாத வேலையைச் செய்வது போல.

மங்கம்மா குனிந்து உழுத வயலில் நெல் முளைகளைப் பொறுக்கிக் கொண்டிருந்தாள். முழங்காலுக்குப் பின்னால் அழகான குழிகளைப் பார்த்தால், லிங்கையாவுக்கு மூளை கலங்கிவிடும், தர்மராஜுவுக்குங் கூட. மங்கம்மா முன்றானையைப் புரிமணையாகச் சுற்றித் தலையில் வைத்தாள். நெல்முளைக் கூடையைப் புரிமணை மேல் வைத்தாள். ரவிக்கை இல்லாத முதுகில் முதுகெலும்பு, இடுப்புக்குப் பக்கத்தில்

சேலைக் கட்டுக்குள்ளே மறைந்து போவதைப் பார்த்து லிங்கையா மடமடவென்று எச்சிலை விழுங்கினான்.

மங்கம்மா, எதேச்சையாக டிராக்டர் உழுதுகொண் டிருந்த வயல் பக்கம் திரும்பினாள். அவள் நெற்றியில் பொட்டு இருக்க வேண்டிய இடத்தில், பச்சை குத்தியிருக்கும். அதனால் அவள் விதவை என்பது யாருக்கும் நினைவு வராது. மங்கம்மா இருபத்தைந்து வருஷம் வரைக்கும் வளர்ந்து, அதற்கப்புறம் வளர்வதை நிறுத்திவிட்டாள். வளர்ச்சி இறுகிப் போய்விட்டது. கன்னிப் பெண்களின் உடல்வாகு ஒவ்வொரு கணமும் வளர்வது போல இருக்கும். மங்கம்மா உடம்பு வளராது, குறையாது.

அந்தக் காட்சியைப் பார்த்துக் கொண்டு வேறு உலகத்தில் இருந்த தர்மராஜுவுக்கு—'ஹஹ்ஹா' என்று சிரிக்கும் சத்தம் கேட்டது. முன்சீப் ராமையா, சுப்பையா பண்ணையார், அவர் மகன் புன்னையா எல்லாரும் வயிறு வெடிக்கச் சிரித்துக்கொண் டிருந்தார்கள். அந்தச் சிரிப்பு தன்னைப் பற்றித்தான் இருக்கவேண்டுமென்று தர்மராஜுவுக்குப் பெரிய சந்தேகம், தான் மங்கம்மா பக்கம் பார்த்துக்கொண் டிருந்ததனால். தம் கௌரவத்தை மறுபடியும் நிலைக்கச் செய்ய வரப்பு மேலே இருந்த சர்வே கல்லின் பக்கம் உற்றுப் பார்த்தார்.

''லிங்கையா! அந்த வரப்பு முனையிலே, முளை அடிச்சிருக்கே, லிங்க்கெ அங்கே பிடி'' என்று கத்தினார்.

லிங்கையா, மங்கம்மா முதுகிலிருந்து கண்ணைத் திருப்பாமலே லிங்க் முனையை வைத்தான்.

குடி முழுகிப் போய்விட்டதைத் போல முகத்தை வைத்துக் கொண்டார் தர்மராஜு. ''டேய் பதாலு, இங்கே வா'' என்று ஒரு கூச்சல் போட்டார்.

''இந்தக் கல்லெ யாருடா நகத்தினது? எங்க ராமையா அத்தான் வயலுக்குள்ளே வந்திருக்கு, மூணு லிங்க் வரைக்கும்'' என்று கேட்டார் அதிகாரத் தோரணையில்.

''நீங்கதான் நகத்தியிருக்கணும்'' என்று சொன்னான் பதாலு, இரும்பு மாதிரியான மார்த் தசைகளைக் காட்டிக்கொண்டு. தன் எஜமானர்களைத் தவிர வேறு யாரையும் அவன் லட்சியம் பண்ணுவதில்லை.

''என்னடா, அவ்வளவு திமிராப் பேசறே? எல்லாம் உங்க சுப்பையா பண்ணையார் கொடுக்கற ஆதரவு'' என்று சொன்னார் தர்மராஜு.

டிராக்டரிலிருந்து ராஜு கொஞ்சம் கோபமாகக் குதித்தான். காலில் கீறிவிட்டது, டிராக்டர் தகடு. மல்லிக்குத் தலைசுற்றுவது போலாகிவிட்டது, ராஜு காலில் ரத்தத்தைப் பார்த்தவுடனே. முன்பின் பார்க்காமல் சேலை முன்றானையைக் கிழித்து ராஜு காலில் கட்டுக் கட்டினாள். ராஜுவின் கோபம் தணிந்துவிட்டது, மல்லியின் துடிப்பைப் பார்த்தவுடனே. அவளைப் புன்முறுவலோடு பார்த்தான். பிறகு தர்மராஜு பக்கம் திரும்பிச் சொன்னான் :

''என்னையா, நாரத மகரிஷி! அந்தக் கல்லு எங்கேயிருந்தா உனக்கென்ன? நாலு லிங்க்கு எங்க நிலத்திலே இருந்தாலும், மாமா நிலத்திலே இருந்தாலும், எங்களுக்குள்ளே தகராறு இல்லே. நடுவுலே உனக்கேன் இந்தக் கவலை? காலையிலே எழுந்திரிச்சதலே ருந்து வம்பு வளக்கறதுதானா உனக்கு வேலை?''

''ஆஹா! உம்ம ரெண்டு குடும்பமும் இவ்வளவு அந்நியோந்நியமா இருக்கறதனாலேதான் ஊரு சொர்க்கமா இருக்கு'' என்று சொன்னார் தர்மராஜு.

இந்த விஷயமாகத் தர்மராஜு ஒரு பெரிய சொற்பொழிவே தயாரித்துவிட்டார். ஆனால் அதற்குள், அவர் கையிலிருந்த லிங்க்கின் முனை கீழே விழுந்துவிட்டது. அது தானாகவே வரப்பு மேல் போக ஆரம்பித்து விட்டது. இந்த உயிரில்லாத பொருள் நகர்ந்து போவதற்குக் காரணம் என்ன என்று தலை தூக்கிப் பார்த்தார் தர்மராஜு. லிங்கராஜு, லிங்க்கின் மறுமுனை தன் கையில் இருப்பதைக்கூட மறந்து, மயக்கத்தில் நடந்துகொண் டிருந்தான். அவனுக்கு முன்னடி கொஞ்ச தூரத்தில் மங்கம்மா நெல் முளைக் கூடையைத் தலையில் வைத்துக்கொண்டு நடந்துகொண் டிருந்தாள். லிங்கராஜுவின் கண் இரண்டும், மங்கம்மா முதுகு நடுவிலிருந்து முதுகெலும்பு வளைவில் லயித்திருந்தன.

''டேய் லிங்கையா'' என்று அழைத்துக் கொண்டே அவன் பின்னால் நடக்கத் தொடங்கினார் தர்மராஜு. பெரிய மனிதர்களும், குடியானவர்களும் கொல்லென்று சிரித்ததைப் பற்றியும் தர்மராஜு கவலைப்படவில்லை. ஏனென்றால், அவர் கண்கள் போதையில் பாதி மூடிக்கொண்டன. தலைமேலுள்ள கூடையை இடது கையால் பிடித்துக்கொண்டாள் மங்கம்மா. அதனால் இடது பக்கத்து மார்வளைவு கொஞ்சம் மேலே தூக்கிக் கொண்டது.

''டேய், பொழுது எவ்வளவு ஏறிப்போச்சி, பார்த்தீங்களாடா? மத்தியானம் ஆகப்போவுது. ஒரு வயலு கூட முழுசா உழுத பாடில்லே. வேலையை ஆரம்பியுங்கடா!'' என்று அதட்டினார்

முன்சீப் ராமையா. வேலைக்காரர்கள் மறுபடியும் ஏர்களைப் பிடித்தார்கள்.

"மாப்பிள்ளே!" என்று அழைத்தார் ராமையா, ராஜுவின் பக்கம் திரும்பி. "பட்டணத்துக்குப் போறே. எங்களுக்குக்கூட ஒரு டிராக்டர் வாங்கிவரக் கூடாதா?"

"எங்களுக்கு உங்களுக்கு, இதென்ன பேச்சு மாமா? ஊரெல்லாம் உழறதுக்கு இந்த ஒரு டிராக்டர் போதும். உங்க ரங்கன்தான் இருக்கிறானே; ராத்திரி பகலு ஊர் சுத்தறதுக்குப் பதிலா ஒரு தடவை டிராக்டர்லெ ஏறி வயலே உழச் சொல்லுங்க. நான் கத்துக் குடுக்கறேன்" என்று சொன்னான் ராஜு.

"ஏரோப்ளேனே ஓட்றேன். இந்த டிராக்டர் ஒரு கணக்கா? நீ ஒண்ணும் கத்துக் குடுக்க வேணும்" என்று சொல்லிக்கொண்டு ரங்கன் டிராக்டரைப் பார்த்து நடக்க ஆரம்பித்தான்.

"டேய், உனக்குப் புண்ணியமா இருக்கட்டும். இன்னைக்கே அதைக் கெடுத்துடாதே" என்று சொன்னார் வெங்கன்னா; ராமையா பண்ணையாரின் மகன்.

"அண்ணன் வேணும்னு சொல்லிட்டாரு, அதனாலெ விட்டுடறேன்" என்று சொல்லி நின்றுவிட்டான் ரங்கன். தன் சவாலை நிறைவேற்ற வேண்டிய தேவை இல்லாமற் போய்விட்டது. உண்மையில் டிராக்டரின் தலைகால் தெரியாது ரங்கனுக்கு.

ராமையா பண்ணையார் வீட்டில் ரங்கனுக்கு ஒரு தனி இடம். அவன் என்ன செய்தாலும், செய்யாமற் போனாலும் (உபயோகமான வேலை எதுவும் அவன் செய்ய மாட்டான்) அவனை யாரும் எதுவும் கேட்க மாட்டார்கள். கேட்பதற்கு வழியில்லை. அப்படியே கேட்டுவிட்டால் ராமையாவின் மனைவி சூராலு ஒப்பாரி வைக்க ஆரம்பித்து விடுவாள். ஏனென்று கேட்டால், சூராலுவின் தங்கை நாகம்மா சாகும்போது பத்து நாள் பச்சைக் குழந்தை ரங்கனை, சூராலு கையில் ஒப்படைத்தாள். ரங்கனின் அப்பா, திருப்பதையா வாரம் முடிவதற்குள் இரண்டாம் கல்யாணம் செய்து கொண்டார். அதனால் ரங்கன் ராமையா வீட்டுக் குழந்தை மாதிரியே வளர்ந்தான். ராமையா சொந்தக் குழந்தைகளைவிடச் செல்லமாக வளர்த்து விட்டார் ரங்கனை. அவர் சொந்த மகன் வெங்கன்னா இருபத்தைந்து வயது தாண்டி ஒரு குடும்பஸ்தன் ஆனபிறகுகூட, அப்பா முன்னால் இன்றைவரைக்கும் சுருட்டு பற்றவைக்க மாட்டான். ரங்கனுக்கு அம்மா செத்து விட்டதால் வந்து சேர்ந்த உரிமைகள் காரணமாக ஐந்து வயதிலேயே ஹநுமந்து செட்டியார் கடையில் கடனுக்குப் பீடி

வாங்கி ராமையா முன்னலேயே பிடிக்க ஆரம்பித்தான். பதினறு வயசு முடிவதற்கு முன்பே ஏரிகரையில் நின்றுகொண்டு வயசுக்கு வந்த பெண்களைப் பார்த்துச் சீட்டியடிப்பதற்குப் பழகிக் கொண்டான். ராமையாவிடம் யாரும் சென்று இதைப் பற்றி யெல்லாம் புகார் செய்யமாட்டார்கள். இருந்தாலும் ராமையா வுக்கு இதெல்லாம் தெரியும். ராமையாவுக்குக்கூட ரங்கன் மேல் தனி வகை அன்பு. ரங்கன் பேசிக் கொண்டிருந்தால் நேரம் போவதே தெரியாது. ரங்கன் எவ்வளவுதான் ரௌடியாக இருந்தாலும் கெட்டவன் அல்ல என்பது எல்லாருக்கும் தெரியும். தனக்கு அம்மா இல்லையென்றும், அப்பா இருந்தும் இல்லாத மாதிரிதான் என்றும் சின்ன வயதிலிருந்தே தெரியும் ரங்கனுக்கு. தனக்கு உண்மையான அப்பா அம்மா, ராமையாவும் சூராலுவுந் தான் என்பதும் தெரியும். அவர்களுக்காக உயிரையும் கொடுத்து விடுவான் ரங்கன்.

தூரத்தில் ராமி வயல் வரப்பில் புல் அறுத்துக் கொண்டிருந் தாள். ரங்கன் அந்தப் பக்கமாக நகர்ந்தான். ராஜு டிராக்டர் மேல் ஏறினன்.

“இன்னைக்கிப் போதும்டா. ஏருதான் உழத் தொடங்கி யாச்சே” என்று சொன்னர் சுப்பையா. ராஜு டிராக்டரை ஸ்டார்ட் பண்ணவில்லை.

சுப்பையாவுக்கும் ராமையாவுக்கும் இந்த டிராக்டர் விஷயத்தில் கொஞ்சம் சந்தேகம், கொஞ்சம் வெறுப்பு. தாத்தா காலத்தி லிருந்து பழக்கமான தங்கம் மாதிரி ஏர் இருக்கும்போது, இந்த டிராக்டர் எழவு எதுக்கு? அது கெட்டுப் போச்சின்ன? மாட்டுக்கு நோவு வந்துதுன்ன இன்னொரு மாடு இருக்கிறது. ஏர்க்கொழு கெட்டுப் போச்சின்ன கொல்லன் இருக்கிருன். டிராக்டர் விஷயம் நமக்குத் தெரியாத விவகாரம். டிராக்டரையே நம்பிக்கிட்டு மாட் டையும் ஏரையும் அலட்சியம் பண்ணினல், விவசாயம் நின்று போவும், முதலுக்கே மோசம். இன்னொரு சூட்சமமான காரண மும் இருக்கிறது. எவ்வளவு முரட்டு மாடுன்னலும் மனுஷனுக்கு அடங்குந்தான். ஏர் பிடிக்கிற விவசாயத்தில் விவசாயிதான் ராஜா. டிராக்டர் விவசாயத்தில் விவசாயி அந்தக் கௌர வத்தைக் காப்பாற்றிக் கொள்ள முடியாது. இயந்திரம் மனிதனை அலட்சியம் செய்யும். அவன் ஒருவன் இருப்பதாகவே லட்சியம் செய்யாது. அதற்கு மனசு, நினைப்பு இதெல்லாம் கிடையாது. ‘அது என்னுடையது’ என்று கர்வத்தோடு சொல்லிக் கொள்ள வேண்டும் என்று தோன்றுது, டிராக்டரைப் பார்த்தால். எவ்வளவு

தான் அடங்கி வேலை செய்தாலும் டிராக்டர் மனிதனுக்கு அடிமை யாகாது. மனிதன் இயந்திரத்துக்கு ஒருவேளை அடிமையாகி விடலாம். தலைமுறை தலைமுறையாக வந்து கொண்டிருந்த பண்ணை விவசாயம் இந்த டிராக்டரினால் ஒன்றுக்கும் உதவாமல் போய்விடுமோ என்று பெரிய பண்ணையார்கள் இருவருக்கும் சந்தேகம். ராமையா பண்ணையார் முடியாதென்று கர்ஜித்தும் வெங்கன்னா எதிர்த்துப் பேச முடியாமற் போய்விட்டார். ராஜு டிராக்டர் வாங்க வேண்டுமென்று பிடிவாதம் பிடித்ததும் சுப்பையா வேண்டாமென்று அவ்வளவு சத்தம் போட முடியாமல் போய்விட்டார்.

டிராக்டர் சரியாக நடு வயலில் வந்து நின்றதும் ராஜுவுக்குச் சந்தோஷம், திருப்தி. வெங்கன்னா மனத்தில் உள்ளுக்குள் கொஞ் சம் பொறாமை தலையெடுத்தது.

டிராக்டரென்றால் அவ்வளவு இஷ்டமில்லாமல் போனாலும், ராமையா பண்ணையாரைவிடத் தன் பெருமை எந்த வகையிலோ வளர்ந்துவிட்டதாகப் பட்டது சுப்பையா பண்ணையாருக்கு.

டிராக்டர் பக்கத்தில் நின்ற ராஜுவின் பார்வை, லட்சுமியைத் தேடிக் கண்டுபிடித்து விட்டது. அவள் முகம் சட்டென்று சிவந்து விட்டது. புளிய மரத்து மறைவில் ஒளித்துக்கொண்டாள், மிக மதிப்புள்ள தன் வெட்கத்தை யெல்லாம். ஆனால் ராஜு கண்ணுக்குத் தெரிந்துவிட்டது அந்த வெட்கம். தெரிய வேண்டு மென்று லட்சுமி மனத்தில் சொல்ல முடியாத ஆர்வம். முழுதும் தெரிந்துவிட்டால் வெட்கம் மேலும் சிவந்து விடுமே என்ற பயம். அதனால் அலட்சியத்தை வரவழைத்துக் கொண்டு ஏரியை நோக்கி நடக்கத் தொடங்கினாள் லட்சுமி. தேவையில்லாத உற்சாகத்தோடு அவள் கை ஓர் ஈச்சங் கிளையை ஒடித்தது. அதைக் கத்தி போல வீசிக்கொண்டு, அந்தப் பக்கமும் இந்தப் பக்கமும் உயரமாக வளர்ந்த நெட்டிப் புதர்களின் தலைகளை வெட்டிக்கொண்டே நடந்தாள் லட்சுமி.

லட்சுமி மறைந்துங்கூட அவள் வெட்கம் சிவப்பாக வானம் வரையில் பரவிவிட்டது. ராஜு கண்ணில் ரோஜாப்பூ பூத்தது. புளிய மரத்தின் அடி அதன் பக்கத்தில் எட்டி எட்டிப் பார்க்கும். மிக மென்மையான அந்தி மந்தாரையின் இளஞ்சிவப்பு கண்ணை மூடிக் கொண்டாலும் தென்பட்டது ராஜுவுக்கு. பக்கத்தில் உழுது கொண்டிருந்த மாடுகளை உற்சாகத்தோடு அதட்டினான் ராஜு.

நெட்டிப் புதர்களுக்கு நடுவில் புல்வெளி ஓரமாக உட் கார்ந்தாள் லட்சுமி, காலை ஏரியில் விட்டுவிட்டு. சுற்றியும்

நெட்டிப் புதர்கள் வளர்ந்து மறைவாயிருந்தது அந்த இடம். பரந்த உலகத்தில் அங்கே தன்னந்தனியாக உட்கார்ந்து கொள்ளலாம். பக்கத்திலிருந்த நெட்டிப் புதர்களில் அரும்பு கட்டியிருந்தது. இனிமேல் அந்த அரும்புகளிலிருந்து வெள்ளேப்பூ பூக்கும். ஒரு நெட்டி அரும்பைக் காம்போடு ஒடித்தாள் லட்சுமி. காம்பு முனையைப் பிடித்துக்கொண்டு தண்ணீர் மேல் அந்த அரும்பால் எழுதினுள். தண்ணீரில் விரிந்து கிடந்த வானத்தின் படத்தைக் கெடுத்துவிட்டது அரும்பு. அரும்பின் அருகிலிருந்து சின்ன அலைகள் கிளம்பி நீல வானத்தை, வெள்ளை மேகங்களைத் தாறுமாருகச் சுமந்து கொண்டிருந்தன. இருந்த இடத்திலேயே மேலே தூக்கிக் கீழே போட்டுக் கொண்டிருந்தன. வானத்தை-மேகங்களைத் தாங்கிக்கொண்டு மெதுவாகப் போய்க்கொண் டிருந்தன. குளிர்ச்சியாகவும், அமைதியாகவும் மேகங்கள், அலைகள் மேலே ஊஞ்சலாடிக் கொண்டிருந்தன. மீன்குட்டி ஒன்று லட்சுமியின் பெருவிரலைச் சோதித்துப் பார்த்துவிட்டுப் போய்விட்டது. லட்சுமி உடம்பு சிலிர்த்தது, அது தொட்டதனுல். நெட்டிக் காம்பைத் தண்ணீரில் விட்டுவிட்டு, புல்லின் மேல் மல்லாந்து படுத்துக்கொண்டாள் லட்சுமி, காலைத் தண்ணீரில் ஆட்டிக்கொண்டே. காலின் மேல் சேலைக்கரை நனைந்து கனமாகக் காலில் ஒட்டிக் கொண்ட விஷயம் அவளுக்குத் தெரியாது. மறுபடியும் மீன்குட்டி வந்து தன் காலைச் சோதித்துப் பார்க்க வேண்டுமென்று தீராத ஆசை லட்சுமிக்கு. அது தொட்டதை நினைத்துப் பார்த்துக் கொண்டே லட்சுமி வானத்தைப் பார்க்காமல் பார்த்தாள்.

வானமளவு தூரத்திலிருந்து, ஏரிகரை மேல் எதிர்பாராமல் திடீரென்று மூன்று குரல்கள் அருகில் கேட்டன. லட்சுமி திடுக்கிட்டு எழுந்து உட்காந்தாள். அவள் நெஞ்சு உடம்பு எல்லாம் அடித்துக் கொண்டது. நெட்டிப் புதர்த் திரைக்கு அந்தப் பக்கம், ஒரு கஜத் தூரத்தில் இருந்தான் ராஜு. தன்னைப் பார்த்துவிட்டால் வேறு வினையே வேண்டாம்! பார்க்காமல் போய்விட்டால் இந்த இதயத் துடிப்பெல்லாம் வீண். 'அவா அங்கே வருவாருன்னு தெரிஞ்சுதான் நெட்டிப் புதர் மறைவிலே ஒளிஞ்சிகிட்டதா அவர் நினைச்சிட்டா? முதல்லே ஒண்ணும் நினைக்காமலே இங்கே உக்காரப் போயி—அவர் தன்னைப் பாக்காயலே போயிட்டா? ஏரி அவங்களது ஒண்ணும் இல்லே இல்லியா?'

ஏரிகரைதான் அவர்கள் நிலத்துக்கும் இவர்கள் நிலத்துக்கும் எல்லை. தங்கள் நிலத்தில்தான் இருந்தாள் லட்சுமி. அத்துடன் தினந்தான் இங்கே வந்து உட்காருவது வழக்கம்.

'யாராவது வந்து பாக்கப் போருங்கன்னு இல்லே, பாக்க மாட்டாங்கன்னும் இல்லே. பின்னே ஏன் வர்ரு இங்கே, இதே இடத்துக்கு? ராஜுக்காக இல்லியா? இல்லே. தன் விருப்பம் அவ்வளவுதான். திடீர்னு ராஜு தன்னைப் பாத்துட்டுப் பேச்சுக் குடுத்தா? வெக்கத்திலே செத்துப் போயிட வேண்டியது தான்.' ஏழெட்டு வருஷத்துக்கு முன்னல் பனங்காய்த் தகராறில் அவர்கிட்டே சண்டை போட்டிருந்தாள். அதுக்கப்புறம் என்றைக் கும் பேசவே இல்லே. ஒரு தடவை அம்மன் கோயிலுக்குள் நுழையும் போது உள்ளேயிருந்து வந்து கொண்டிருந்த அவர் மேல் இடித்துக் கொள்ள இருந்தாள். அவர் சிரித்துக் கொண்டே நகர்ந்து போய் விட்டார். வெட்கத்தில் அடியெடுத்து வைக்க முடியாமல் போய் விட்டது அவளுக்கு.

''அம்மன்கிட்டே என்ன கேக்கப் போறே?'' என்று கேட்டான் ராஜு சிரித்துக்கொண்டே.

'நீ என்ன கேட்டே?' என்று கேட்க வேண்டுமென்று எண்ணம் வந்தது. ஐயோ! கேக்கறதாவது! விர்ரென்று உள்ளே பார்த்து ஓட்டம் பிடித்தாள்.

கணுச்சாரி* கண்கள் மென்மையாகப் பார்க்கும், குத்தாது, தாலாட்டும். அந்தக் கண்களுக்கு எல்லாம் தெரியும். தெரியும் என்பதைப் புன்முறுவலால் சொல்லிவிட்டுப் பூத்தட்டை வாங்கிக் கொண்டார் பூசாரி. தன் மனத்தில் இருக்கும் வேண்டுதலே அம்ம னிடம் சொல்லி, அம்மனிடம் வரம் கேட்டார் கணுச்சாரி. அந்த விஷயம் லட்சுமிக்குத் தெரியும்.

நெட்டிப் புதருக்கு அந்தப் பக்கத்தில் ராஜு மிக உற்சாகத் துடன் சொல்லிக் கொண்டிருந்தான்: ''இந்த விளேச்சல் முடி யட்டும்டா. இந்த வரப்பெல்லாம் உழுது போட்டுட்டு நிலத்தெ யெல்லாம் ஒண்ணு சேத்துடலாம்.''

''அப்பாடா! ஒண்ணு சேத்துட்டா, ராமையா நிலம் நம்ம நிலம்னு எப்படித் தெரியும்?'' என்று கேட்டான் கங்கப்பா.

''காகிதத்திலே இருக்குதில்லியா யார் நிலம் எவ்வளவுன்னு! ஒண்ணைச் சேர்த்து உழுவோம், ஒண்ணைப் பயிரிடுவோம், வய லோட அளவு பிரகாரம் பிரிச்சிக்கலாம் விளேச்சலெ. அந்தத் தேசத்துலெ எல்லாம் சின்ன வயல்களே இருக்காதாம். ஆயிரம் ஏக்கராவது இருந்தாலொழிய டிராக்டர் விவசாயத்திலெ லாபம் இருக்காதாம்.''

---

* பூசாரி.

"அப்படீன்னு ஊரெல்லாம் ஒண்ணுச் சேத்துடலாமே" என்றான் கங்கப்பா, கண்ணை இன்னும் விரித்துக் கொண்டே. திடீரென்று நெட்டிப் புதர் விலகியது. புதரின் நுனிகள் அலைகள் மாதிரி அவசரமாக அசைந்தன. அவற்றின் நடுவில் மின்னல் மாதிரி துடித்து விட்டாள் லட்சுமி. பயம், நடுக்கம், வெட்கம்! மனம், காலுக்கு மான் காலின் வேகத்தைக் கொடுத்தது. பயந்துபோய்க் குதித்தான் கங்கப்பா. மின்னலை ராஜு அடையாளம் கண்டுபிடித்தான். ராஜுவின் பார்வை லட்சுமியின் காலுக்குக் குறுக்கே வந்ததோ என்னவோ? இல்லையென்றால் ராமி குவித்து வைத்த புல் கூடை குறுக்கே நின்றதோ? திடீரென்று லட்சுமி பொதேரென்று விழுந்தாள். ராஜுவின் புன்முறுவல், ராமியின் எக்காளச் சிரிப்பு, வெள்ளம் மாதிரி பொங்கி வந்த தன் வெட்கம் எல்லாமாகச் சேர்ந்து லட்சுமி மூச்சுவிட முடியாமல் திணறிவிட்டாள். கைகால் ஓடவில்லை. அப்படியே புல் தரையில், கறுப்புக் களிமண்ணில் கரைந்து போய் மாயமாய்விட வேண்டுமென்று தோன்றியது லட்சுமிக்கு.

"என்ன சின்னப் பண்ணையாருங்களே? அப்படியே நின்னுக்கினு வேடிக்கை பாத்துக்கினுகீறீங்களே இன்னு? ஒரு கையெக் குடுத்துத் தூக்குங்க" என்றாள் வாயாடி ராமி.

"சீ, போ. வெக்கம் கிக்கம் ஒண்ணுமில்லியா, என்ன?" என்று சொன்னாள் லட்சுமி. பின்னால் திரும்பிப் பார்ப்பதற்குத் தயக்கம். ராஜு வருகிறாரோ என்னவோ? பதற்றத்தோடு எழுந்திருக்க முயன்றாள். கால் சுளுக்கிக் கொண்டது, அப்போது தான் லட்சுமிக்குத் தெரிந்தது. வலியிலேகூடக் கத்த முடியவில்லை, ராஜு பின்னால் இருந்ததனால். விடுவிடென்று வந்தான் ராஜு. இன்னொரு பக்கத்திலிருந்து புறு மாதிரி பறந்து வந்தாள் மல்லி. இரண்டு பேரும் ஆளுக்கொரு கையைப் பிடித்துத் தூக்கி நிற்க வைத்தார்கள். ராஜு கைப் பட்டதும் பரவசமாகித் துடித்து விட்டது லட்சுமியின் உடம்பு.

"வேண்டாம். நடக்க முடியும், விட்டுடுங்க" என்று சொன்னாள் லட்சுமி.

"பரவாயில்லே, வா போகலாம்" என்றான் ராஜு.

"நீ விட்டுடு அத்தான். நான் கூட்டிக்கிட்டுப் போறேன். ஆவட்டும்" என்றாள் மல்லி.

"அய்யே! அவர் வுட்டுட்டா அப்புறம் எப்பிடி? முதல்லெ கால் வலியே அதுக்குத்தானே!" என்றாள் ராமி.

"வாயை மூடுடி!" என்றாள் மல்லி.

ராஜு தோளை விடவில்லை. அவர் விட்டுட்டா நல்லா இருக்கும். விடலேன்னு இன்னும் நல்லா இருக்கும். மல்லி மேலே அதிக மாகச் சாய்ந்தாள் லட்சுமி. கல்யாண பம்ப் வரைக்கும் கோல் கொடுத்து நடத்திக் கூட்டிக்கொண்டு போனான் ராஜு. யாரும் இல்லையென்றால், இரண்டு கையால் தூக்கி வண்டியில் உட்கார வைத்திருப்பான். யாரும் இல்லையென்றால், அவன் மார்பில் லட்சுமியும் சாய்ந்திருப்பாள். அதாவது ராஜுகூட இல்லை யென்றால்! அதாவது, கனவில் தன் கால் சுளுக்கிக் கொண்டிருந் தால்…அவர் வந்து தன்னை இரண்டு கையிலும் தூக்கிக் கொண் டால்…வண்டியில் ஏறும்வரையில் லட்சுமியின் கனவு கலையவில்லை. வண்டியில் ஏறின பிறகும் தொடர்ந்தது.

''முப்பத்தாறு ரூபா!'' என்றார் தர்மராஜு.

''இருவத்தேழுதானமே'' என்றான் குடியானவன்; ''பதினலு வரி, பதிமூணு தண்ணிக் கட்டணம்.''

''இன்னும் என்ன? கணக்கு நன்னு வந்துட்டுது. மூணாவது சாகு படிக்கான தண்ணிக் கட்டணம் ஒம்பது ரூபா உங்கப்பன் வந்து கட்டுவானா?''

''அதில்லே கணக்கையா, மூணாவது சாகுபடி பண்ணினா தண்ணிக் கட்டணம் கட்ட வேண்டியதில்லேன்னு சர்க்கார் பேப்பர்லே போட்டாங்களாமே! அதோட காவாலே தண்ணி எங்கே வருது? ஏரித் தண்ணிலேதானே மூணாவது சாகுபடியே நான் செய்யறது?''

''உங்களுக்கெல்லாம் திமிர் ரொம்ப ஏறிட்டுதுடா. வெள்ளைக் காரன் இருந்தவரைக்கும் நீங்க வாயைத் திறக்க முடிஞ்சுதோ? சுதந்தரம் வந்தாலும் வந்தது, தேசமே குட்டிச் சுவராப் போயிட்டுது. ஏரித் தண்ணிலே பயிரு பண்ணினாலும். ஏரிக்கு மட்டும் வந்தது காவாத் தண்ணி இல்லாமெ வேறே என்னவாம்?''

''நீங்க என்னமோ சொல்றீங்க. நான் இப்போதான் முன் சீப்பைக் கேட்டுட்டு வந்தேன். மூணாவது சாகுபடி பண்ணினா கட்ட வேண்டியதில்லேன்னாரு.'

''சரிதான். கேட்டுன்டே இல்லே. உனக்கு இஷ்டம் வந்த வரைக்கும் கட்டு. நாளைக்கு ஜமாபந்திலே ஏதாவது தகராறு வந்துதுன்னா அவரையே கவனிக்கச் சொல்றேன். ஊம், எடு பணத்தை. எனக்குத் தலைக்கு மேலே வேலை இருக்கு.''

தர்மராஜுவுக்கு இருட்டின பிறகு 'தலைக்கு மேலே வேலை' அதிகம். 'தலைக்கு மேலே வேலை'க்குத் தடை வந்தா அவருக்கு

எரிச்சல் வரும். குடியானவனிடம் பணம் வாங்கிக் கொண்டு எழுந்திருக்கும்போது லிங்கராஜு வந்தான்.

''எனக்கொரு அம்பது வேணும்'' என்றான்.

''அம்பது எதுக்கு? எதுக்கடா? திமிர் எல்லாத்தையும் ஏறக் கட்டிட்டு ஃபீல்ட் புக்கெ வாங்கிண்டு பணத்தைக் கட்டித் தொலை. ஒரு வாரந்தான் இருக்கு கணக்கர் பரீட்சைக்கு. இந்தத் தடவை யும் போயிட்டுதுன்னா அப்பறம் இந்தக் கணக்கன் வேலைகூட இருக்காது.''

''எனக்கொரு அம்பது ரூபா வேணும்.''

''தம்பிடி கொடுக்கமாட்டேன். ரூபா எங்கேயாவது மரத்திலே காய்க்குதுன்னு நினெச்சியா? நட நட, உன் ரூமுக்கு.''

''எனக்கொரு அம்பது ...''

'தலைக்கு மேலே வேலை'யிலே இருக்கும் கணக்கருக்குக் கோபம் தாங்க முடியவில்லை. மகனின் இரண்டு தோளையும் பிடித்து, அறைக்குள்ளே தள்ளிக்கொண்டு போய், கதவை மூடி வெளியே தாழ்ப்பாள் போட்டார். லிங்கையாவுக்கு இது தினசரிப் பழக்க மாய் விட்டதால் அதிகமாகக் கலாட்டா செய்யவில்லை. ஆனால் அப்பா தாழ்ப்பாள் போடுவதற்கு முன் ஒரு வார்த்தை மட்டும் சொன்னான்: ''சாகறத்துக்கு முன்னால் அம்மாவை இன்ஷூர் பண்ணி ரெண்டாயிரத்தைந்நூறு வாங்கிண்டியே. அம்பது குடுக்கச் சொன்னா என்னமோ ரொம்பப் பிகு பண்றியே?''

''டேய் கட்டேலே போறவனே, இந்த மாதிரி பேசிண்டிருந்தே, தோலெ உரிச்சிடுவேன். செத்துச் சுண்ணாம்பாயி சம்பாதிச்சிக் கொட்டினா தின்னுட்டுச் சிவனேன்னு கிடக்கறதுக்கில்லாமெ கண்டதெ எல்லாமா உளர்றே?''

ஆனால் தர்மராஜு ஒரு நாளும் லிங்கராஜைக் கைநீட்டி அடித்த தில்லை. லிங்கராஜுவும் அப்பாவை அதிகமாக அதட்டியதில்லை. தர்மராஜுவுக்குத் 'தலைக்குமேலே வேலை' மங்கி வீட்டில் என்பது லிங்கராஜுவுக்குத் தெரியும். லிங்கராஜுவுக்கு அங்கே போக வேண்டும்போல இருப்பது தர்மராஜுவுக்குத் தெரியும். ஆனால் இதுவரையில் அப்பா பிள்ளை நடுவில் மங்கி விஷயம் அவ்வளவு வெளிப்படையாகத் தலையெடுக்கவில்லை. மகன் ஐம்பது கேட்டது மங்கிக்காக என்பது தர்மராஜுவுக்குத் தெரியும். அவன் எவ் வளவு கேட்டாலும் அவ்வளவும் கொடுத்து, தன் மகன் மங்கிக்கு அடிமையாய் விடுவது அவருக்குக் கொஞ்சங்கூட இஷ்டமில்லை.

லிங்கையாவுக்கு மங்கி மேல் மோகம் இருப்பது முறை அல்ல, விவேகமானதல்ல என்பது தர்மராஜுவின் திடமான நம்பிக்கை.

மங்கியைத் தவிர வேறொருத்தி மேல் லிங்கையா ஆசை வைத்தால் தர்மராஜுவுக்கு அவ்வளவாகத் தடை இருக்காது. அவனுக்கு வயது குறைவு, மங்கி சரியான கள்ளி. வேண்டுமென்றே லிங்கையாவைக் கிளப்பி விட்டுவிட்டு வேடிக்கை பார்ப்பாள். எதற்கு? பணம் பிடுங்கத்தான். அதனால் லிங்கையாவுக்கு உடனே கல்யாணத்தை முடிக்க வேண்டுமென்று நினைத்தார் தர்மராஜு.

கொஞ்சம் தீவிரமாகவே முயற்சி செய்தார். இருந்தாலும் ஒரு நல்ல சம்பந்தம் அந்தத் 'திருட்டுப் பய' லச்சன்ன சாஸ்திரி மூலமாகக் கைநழுவிப் போய்விட்டது. தன் மனைவியை இன்ஷியூர் செய்து பணத்துக்காகக் கொன்றுவிட்டதாகப் பெண் வீட்டாரிடம் சொல்லிவைத்தான். அவர்களுக்காவது அறிவு இருக்க வேண்டாம்? மனைவி இனி எப்படியும் பிழைக்க மாட்டாளென்று தெரிந்த பிறகு ஒரு டாக்டருக்குக் கொஞ்சம் லஞ்சம் கொடுத்து அவளை இன்ஷ்யூர் செய்துவைத்தார்; அவ்வளவு தான்! என்ன தப்பு இதில்? இருந்தாலும் மகனும் அதே வார்த்தையைச் சொன்னவுடனே கோபம் மூக்குக்கு மேலே வந்தது. கதவுக்கு வெளியே தாழ்ப்பாள் போட்டுவிட்டு விறுவிறுவென்று போய்விட்டார்.

செக்கு மேலே உட்கார்ந்திருந்த மங்கி தர்மராஜுவைப் பார்த்தாள். விஷமப் பார்வையோடு உள்ளே போனாள்.

மங்கியின் வீடு சின்ன ஓட்டு வீடு. தெரு வாசற்படி கிடையாது, அந்த வீட்டுக்கு. தெருப் பக்கம் ஜன்னல்கள் தான் உண்டு. எப்போதும் மூடியிருக்கும் ஜன்னல்கள். வாசற்படி, பக்கத்துப் புழக்கடையைப் பார்த்து இருக்கும். சுற்றுச் சுவரை ஒட்டி ஒரு பெரிய கொட்டகை. அந்தக் கொட்டகையில் செக்கு. தெருவிலிருந்து வாசல் உண்டு, அந்தக் கொட்டகைக்கு. வாசல் என்றால் கதவிருக்கும் வாசலல்ல. சுற்றுச் சுவரில் ஒரு பெரிய பொந்து. பெரிய பொந்து எதற்கென்றால் ஐந்தாறு அடி சுற்றளவு கொண்ட கூடைகள் வரவேண்டும், வெளியே போகவேண்டும்—எள் கழுவும் கூடைகள். மங்கியின் வீட்டுக்குப் போக வேண்டுமென்றால் அந்தப் பொந்தின் வழியாகக் கொட்டகைக்குள் வந்து அங்கிருந்து வீட்டுக்குள் போகவேண்டும். இந்த வீட்டுக்கு ஒரு புழக்கடைக் கதவு உண்டு. ஆனால் புழக்கடைக்கு நேராகத் தெருவிலிருந்து வழியில்லை.

தர்மராஜு கொட்டகைக்குள் வந்தபோது செக்கு மாடு தூங்கி வழிந்துகொண் டிருந்தது, பின்னங்கால் ஒன்றைத் தளர்ச்சியாக நிலத்தில் பதியவைத்தபடி. தர்மராஜு ஒதுக்கலாக மூடியிருந்த வீட்டுக் கதவு பக்கம் பார்த்தான். அதன் மேல் செதுக்கிய மரத் தாழ்ப்பாள், தினம் எண்ணெய்க் கை துடைப்பதால் இருட்டில் கறுப்பாய் மினுமினுத்தது. எண்ணெய் கசியும் பிண்ணுக்குத் துண்டுகள் செக்கின் மேல் பரவிக் கிடந்தன. அதில் சிறிய துண்டு ஒன்றை உடைத்து ஆசையோடு மென்ருர் தர்மராஜு. மெது வாகப் பூனைபோல் கதவருகில் போனுர். மெள்ளத் தள்ளினுர். நடையில் ஆள் சந்தடி இல்லை. படுக்கை யறைக் கதவைத் தள்ளி ஞர்.

''அய்யோ'' என்ருள் மங்கி, சேலையைக் கொசுவிக்கொண்டே.

''நான்தான்'' என்ருர் தர்மராஜு, அப்படியே அவளை அணைத்துக் கொண்டபடி.

''அடே இருங்க. மூணு டின்னு எண்ணெ ஆட்டணும். காத்தாலெ குடுக்கணும்.''

''உன் மச்சினன் இருக்கானில்லே.''

''எள்ளு களுவ வேணும்? ஏரிக்குப் போயிருக்கருன்.''

''செத்தெ நேரம் ரெஸ்டு எடுக்கட்டும் செக்கு!'' என்ருர் தர்ம ராஜு அவளை விடாமலே.

''அடே விடுங்க.'' சொல்லிக்கொண்டே இருந்தாளே தவிர, ஒரேயடியாக விடுவித்துக் கொள்ள அவள் அதிகமாக முயற்சி செய்யவில்லை.

''அம்மா, மங்கம்மா!'' என்ற குரல் கேட்டது கொட்டகை யிலிருந்து.

''கணுச்சாரி'' என்ருள் மெதுவாக மங்கி.

''நேரங் கெட்ட நேரத்திலெ வந்தான் கழுதை மவன்'' என்ருர் தர்மராஜு.

''கடவுள் மாதிரி மனுஷன். அவரெப் போய்த் திட்னீங்கன்னு வாய் புளுத்துப் போவும்'' என்று சொல்லிக்கொண்டே ஒய்யார மாக விடுவித்துக்கொண்டு போனுள் மங்கி.

''என்ன சித்தப்பா, அம்மன் திருவிளா ரொம்பத் தடபுடலா நடக்கப் போகுதாமே?'' என்ருள் மங்கி.

''இருக்கப்பட்டவங்க வீட்லே கல்யாணம் இல்லெயா பின்னே, இந்த வருஷம்! அதனுலெ திருவிழாக்குத் தலைக்கு ஆயிரம் குடுத் தாங்க. ரொம்பப் பெரிய கல்யாணம் போ. ரெண்டும் ரெண்டு ரத்னங்க—லச்சம்மா, ராஜுதுரை.'' மங்கி இதற்குள் எண்ணெய்

ஊற்றினுள், கணுச்சாரி கொண்டு வந்த பாத்திரத்தில். கணுச்சாரி மடியிலிருந்து பணம் எடுத்துக் கொடுக்கப் போக மங்கி வாங்கவில்லே.

''அய்யே, அம்மன் விளக்குக்கில்லே எண்ணெ. அதுக்குப் போய்க் காசு வாங்குவேனு?'' என்ருள் மங்கி.

''அம்மன் கிருபை, உன் மேலே பூர்த்தியா இருக்கும்'' என்ருர் கணுச்சாரி. அவரைத் தெருவரைக்கும் வழிகூட்டி அனுப்பிவிட்டு உள்ளே திரும்புவதற்குள், இன்னெரு பக்கத்திலிருந்து உள்ளே நுழைந்தான் லிங்கையா, பூனேபோல.

''அப்பா வ ..'' என்னமோ சொல்லத் தொடங்கினுன் லிங்கையா. மங்கி அவன் வாயை மூடி, வீட்டுப் பக்கம் காட்டினுள், உள்ளே இருக்கிருர் என்று ஜாடையாக. அவள் போய்ச் செக்கின் மேல் உட்கார்ந்தாள். செக்கு மாட்டை அதட்டினுள். லிங்கையாவுக்கு இருக்கலாமா போகலாமா என்பது தெளிவாகவில்லே.

எவ்வளவு நேரமாகியும் மங்கி உள்ளே வராமற்போகவே தர்ம ராஜு வெளியே வந்தார். கதவு இடுக்கு வழியாக மகன் தென் படவே கோபம் கரை புரண்டது.

''டேய் தரித்திரச் சவமே...'' என்று கத்தினுர்.

சட்டென்று மங்கம்மாவின் பக்கத்தில் செக்கின்மேல் குதித்து உட்கார்ந்தான் லிங்கையா. அப்பாவின் கோபத்திலிருந்து பாது காப்பைத் தேடி மங்கியின் முதுகில் நுழைய முயற்சி செய்ய லானுன்.

''டேய்—உன்னெ... உன்னெ... கொன்னுப் போட்டாக் கூடப் பாவமில்லேடா'' என்ருர் தர்மராஜு.

''இன்னுங்க, அது! பச்சைக் குளந்தெயெப் போயி'' என்ருள் மங்கி.

''இறங்கு செக்கிலேருந்து'' என்று கத்தினுர் தர்மராஜு.

''இறங்க மாட்டேன்'' என்று அடம்பிடித்தான் லிங்கையா. மங்கம்மாவின் முதுகில் உராய உராய அவனுக்குக் கொஞ்சம் தைரியம் வந்தது. தர்மராஜு தம் கோபத்தையெல்லாம் செக்கு மாட்டின் மேல் காட்டினுர். மாடு ஒரு துள்ளுத் துள்ளியது முன்னேக்கி. அசந்தாற்போல் உட்கார்ந்திருந்த லிங்கையா தடாலென்று பின்னுல் விழுந்தான். தர்மராஜுவின் கோபமெல் லாம் பறந்துவிட்டது.

''ஐயோ மவனே! என் கண்ணு! அடி பட்டுதா?'' என்று பதறிப் போய் அவனேத் தூக்கினுர். மங்கம்மா செக்கிலிருந்து இறங்கி லிங்கையாவின் தலேயைத் தேய்த்தாள்.

''ஐயோ பாவம்! விளாங்கா அளவு புடெச்சிப் போச்சே குளந்தெக்கி. வெதவெதன்னு கொஞ்சம் புண்ணுக்கு எடுத்துட்டு வாங்க'' என்று சொல்லிக்கொண்டே அவனை உள்ளே அழைத்துச் சென்றாள்.

தர்மராஜுவின் மனமெல்லாம் உருகிவிட்டது. எவ்வளவு சந்தோஷமாக வந்தாரோ அவ்வளவு சோகம் வந்துவிட்டது. சோகத்திலிருந்து மெதுவாகத் தலைதூக்கியது சினம், செக்கு மாட்டின் மேல் மங்கி மேல், பிண்ணுக்குத் துண்டுகளின் மேல் ஒரு துண்டை எடுத்துத் தம் சக்தியையெல்லாம் சேர்த்து, தரையில் போட்டு உடைத்துவிட்டுத் தெருவுக்கு வந்தார் தர்மராஜு.

மகனின் முகத்தில் வலிக்கான அறிகுறிகளைப் பார்க்க மனம் ஒப்பாது தர்மராஜுவுக்கு. மங்கி பச்சைப் பிண்ணுக்கைச் சுட வைத்து, வீங்கின இடத்தில் ஒத்தடம் கொடுத்தபோது, கத்த வில்லை என்றாலும், வலி பொறுக்காமல் முனகினான் லிங்கையா. அந்த முனகல் கெட்ட கனவுபோல் குடைந்துகொண் டிருந்தது தர்மராஜுவை. அதனால் முனகல் கேட்காத தூரமாகப் போக வேண்டும் என்று எண்ணினார். ஆனால் எவ்வளவு தூரம் போனாலும் முனகல் கேட்டுக்கொண்டே இருந்தது. சினம் தணியவில்லை. முன்சீப் ராமமையா வீட்டுக்குள் போனார், முனகலை மறப்பதற்கு.

சுப்பையா பண்ணையார், ராமையா பண்ணையார், வெங்கன்னா, புன்னையா எல்லாரும் திண்ணை மீது உட்கார்ந்திருந்தார்கள். ஊரளவு திண்ணை ராமையா பண்ணையார் வீட்டுக்கு. சிமென்டைப் போல மெழுகிய தரை. வீட்டு முன்னால் வீட்டுக்கு எதிரில் தானியக் களஞ்சியங்கள். கொஞ்சம் தள்ளி, மெழுகிய தரைக்கு அந்தப் பக்கம் மல்லிகைப் பந்தல். பப்பாளி மரங்களும், மாமரங்களும், சின்னத் தெருச் சாவடிவரையில். அதிலிருந்து பெரிய வீடுவரையில் பாதைக்கு இரண்டு பக்கமும் சாமந்திச் செடிகள். பெரிய வீட்டுத் திண்ணையை ஒட்டிப் பெரிய கிணறு, கப்பிச் சாதனங்கள். கிணற்றுக்கு மேலே குறுக்குச் சுவர் ஒரு பக்கம்; தண்ணீர் சேந்தும் இந்தப் பக்கம் தென்படாமல் இருக்க இந்தக் குறுக்குச் சுவர் உதவியது. அந்தப் பக்கம் பெரிய தெருச் சாவடி. பெரிய தெருவுக்கும் சின்னத் தெருவுக்கும் இடையில் ஐந்து ஏக்கர் பரப்பளவு ராமையா பண்ணையார் வீடு. பெரிய தெருச் சாவடியில் முன்சீபின் ஆபீஸ். சின்னத் தெருச் சாவடி ரங்கனுடையது. அவன் அங்கே சகாக்களோடு சீட்டாடுவான். ராமையா பண்ணையாருக்கு இந்த விஷயம் தெரியும். சீட்டாட்டம் என்றால் ராமையா

பண்ணையாருக்கு மிகமிகக் கோபம் வரும் என்பது ரங்கனுக்குத் தெரியும். ஆனால் ராமையா பண்ணையார் சீட்டாட்ட விஷயம் தெரியாததுபோல் நடிப்பார். ரங்கன், தன் சிற்றப்பாவுக்குத் தெரியாமல் ஆடுவதுபோல் நடிப்பான்.

சந்தடி கேட்கவே ரங்கன் அலறிப் புடைத்துக் கொண்டு சீட்டு சளை ஒன்றாகச் சேர்த்து மறைத்து விட்டான். எல்லாம் முடிந்தபின் பார்த்தால் கணக்கர்.

''தங்கமான ஆட்டம். வீணா வாயிலெ போட்டுக் கிட்டேயா? எப்பவும் இல்லாம நாலு ஜோக்கர் சேந்து வந்தது எனக்கு'' என்றான் ரங்கன். அவ்வளவு நல்ல ஆட்டத்தைக் கெடுத்ததில் தர்மராஜு மனத்தில் சினம் கொஞ்சம் தணிந்தது.

''இந்த நேரத்திலே மங்கியை ஒண்டியா வுட்டுட்டு வந்தியா? குடி முழுகிப் போவாது!'' என்றான் ரங்கன். அவன் வாய்க்குப் பூட்டுக் கிடையாது.

''வாயெ மூடுடா!'' என்று சிரித்துக்கொண்டே சொன்னாலும், தர்மராஜுவின் மனத்தில் சினம் வெள்ளமாகப் பொங்கியது.

சினத்தோடு அடியெடுத்து வைத்தபோது, வீட்டு முன்னால் காயவைத்த புளியந் தளிர் கண்ணில் படவில்லை தர்மராஜுவுக்கு. கொஞ்சம் இருந்தால் மிதித்துவிட்டிருப்பார்.

''யோவ்!'' என்று கத்தினார் வெங்கண்ணா. ''கொஞ்சம் பாத்து நட!'' கணக்கர் பார்த்தார்.

''புளியந் தளிர்தானே. இருந்தாலும் வழியிலே காயவெச்சா எப்படி? அதுவும் ராத்திரி நேரம். யராவது மெதிச்சிடுவாங்களே!'' கொஞ்சம் தளிரை வாயில் போட்டுக் கொண்டார். பாதி உலர்ந்த புளியந் தளிர் அவர் பல்லிடையே மெத்தென்று கரைந்தது.

''நல்ல பக்குவத்திலெ இருக்கு அத்தான். தளிருன்னா இப்படித் தான் இருக்கணும்.''

''டேய் வெங்கண்ணா, பாப்பாரக் கண்ணு பட்டுட்டுதுடா. ஒரு கூடை அவங்க வீட்டுக்கு அனுப்பிச்சிடு. இல்லேன்னா நமக்குச் செறிக்காது'' என்றார் ராமையா பண்ணையார். தர்மராஜு சிரித் தார். அந்தச் சிரிப்பு தொண்டையில் பிறந்து, உதட்டில் முடிந்து போகும். என்றைக்கும் அடிவயிற்றிலிருந்து வராது.

''பெரிய பண்ணையார் ரெண்டு பேரும் உக்காந்திருக்கேள். கல்யாண விஷயமாப் பேச்சு வார்த்தையா?'' என்றார் தர்மராஜு.

''நடத்த வேண்டாமா பின்னே! அம்மன் உற்சவம் முடிஞ்சதுமே லக்னம் பாக்கச் சொல்லணும்'' என்றார் சுப்பையா.

''இதோ பார் அத்தான்!'' என்று ரகசியம் சொல்வது போல ராமையா பண்ணேயார் பக்கத்திலே போனுர் தர்மராஜு. ''வர தட்சிணே எவ்வளவு வேணுமோ முன்னடியே கேட்டு முடிவு பண்ணிடு. இதுலெல்லாம் மூடுமந்திரமே வேண்டாம். அப்புறம் உன் பொண்ணுக்குத்தான் ஆபத்து வரும்'' என்றுர் எல்லாருக்கும் கேட்கும் இரகசியக் குரலில்.

''சீ, வாயெ மூடு!'' என்றுர் எரிச்சலோடு ராமையா.

''சரியான சகுனி மாமா'' என்றுர் வெங்கன்ன.

''ஏதாவது வம்பு வளக்களேன்னு தூக்கம் பிடிக்காதா என்ன?'' என்றுர் சுப்பையா. இத்தனைப் பேருக்கு எரிச்சலைத் தரக்கூடிய ஒரு சொல் சொல்ல முடிந்ததற்குக் கணக்கர் நெஞ்சில் கொஞ்சம் நிம்மதி நிறைந்தது. சினம் கொஞ்சம் குறைந்தது.

''பண்ணெயாருக ஒண்ணும் நினைக்கலேன்னு ஒண்ணு சொல்றேன். உம்ம ரெண்டு குடும்பமும் காலா காலத்துக்கு ஒத்துமையா இருக்கணுங்கறதுதான் என்னுேட ஆசை. சின்னச் சின்னத் தகராறு ஏதாவது வந்து சேருமோன்னு பயம். அதுக்காகச் சொன்னேன், சுப்பையண்ணு! உம்ம மனசுலே இருக்கிறதைப் பளிச்சின்னு சொல்லிடும். எங்க அத்தானே ஒத்துக்க வெக்கற பொறுப்பு என்னுது. அவாளுக்கு ஒரே பொண்ணு தான்.''

''அந்த விஷயத்தெ அத்தானும் நானும் முடிச்சிக்கிறேம், ஆவட்டும். உன் மத்தியஸ்தம் தேவையில்லே'' என்றுர் சுப்பையா. இருந்தாலும் சுப்பையாக்கு இந்த விஷயத்தைத் தெளிவுபடுத்திக் கொள்ள ஆசை இருந்தது. ராமையாவை வாய் திறந்து கேட்டால் கௌரவக் குறைவு. ஆகவே, இந்தப் பிரச்னே எழுந்தது அவருக்கு ஒரு வகையில் திருப்தியாகவே இருந்தது.

சுப்பையா வீட்டுக்கு வந்தவுடனே புன்னேயாவைக் கேட்டாள், சுந்தரம்மா கதவுக்குப் பின்னுலிருந்து, ''வரதட்சிணே விஷயம் ஏதாவது தெரிஞ்சிதா?'' என்று. ''அப்பாவும் கேக்கலே, மாமாவும் சொல்லலே. இருந்தாலும் நமக்குள்ளே வரதட்சினே என்ன வேண்டியிருக்குது?'' என்றுர் புன்னேயா.

''எங்கப்பா கிட்டே இருவத்தஞ்சி ஏக்கரா பிடுங்கிக்கிட்டப்போ எங்கே போச்சு இந்தப் புத்தி?'' என்று குத்திக் காட்டினுள் சுந்தரம்மா.

வயலிலிருந்து அப்போதுதான் வந்த ராஜு இந்த உரையாடல் தனே எல்லாம் கேட்டான்.

''அப்பா, தம்பிடி வரதட்சணெ வாங்கறதா இருந்தா, முதல்லெ எனக்குக் கல்யாணமே வேண்டாம்'' என்றான் கண்டிப்பாக.

"அறிவு இருக்குதாடா உனக்கு? வரதட்சணெ இல்லாம கல்யாணம் இன்னுடா?'' என்றார் சுப்பையா.

''ஏன் வரதட்சணெ வாங்கலேன்ன பிச்செ யெடுக்கவாப் போறோம்? கதி இல்லாதவங்களுக்குத்தான் வரதட்சணெ!'' என்றான் ராஜு.

''என்னடா அடாவடித்தனமாய்ப் பேசறே?'' என்று சொன்னாள் சேஷம்மா.

"கதி இருக்கிறது ஒரு பக்கம் இருக்கட்டும்டா. வரதட்சணெ வாங்காமெ பண்ணிக்கிட்டா நம்ம கௌரவம் என்னவறது?'' என்றார் சுப்பையா, கோபமாக.

"மகனெ மாட்டுச் சந்தையிலே விலைக்கு விக்கறதுதான் கௌரவமா? சட்டம் போட்டிருக்காங்க கவர்ன்மென்ட்லெ, தெரியுமா? வரதட்சணெ வாங்கின, குடுத்தவங்களுக்கும் வாங்கினவங்களுக்கும் ஜெயில்தான்'' என்றான் ராஜு.

"சட்டம் போட்றதுக் கின்ன? எத்தனெ வேணும்னலும் போடு வாங்க. இந்தத் தடவெ ஓட்டுக்குன்னு வரமாட்டாங்க, செங்கல் ரெட்டி, சுப்பராஜு எல்லாரும், அப்போ கேக்கறேன் இந்தச் சட்ட மெல்லாம் இன்னன்னு? தாத்தா காலத்திலேருந்து வர்ற ஆசாரத்தெ யெல்லாம் தலைகீழா மாத்திச் சட்டம் போடறாங் களா சட்டம்?'' என்றார் சுப்பையா.

ராஜு சிரித்தான். "அப்பா பார்லிமென்ட் இந்த ஒரு நல்ல காரியமாவது பண்ணிச்சேன்னு சந்தோஷப்படாமெ அப்படிச் சொல்றியே?''

''ஆமாண்டா. இந்தக் காலத்துப் பசங்க ரொம்பப் போயிட் டீங்கடா. இல்லேன்ன எப்பவாவது அப்பன் முன்னடி நின்னு மவன் இப்படிப் பேசுவான? அப்பனுந்தான் கேட்டுக்கிட்டிருப் பான?'' என்றார் சுப்பையா கொஞ்சம் இறங்கி.

''முதல்லே காலமே மாறிப் போயிட்டுதுப்பா" என்றான் ராஜு.

''ஆமாண்டா. வயலுக்குள்ளே டிராக்டர் எப்போ வந்ததோ, அப்பவே மாறிப் போச்சி காலம்.''

சுப்பையா திண்ணைக்குப் போய்விட்டார். இந்த வாக்குவாதத் துக்கு முடிவு கிடையாதென்று அவருக்குத் தெரியும். யாராவது ஒருவர் இறங்கியாகணும். ராஜு இறங்கமாட்டான். முடிவு வரைக்கும் இழுத்துக்கொண்டு போனல் ராஜுதான் முடித்துவிடு வான், அது சுப்பையாவுக்குத் தெரியும். ஆகவே சுப்பையாதான்

இறங்கி விட்டுக் கொடுத்தாகணும். அத்துடன் ராஜு சொன்ன தில் ஏதோ நியாயம் இருப்பதாக அவர் அடிமனத்தில் ஏதோ ஒரு சந்தேகம். மகனிடம் நியாயமான பிடிவாதத்தைப் பார்த்த தில் சுப்பையாவுக்கு ஒரு பக்கம் திருப்தி, இன்னொரு பக்கம் கொஞ்சம் கர்வமுங்கூட. டிராக்டர் கொண்டுவர முடிவான போதுகூட இதுபோன்ற வாக்குவாதமே நடந்தது. ராஜுதான் ஜயித்தான்.

மாடுகளுக்குத் தவிடு கலக்கிக்கொண்டே மல்லி இந்த வாக்கு வாதத்தை எல்லாம் கேட்டாள். அவளுக்குத் தெரியாமலே உதட் டில் புன்முறுவலும், தொண்டையில் முணுமுணுப்பும் தோன்றின. ராஜு அத்தான் சொல்வது எப்பவும் ரைட்தான். ராஜு அத்தானைப் போல இன்னொருத்தர் இருக்கமாட்டார்.

''மல்லி, எவ்வளவு நேரம் கலக்குவே? காராம் பசுவும் ஜோடி மாடும் கத்துதே. கேக்கலே?'' என்றான் ராஜு, வராந்தாவிலிருந்து புழக்கடைக்குப் போய்க்கொண்டே.

மல்லியின் உதட்டில் புன்முறுவல் மறையவில்லை. தவிட்டுத் தட்டுகளைத் தூக்கிக்கொண்டு மாட்டுக் கொட்டகைக்குள் போனாள். ராஜு குளிப்பதற்குக் கிணற்றடிக்குப் போனான்.

பெரிய தட்டை ஜோடி மாட்டு முன்னால் வைத்தாள். ஆசை யோடு இரண்டு வாய்கள் தவிடு தின்னத் தொடங்கின. இரண்டா வது தட்டை, காராம் பசு முன்னால் வைத்தாள் மல்லி. காராம் பசு சூலாக இருந்தது. 'அத்தான் கல்யாணத்தன்று அது குட்டி போட ணும். அத்தானுக்குத் திரட்டுப்பால்னா ரொம்ப இஷ்டம். கடாக் குட்டி போடணும் பசு. அத்தான் அதுக்கு மனுஷ பாஷை கத்துக் குடுப்பார். பக்கத்திலே தவிடு தின்னுக்கிட்டிருக்கிற ஜோடி மாடு காராம்பசு போட்ட குட்டிதான். எத்தனை வேடிக்கை கத்துக் குடுத்தார், அத்தான் அதுங்களுக்கு. அதுங்க தானாவே போயி நுகத்தடியைக் கழுத்து மேலே போட்டுக்கும். அவர் வரச்சொன்னா வரும். போகச் சொன்னா போவும். யாரையாவது முட்டச் சொன்னா முட்டும்.'

தவிட்டை இன்னொரு முறை கலக்கிவிட்டுக் கிணற்றடிக்கு வந்தாள் மல்லி கைகழுவ. மணை மேலே உட்கார்ந்திருந்தான் ராஜு. கங்கப்பா தண்ணீர் இறைத்து அவன் முதுகு மேலே

ஊற்றிக்கொண் டிருந்தான். ராஜு தினம் வயலிலிருந்து வந்ததுமே குளிப்பான்.

''இந்தக் கை மேலே கொஞ்சம் தண்ணி ஊத்துடா அண்ணு'' என்றாள் மல்லி.

தண்ணீர் ஊற்றிக்கொண்டே சொன்னான் கங்கப்பா : ''டேய் அத்தான்! இவளுக்குக்கூட ஒரு நல்ல இடமாப் பாருடா. உன் கல்யாணம் முடிஞ்சதுமே இவளுக்கும் பண்ணிடலாம்.''

''அட ஆவன்னுகூட வராது. யாரு கட்டிக்குவாங்கடா இவளை? வண்ணான் கணக்காவது எழுதத் தெரியவேணுமா?'' என்றான் ராஜு சிரித்தபடி உடம்பைத் தேய்த்துக்கொண்டே.

''ஏன்? அத்தை என்ன படிச்சாங்க?'' என்று கேட்டான் கங்கப்பா.

''அந்தக் காலம் வேறெ. ரெண்டு குழந்தைக்குத் தாயாகற வரையிலே, அம்மா அப்பாகிட்டே பேசினதே இல்லையாம். இப்போ கல்யாணம் ஆவறதுக்கு முன்னாடிலிருந்தே கடுதாசி எழுதிக் கிறாங்க, கல்யாணப் புள்ளையும் பொண்ணும்'' என்றான் ராஜு

''சரிதான். மைத்துனருக்கு எங்க தங்கச்சி கடுதாசிகூட எழுதறாப் போல இருக்குது'' என்றாள் கிண்ணம் கழுவ வந்த சுந்தரம்மா.

மல்லி மெதுவாக நகர்ந்துவிட்டாள். கங்கப்பா அவளையே பார்த்துக்கொண்டு ராஜு உடம்பின் மேல் தண்ணீர் ஊற்ற மறந்துவிட்டான்.

மல்லி மெள்ள, ஏதோ நினைவாகத் தன் அறைக்குள் போய்விட்டாள். ஸ்டோர் ரூமுக்கும், சாப்பாட்டறைக்கும் நடுவில் குறுகலான அறை அவளுடையது. தெற்குப் பக்கம் புழக்கடை பார்த்து அந்த அறைக்குக் கதவு இருக்கிறது. அந்தப் புழக்கடை சுற்றுப் புறத்தைவிடக் கொஞ்சம் உயரத்தில் இருந்தது. சுற்றிலும் உயரமான சுவர் இருந்தது, அந்தப் புழக்கடைக்கு. மேற்குச் சுவரை ஒட்டினாற்போல அடுத்த புழக்கடையில் வளர்ந்த புளிய மரம் இருந்தது. தெற்குச் சுவர்ப் பக்கத்தில் ஒரு பெரிய நைட்குவீன் புதரும், சாமந்திச் செடிகளும், காசிரத்னம் கொடிகளும் இருந்தன. வீட்டின் தெற்குப் பக்கம் நான்கு அறைகள். முதலாவது ராஜுவின் அறை. இரண்டாவது புன்னையாவின் அறை. மூணாவது ஸ்டோர் ரூம். நாலாவது மல்லியினுடையது. மல்லியின் அறைக் கதவு புழக்கடையைப் பார்த்து எப்போதும் திறந்தபடியே இருக்கும். வாசற்படிக்கு எதிரில் இருக்கும் சாமந்திச் செடிகளைப் பார்த்த படியே உட்கார்ந்திருப்பாள் மல்லி. வாரத்துக்கொரு தடவை புழக்கடையைக் கண்ணாடி மாதிரி மெழுகிவிடுவாள்,

குளிர்காலம் பின்வாங்கியவுடனே, புன்னையாவும் சுந்தரம்மாவும் கட்டில்களைத் தெற்குப் பக்கத்துப் புழக்கடையில் போட்டுக் கொள்வார்கள். அதனால் ராஜு தன் அறையில் படுக்கமாட்டான். தெற்குப் பக்கத்து ஜன்னல் கதவு திறப்பதற்கு வழியில்லாததனால் வீட்டு முன்பக்கத்து முற்றத்தில் கட்டிலைப் போட்டுக் கொண்டு படுத்துக்கொள்வான். மல்லி மட்டும் கதவைத் திறந்து வைத்துக் கொண்டு தன் அறையிலேயே படுத்துக் கொள்வாள். மல்லி கதவைத் திறந்துகொண்டு படுப்பதால், குடித்தனத்துக்கு வந்த புதிதில் சுந்தரம்மாவுக்கு மிகவும் கூச்சமாக இருக்கும், அவர்கள் வெளியில் புழக்கடையில் படுப்பது. பதினாறு வயசுக்கு மேலானாலும், மல்லியின் மனம் வெறும் கைக்குழந்தை மனந்தானென்று பலமுறை சொன்னார் புன்னையா. சுந்தரம்மாவுக்குக் காலக்கிரமத்தில் அர்த்தமாயிற்று, மல்லி வெறும் அப்பாவியென்று.

ஆனால் மல்லியின் அப்பாவித்தனம் கைக்குழந்தையின் அப்பாவித்தனம் அல்ல. அவள் மனத்துக்கும் வயதாகியிருந்தது. அதில் ராஜு அத்தான் நிறைந்திருந்தான். அவள் வீட்டு வேலையெல்லாம் செய்யும்போது, பழக்கத்தினால் கைதான் வேலை செய்யும். மனம் எல்லாம் ராஜு அத்தான் மீதே இருக்கும். ராஜு அத்தானுக்கும் லட்சுமிக்கும் கல்யாணம் நடக்கப் போகிறதென்று, அவள் மனத்தில் எந்த மூலை முடுக்கிலும் பொறாமையோ வருத்தமோ இல்லை. சீர்வரிசை விஷயமாக அப்பா மகன்களிடையே வாக்குவாதம் நடந்தபோது, அவள் குஷியாகச் சிரித்துக்கொண்டாள். ஏனென்றால் அந்தக் கல்யாணம் நடந்தே தீரும் என்பது அவளுடைய அசைக்க முடியாத நம்பிக்கை. நடந்தே தீர வேண்டும் என்பது அவள் இதயத்தில் துடிக்கும் ஆசை. அந்த மகிழ்ச்சியில் எங்கோ அடிமட்டத்தில், அவளுக்குத் தெரியாமலே ஒரு தீர்க்க முடியாத கோரிக்கை வளையவந்து படுத்திருந்தது. அது கொஞ்சம் அசையும்போது அவள் கண்ணில் முறுவலுக்குப் பின்னால், ஏதோ ஒரு மெய்ம்மறதி, சின்ன ஈர மின்னல் வந்து தோன்றும், கைக்குழந்தைகள் கனவு காணும் சமயத்தில் தோன்றுவதுபோல. அதனால்தான், அந்தப் பார்வையை வழக்கமாகப் பார்த்தவர்கள் எல்லாம் அவள் மனம் பச்சைக் குழந்தை மனம் என்று நினைத்துக் கொள்வார்கள்.

மல்லி ஈரப் புடைவையை மாற்றிக் கொண்டாள். நைட்குவீன் அருகில் வந்து, அப்போதுதான் பூத்துக் கொண்டிருக்கும் ஒரு கொத்தைக் கையில் பிடித்து நெஞ்சு நிறைய வாசனையை இழுத்துக் கொண்டாள். மேற்குச் சுவரில் ஏறிக் கைக் கெட்டிய புளியம்

பிஞ்சுகள் இரண்டைப் பறித்தாள். ஒரு பிஞ்சைக் கடித்தாள். பற்கள் புளிப்புக்குச் சந்தோஷமாக ஜிவ்வென்றன.

களஞ்சியத்தின் கதவைத் திறந்து, தானியத்தைக் கோணியில் அளந்து கொட்டிக் கொண்டிருந்தான் கங்கப்பா. பதாலு கோணியின் வாயைத் திறந்து பிடித்துக் கொண்டிருந்தான். ராமி, பனை ஓலையைப் பானையில் நிரப்பி, கவிழ்த்து, ஓலையைப் பற்ற வைத்துச் சொக்கப்பனை மூட்டிக் கொண்டிருந்தாள். களஞ்சியத்துக்குப் பக்கத்தில் புழக்கடையில் புடத்தடு, பதாலுவின் நாலு வயது மகன், பெரிய குடியானவன் மாதிரி சின்னக் கைத்தடியைக் கன்னத்துக்கு முட்டுக் கொடுத்து உன்னிப்பாக அந்த ஜ்வாலையைப் பார்த்துக் கொண்டிருந்தான். புன்னையா உயரத் திண்ணை மேல் உட்கார்ந்து நிதானமாகச் சுருட்டு பிடித்துக் கொண்டிருந்தார். சுப்பையா திண்ணைக்கு வந்தவுடனே, சுருட்டைத் தூணின் அடிப் பக்கம் வைத்துவிட்டார். சுப்பையா பார்த்தார். குளித்துவிட்டு வந்த ராஜு சிரித்துக் கொண்டே சொன்னான் :

''ஏண்டா அண்ணா! பத்துப் பைசா சுருட்டெ மண்ணுக்கறே? அப்பாக்குத் தெரியாதா இன்னா, நீ புடிக்கறது?''

சுப்பையா சிரித்துக் கொண்டார். பெரிய மகன் தம்மிடம் அந்த அளவு பழைய காலத்து மரியாதை காட்டும்போது அவருக்கு வயிறு நிறைந்தாற் போலிருக்கும். இருந்தாலும் சின்ன மகனின் தைரியத்தையும், நேர்மையையும் பார்த்தால் அவருக்குக் கர்வமாக இருக்கும். அவனுடைய எண்ணங்களும் பேச்சும் புதிதாக மாறிவரும் காலத்தைச் சேர்ந்தவை. வரப்போகும் காலத்துக்கு அவைதாம் பொருத்தமானவை என்பது சுப்பையாவின் நம்பிக்கை. அதனால்தான், ராஜு எந்த மாற்றத்தைக் காட்டினாலும், முதலில் அவருடைய பழங்கால மனம் தடை சொன்னாலும், கடைசியில் ''உன் இஷ்டம்'' என்பார்.

ராஜு மட்டும் அப்பா எதிரில் வந்தாலும் பிடித்துக்கொண்டிருக்கும் சுருட்டை அணைப்பதில்லை.

மல்லி படிகளில் விர்ரென்று பறந்தாள் புறாப்போல. கங்கப்பா வாய் திறந்தான். ஆனால் அவன் மனத்திலிருந்த பயம் வெளியே வரவில்லை. பயம் தொண்டையில் கார்க் மாதிரி அடைத்துக் கொண்டது. மல்லியின் உற்சாகம் அவனை அலைபாயச் செய்யும்.

அந்த உற்சாகத்துக்குக் காரணம் ஒன்றும் இருக்காது, அது இயற்கையானது. கங்கப்பாவின் பயமும் இயற்கையானதே. மல்லி விழமாட்டாள், அவளுக்கு எந்த ஆபத்தும் வராதென்றும் கங்கப்பாவுக்குத் தெரியும். இருந்தாலும் அவள் வயல் வரப்பில் குதித்தோடும்போதும், மாடிப்படிகளில் பறவை மாதிரி பறந்து செல்லும்போதும் பயம் தொண்டையில் அடைத்துக்கொண்டு மூச்சு நின்றுவிடும். மல்லி அவனுடைய திறந்த வாயில் புளியம் பிஞ்சு ஒன்றைத் திணித்தாள். திருப்தியாக மடமடவென்று மென்றான் கங்கப்பா.

''பல்லெல்லாம் கூசிணுக்கூட எப்பிடித் திங்கறே தங்கச்சி?'' என்றான், அந்தத் தொல்லை தனக்கு இல்லாதது மாதிரி. அதற்கு அவள் பதில் சொல்லாமலே, ''அண்ணா ஆவன்னா பொஸ்தகம் ஒண்ணு வாங்கிட்டுவா'' என்றாள்.

''என்னது?'' என்றான் கங்கப்பா. அவன் கையிலிருந்த மரக்கால் கீழே சரிந்துவிட்டது ஆச்சரியத்தினால்.

''அத்தான் படிப்பு கத்துக்கோன்னுச் சொல்லலே'' என்றாள் மல்லி. சொல்லிவிட்டுச் சொக்கப்பனை அருகில் ஓடிப் போனாள்.

''இன்னொரு ரெண்டு மரக்கா அளந்து போட்டுடு சின்னப் பண்ணையாரே. நெல்லு குத்தறவங்க வர்ற நேரமாச்சி'' என்றான் பதாலு. சுயநினைவில்லாமலே கங்கப்பா தானியம் அளந்து கொட்டினான்.

கங்கப்பாவும் மல்லியும் சுப்பையா பண்ணையார் மனைவிக்குத் தூரத்துச் சொந்தக்காரர்கள். அவர்கள் அப்பா, அந்தம்மாக்கு அண்ணன் முறை. அம்மா செத்துப் போகும்போது மல்லி ஐந்து மாதக் குழந்தை. குழந்தைகள் இரண்டு பேரையும் சுப்பையா பண்ணையார் வீட்டில் விட்டுவிட்டு, யாரிடமும் சொல்லாமல் மாயமாய் விட்டார் அப்பா. அப்போதிலிருந்து சேஷம்மாதான் வளர்த்தாள் இரண்டு பேரையும். மல்லிக்கு, பதாலு மனைவி புல்லியைப் பால் புகட்டச் செய்தாள். ராமிக்கும் மல்லிக்கும் ஒரு மாதந்தான் வித்தியாசம். ராமிக்கும் மல்லிக்கும் ஒரே மடியில் படுத்துக்கொண்டு ஆளுக்கொரு மார்பிலிருந்து பால் குடித்த நினைவு மனத்தின் அடித்தளத்தில் எங்கோ இருக்கிறதோ என்னவோ? ஒருவருக்கொருவர் பார்த்துக்கொள்ளும் போதெல்லாம், எவ்வளவோ காலம் பிரிந்திருந்து மீண்டும் ஒன்று சேர்ந்த இணைபிரியா நண்பர்களைப் போல் ஒருவரை ஒருவர் கட்டியணைத்துக் கொள்வார்கள்.

''அதின்ஞ மாமி, நம்ம மல்லி அந்தப் பறப்பொண்ணே அப்படிச் சேத்துக் கட்டிக்கிரு? யாராவது பாத்தா என்ன நினேப்பாங்க?'' என்பாள் முதலிலெல்லாம் சுந்தரி, சேஷம்மாவிடம்.

''அவ அம்மா மடியிலெ படுத்துக்கிட்டுத்தான் பால் குடிச்சா. இருந்தாலும் நீ எங்கெயோ ஹைதர் காலத்து விஷயமெல்லாம் சொல்லிக்கிட்டிருக்கிறியே அண்ணி? இந்த நாள்ளெ இன்னும் பறையருன்ஞ பண்ணேயாருன்ஞ இருக்குது?'' என்பான் ராஜு.

ராஜு சொல்லும் புதுயுக அபிப்பிராயங்களே அந்த வீட்டில் மனப்பூர்வமாக யாரும் ஏற்றுக் கொள்வதில்லே. பழைய ஆசாரங்கள் தகராறு இல்லாதவை. புது அபிப்பிராயங்களால் என்ன ஆபத்துக்கள் வர இருக்கிறதோ? இருந்தாலும் மறைமுகமாகவே நாட்கள் மாறிக்கொண்டிருக்கின்றன என்றும், எண்ணங்கள் மாறி வருகின்றன என்றும், வரப்போகும் காலத்துக்கு ராஜு பிரதிநிதியென்றும், ஒரு தெளிவில்லாத அங்கீகாரம் அந்த வீட்டிலும் ஊரிலும் இருந்து வந்தது. ஆனல் ஊரெல்லாம் அங்கீகரித்தது ராஜுவைத்தானே தவிர, அவனுடைய எண்ணங்களே அல்ல.

அவனே, எந்தக் கூச்சமும், மானசீகமான தடைகளும் இல்லாமல் பரிபூர்ணமாக அங்கீகரித்தாள் மல்லி. அந்த அங்கீகாரத்துக்குத் தர்க்க ரீதியான அடிப்படை ஒன்றுமில்லே. ராஜு அத்தானல் உண்மையைத் தவிர வேறென்றும் சொல்ல முடியாது. ராஜு அத்தானல் நல்லது தவிர வேறென்றும் செய்ய முடியாது. அதனல், தானும் படிக்க வேண்டும் என்று அவர் ஏதோ சொல்லியிருந்தாலும், அதை வேதவாக்குப் போல எடுத்துக் கொண்டாள் மல்லி.

அவளுடைய குரு கணுச்சாரி. கணுச்சாரிக்கும் அவளுக்கும் இடையே ஓர் இயற்கையான சிநேகபாவம் இருந்தது. கணுச்சாரிக்கு அவளுடைய அப்பாவித்தனம், எங்கும் இருண்ட கோணங்கள் இல்லாத தூய்மையான அவள் மனம், அம்மனுடைய அம்சங்கள் போல் தென்படும். கணுச்சாரிக்கு அம்மன் சொந்தக் குழந்தை, சொந்தத் தாய். மல்லியும் அதேபோலத்தான். அம்மன் பேருங்கூட மல்லம்மா.

ஆனல் மல்லியிடம் லௌகிக ஞானமும் இல்லாமற் போகவில்லே. தன் படிப்பு வீட்டில் எல்லார்க்கும், முக்கியமாகச் சுந்தரம்மாவுக்கு அலங்கோலமாகத் தோன்றும் என்பது அவளுக்குத் தெரியும். ஆகவே, ஒவ்வொரு மாலேயும் கணுச்சாரியிடம் பாடம் படித்துவிட்டு, புத்தகங்களே அம்மன் விக்கிரகத்துக்குப் பின்னல் ஒளித்து வைத்துவிட்டு வீட்டுக்கு வருவாள். ஒருவேளே சுந்தரம்மாவுக்குத்

தெரிந்து தன் மானத்தை வாங்க முயற்சி செய்தாலும், மல்லியால் குஷியாகச் சிரித்துவிட்டுப் பேசாமல் இருக்க முடியும். இருந்தாலும் தெரியாமல் மறைத்து வைத்தால் ஒரு தொல்லேயும் இருக்காது என்பது அவள் நம்பிக்கை.

ஒன்றை மட்டும் யாருக்கும் தெரியாமல் மறைத்து விட்டாள் மல்லி. கணுச்சாரிக்குக்கூட. பத்து நாட்களில் அவளுக்கு எழுத்தெல்லாம் வந்துவிட்டது. சின்னக் காகிதங்களேக் கிழித்து, அவற்றில் இரண்டு மூன்று வரிகளில் கடிதங்கள் எழுதிக்கொண்டிருப்பாள் ராஜுவுக்கு. முதல் கடிதம்...

'அத்தான், நேத்து ராத்ரி எருக் கறி எப்படி இருந்தது? நான் தான் பண்ணினேன்...'

கடிதத்துக்குக் கீழே தன் கையெழுத்து இருக்க வேண்டுமென்பது அவளுக்குத் தெரியாது. அந்தக் கடிதம் ராஜுவுக்குப் போய்ச் சேரவேண்டும் என்ற ஆசையும் அவளுக்கு இல்லே. அந்தக் கடிதம் ராஜு அத்தான் கண்ணில் பட்டிருந்தால், வெட்கத்தால் செத்துப் போயிருப்பாள். வேறு எந்த விஷயத்திலும் அவளுக்கு நாணமோ வெட்கமோ கிடையாது. இந்தக் கடிதங்கள் மட்டும் அவளுடைய ரகசியச் சொத்து. அந்தச் சொத்து யார் கண்ணிலும் படக்கூடாது. அது இருப்பதாகக்கூட யாருக்கும் தெரியக்கூடாது. கடிதங்களில் விசேஷங்கள் ஒன்றும் இருக்கா. ஆனல், அவளுக்கு மட்டும் அவை மிக முக்கியமான விஷயங்கள். இந்த வித்தியாசம், அவளில் பாதி விழிப்புப் பெற்ற லௌகிகப் பார்வைக்குத் தெரியும். ஆகவே அவள் அவற்றை உயிருக்குயிராக ரகசியமாக மறைத்து வைத்தாள்.

'சக்கிலி கெங்கன் கொடுத்த கீச்சு செருப்பு ரொம்ப நல்லா இருக்குது. ஏன் போடமாட்டேங்கறே?'

'குரங்குப்புட்ட மாமரம் செமையாப் பூத்திருக்குது. தலெக் காய்ப்பு பிஞ்சிங்க, எவ்வளவு நல்லா இருக்குது தெரியுமா!'

'முந்தாநாள் லச்சுமி அக்கா கஞ்சீவரம் பட்டுப் புடைவையாம், கட்டிக்கிட்டு வந்தா, கோவிலுக்கு. எவ்வளவு நல்லா இருந்தது தெரியுமா, லச்சுமிதேவி மாதிரி?'

'உன் புதுவீட்லே தெற்குப் பக்கம் ரோஜாப் பதியம் போட்டேன். வீடு முடியறதுக்குள்ளே பூக்கணும்.'

இந்த மாதிரியே எத்தனேயோ கடிதங்கள். கணுச்சாரியிடம் பாடம் கேட்டு முடிந்ததும் கால்வாய் தாண்டி ஒட்டுமாந்தோட்

டத்துக்கு வருவாள் மல்லி. அந்தத் தோட்டத்தில் தனக்கென்று சிறிய வீடு கட்டிக்கொண்டிருந்தான் ராஜு. புதுமாதிரி பங்களா. இந்த விஷயமாக அவனுக்கும் குடும்பத்தாருக்கும் வாக்குவாதம் நடந்தது. கல்யாணம் முடிந்தவுடனே அவன் தனிக் குடித்தனம் வைப்பது யாருக்கும் இஷ்டம் இல்லே. ராஜு மட்டும் 'என்ன ஆனாலும் சரி, பெரிய வீட்டில் இருக்க மாட்டேன்' என்று சொல்லி விட்டான். அதற்காகத் தனக்குக் குடும்பத்தின் மேல் அன்பு, பாசம் இல்லே என்று நினைப்பது தப்பு என்றும் சொல்லிவிட்டான். தனியாக இருப்பது சௌகரியத்துக்காக. சில விஷயங்களில் சேர்ந்தே இருக்கணும், சில சந்தர்ப்பங்களில் தனிமை தேவை. அண்ணனுக்குக் கல்யாணம் ஆனவுடனே இதே வார்த்தையைச் சொன்னான் அவன். ஆனால் அண்ணன் காதிலேயே போட்டுக் கொள்ளாமல் அந்தப் புத்திமதியைத் தூக்கி எறிந்துவிட்டான்.

''வீட்லே அடி வெச்சதுமே தனிக் குடித்தனம் வெச்சுட்டாங்கற பெரிய பேரு என் தலேயிலெ வெக்கறதுக்கா?'' என்றாள் சுந்தரம்மா.

என்ன சொன்னாலும் ராஜு தன் பிடிவாதத்தை விட்டுக் கொடுக்க மாட்டான் என்பது சுப்பையாவுக்குத் தெரியும். அதனால்தான் ஒத்துக் கொண்டார்.

ஆனால் ராமையா பண்ணேயாருக்கு இவை எல்லாம் ஏறுமாறாகப் பட்டன.

''டேய் மாப்பளே, உன் நடவடிக்கெ எனக்கொண்ணும் புடிக்க லேடா. நீ என்ன சொன்னாலும் சரி, பத்துப் பேரு சேர்ந்திருந்தா தான் அழகு, ஆனந்தம். கடல் மாதிரி வீடு, இருக்கு உனக்கு. அந்தப் பெரிய வீட்லே இடமில்லியா என்ன?'' என்றார் அஸ்தி வாரம் போடும்போது வந்து பார்த்து.

''மனசுதான் சேர்ந்திருக்கணுமே தவிர, ஒரு வீட்லே இருந்தாத் தான் சேந்திருக்கற மாதிரியா? எங்கன்ன அத்தானுக்கும் உங்க வீட்லே ஒரு நிமிஷம் ஒத்துப் போறதில்லே. அப்படி இருக்கறப்போ தனிக் குடித்தனம் சுகமா இருக்காதான்னு கேக்கறேன்?'' என்றான் ராஜு.

''டேய், நான் உங்கப்பா மாதிரி மொட்டெப் பசங்க பேச்சுக்கு மதிப்புக் குடுப்பேன்னு நினெச்சியா? எங்க வீட்லெ எங்கன்னனே வாயைத் திறக்கச் சொல்லு, தோலெ உரிச்சிடமாட்டேன்.''

''மாமா, நிதானமா யோசனே பண்ணு. எரியற நெருப்பு மேலே பானேயைக் கவுத்து வெச்சா மாத்தரம் நெருப்பு மாய மாப் போயிடுமா? பானேயை எடுத்ததுமே பத்திக்கிட்டு எரியாது.

நீ வீட்டுலெ இல்லாமெ இருக்கறப்பொ உங்க மருமகளும் அத்தையும் இடிச்சிக்கறதும், எங்கன்ன அத்தான் பெண்டாட்டிக்குப் பரிஞ்சிக்கிட்டு வர்றதும் நடக்காமெயா இருக்குது? அந்த விஷயம் உனக்குத் தெரியாதா? நான் சொல்றது, காலம் மாறிப் போயிட்டுது. சும்மாவாவது பழங்காலத்து ஆசாரங்களைப் புடிச்சிக்கிட்டுத் தொங்கறதுலெ என்ன லாபம்? இந்தக் கூட்டுக் குடும்பம் எல்லாம் நடக்காது மாமா!''

நீங்க மொட்டெப் பசங்கெல்லாம் ரொம்ப மீறிப் போயிட்டீங்க, ஆவட்டும்!'' என்று சொல்லிவிட்டுப் போய்விட்டார் ராமையா. தம் வீட்டில் மருமகளுக்கும் தம் மனைவிக்கும் ஒரு நிமிஷம் ஒத்துப் போவதில்லை என்பதும், தம் வாய்க்குப் பயந்து, தாம் வீட்டில் இருக்கும்வரையில் சும்மா இருக்கிறார்கள் என்பதும், தாம் வாயிற்படியைத் தாண்டியதும் சின்னச் சின்னப் புயல்கள் வீட்டில் வீசத்தான் செய்கின்றன என்பதும் ராமையாவுக்குத் தெரியும். இருந்தாலும் ராஜுவின் புதிய சித்தாந்தத்தை மட்டும் அவர் ஒருநாளும் ஒப்புக்கொள்ள மாட்டார். அவர் பார்வையில் பழைய முறைகள்தான் குறையில்லாதவை. அந்தப் பழக்கவழக்கங்கள் குலைந்துவிட்டால் உலகம் தலைகீழாகிவிடும். ஆனால் ராஜுவின் மனம் களங்கம் இல்லாதது. அவனுக்குப் பெரியவர்களிடம் உண்மையான மரியாதை இருக்கிறது என்பதும் ராமையாவுக்குத் தெரியும். அவனுடைய பிடிவாதத்தையும், அறிவாற்றலையும் பார்த்து ராமையாவுக்கு ஒருவிதமான மதிப்புங்கூட. தம் மகனைப் போல, மனத்தில் இருப்பதை மறைத்து வைத்து, பெரியவர்களைத் திருப்தி செய்வதற்கு இனிமையாகப் பேசமாட்டான் ராஜு.

மல்லி, அந்தி இருட்டு மெழுகிக்கொண்டிருக்கும்போது வருவாள் தினம், ராஜுவின் புதிய பங்களா அருகே. செங்கல் குவியல் மேல் உட்கார்ந்துகொண்டு, அன்றைய விசேஷம் எதையாவது சிறிய கடிதமாக எழுதுவாள். அவள் மடியிலிருக்கும் ஒரு பழைய கவர். எழுதிய கடிதத்தை, பழைய கடிதங்களோடு சேர்த்து அந்தக் கவரில் வைப்பாள். அந்தக் கவரை மடியில் வைத்துக்கொள்வாள். கடிதக் கட்டு எப்போதும் அவள் மடியிலேயே இருக்கும். கடிதங்களை எப்போதும் இருட்டிலேயே எழுதுவாள். அவற்றின்மேல் வெளிச்சம் விழுந்தால், தன் அபூர்வ இரகசியம் வெளியாகிவிட்டாற்போல் தோன்றும் அவளுக்கு. விளக்கு வெளிச்சத்தில்கூட அவற்றை வெளியில் எடுத்துப் படிக்க மாட்டாள். ஆனால் எல்லாக் கடிதங்களும் அவளுக்கு மனப் பாடம்.

அன்று புதுவீட்டில் ஜன்னல்களும் கதவுகளும் வைத்தார்கள்.

"இவ்வளவு பெரிய ஜன்னலுங்க எதுக்குடா தம்பி? வீடு முச்சூடும் வெளியே தெரியாது?" என்றாள் சேஷம்மா ராஜுவிடம்.

"காத்து, வெளிச்சம் வரவேணுமா?" என்றான் ராஜு.

புதுவீட்டு அமைப்பில் ஒன்றுகூட அப்பா அம்மா இரண்டு பேருக்கும் தலைகால் புரியவில்லை.

"இங்கே போரிங் போட்ப் போறேன். இருவத்தஞ்சு அடிக்குள்ளே நல்ல தண்ணி கிடைக்கும்னார் இன்ஜினீர். இங்கெல்லாம் காய்கறி, அந்தப் பக்கம் பூச்செடிங்க." ராஜு சொல்லிக்கொண்டே இருக்க, தமக்குத் தெரியாத புது உலகம் எதையோ மகன் உருவாக்குவது போல் பட்டது வயதான தாய்தந்தையருக்கு.

கங்கப்பா ராஜுவிடம் சொன்னான் :

"அத்தான்! மல்லிக்குக்கூட ஒரு நல்ல சம்மந்தம் பாருடா. கல்யாணம் பண்ணி அனுப்பிச்சிடுவோம்."

"எங்கே அனுப்பப் போறீங்க? எனக்குக் கல்யாணம் ஒண்ணும் வேணும்" என்றாள் மல்லி.

அந்த வார்த்தையைக் கங்கப்பா ஏதோ ஒரு பேச்சுக்காகச் சொல்லவில்லை என்றாலும், யாரும் அதைப் பெரிதாக எடுத்துக் கொள்ளவில்லை. மல்லி மனத்தில் மட்டும் அந்த வார்த்தை சுழன்று கொண்டே இருந்தது. மத்தியான்னம் வயல் வெளியில் மெய்ம் மறந்து திரிந்தபடி அதையே திரும்பத் திரும்ப நினைத்துக்கொண்டிருந்தாள்.

புது வீட்டருகில் வரும்போது கொத்து வேலைக்காரர்கள் மூட்டை முடிச்சு கட்டிக் கொண்டு வீட்டுக்குப் புறப்படலானார்கள். வீட்டுக்கு வடக்குப் பக்கத் தோட்டத்தில் எலுமிச்ச மரத்தின் பக்கத்திலிருந்த சலவைக் கல் குவியல் மேல் உட்கார்ந்தாள். பெண்ணுக்குக் கல்யாணம் நடக்கும் என்றும், மாமியார் வீட்டுக்குப் போகவேண்டும் என்றும் மல்லிக்குத் தெரியாமல் இல்லை. ஆனால், மாமா, அத்தை, புல்லி, ராமி, அண்ணன், ராஜு அத்தான் இவர்கள் எல்லாரையும், அந்த வீட்டையும் வயல்களையும் விட்டுவிட்டு எங்கே போவாள்? எங்கே போகமுடியும்? தான் போய்விட்டால் காராம்பசுவுக்குப் பிண்ணாக்கும் கழுநீரும் யார் கொடுப்பார்கள்? எலுமிச்ச மரத்துக்குத் தண்ணீர் யார் ஊற்றுவார்கள்? இவை எல்லாவற்றுக்கும் தான் வேண்டும். தனக்கும் இவையெல்லாம் வேண்டும். தனக்குக் கல்யாணம் என்ற விஷயத்தை நினைத்தால், அது எப்படியும் நடக்காது என்ற தைரியமும், என்னவென்று தெரியாத ஒரு திகிலும் அவளைக் கௌவிக்கொண்டன. இருட்டு

முற்ற முற்ற நிகில் அழுத்திக்கொண்டே இருந்தது. கைக்கெட்டிய எலுமிச்ச இலையைக் கிள்ளி மென்றாளே தவிர, அதன் கசப்புக்கூட வாய்க்குத் தெரியவில்லை.

சட்டென்று மடியிலிருந்து கவரை எடுத்தாள். இன்று காகிதம் எடுத்துவர மறந்துவிட்டாள். பழைய கடிதம் ஒன்றைத் திருப்பினாள். 'காராம்பசு திரட்டுப் பாலுன்னா உனக்கு ரொம்ப ரொம்ப இஷ்டமில்லே!' என்று எழுதினாள், எப்போதோ. அதில் பின் பக்கம் இன்று கடிதம் எழுதவேண்டும். பென்சிலை ஜாக்கட்டின் உள் இடுக்கிலிருந்து எடுத்தாள். ஆனால் என்ன எழுத வேண்டும் என்று தெரியவில்லை. மூளையெல்லாம் காலியாகிவிட்டது. எழுத்து நினைவுக்கு வரவில்லை. எவ்வளவு நேரம் உட்கார்ந்திருந்தாளோ அப்படி. கடைசியில் அவளுக்குத் தெரியாமலே எழுதிவிட்டாள்: 'முதல்லே நான் கலியாணமே பண்ணிக்கமாட்டேன்' என்று.

எழுதிய பிறகுதான் எழுதியது என்னவென்று நினைவு வந்தது. சிரிப்பு வந்தது. மனம் இலேசாயிற்று, பெரிய சுமை ஏதோ இறங்கி விட்டாற்போல.

திடீரென்று வீட்டில் டார்ச் லைட் எரிந்தது. ராஜூவும், லட்சுமியும் பேசிக் கொண்டிருந்தார்கள்.

''பொழுது போச்சு, நான் போறேன்'' என்றாள் லட்சுமி.

''இருட்லெ ஒண்டியா எப்படிப் போவே? நான் துணைக்கு வர்றேன் இரு'' என்றான் ராஜூ.

''ஐயோ, யாராவது பார்த்தா...''

''பார்த்தா? இன்னிக்கி இல்லேன்னாலும் நாளைக்காவது நீ என் பெண்டாட்டிதானே?''

''அதுக்குன்னு முந்தானியிலே முடி போட்டுக்கிட்டுத் திரிவாங்களா ராத்ரி பகளு?''

''நான் அப்படித்தான் திரிவேன். இஷ்டம் இல்லேன்னா இப்பவே சொல்லிடு.''

''அடே, இருங்க! யாராவது பாத்தா?''

''பாத்தா? சரி, இருக்கட்டும். உன் விஷயத்தெ கவனிச்சிக் கிட்டுத்தான் இருக்கறேன். முந்தா நாளு, நேத்து, அந்தி நேரத் திலே காவாத் தாண்டி வயல் பக்கம் ஏன் வந்துகிட்டிருந்தே?''

''காய்கறி பறிக்கறதுக்கு.''

''ஓகோ, இவ்வளவு பேரு வேலைக்காரங்க இருக்கறப்போ, உன் கையாலெ காய்கறிங்க சுமக்க வெக்கறாரா உங்கப்பா? இங்கே ஏன் வர்றேன்னு எனக்குத் தெரியும்.''

''என்னத்துக்கு?''

''நம்ம புது வீடு எவ்வளவு தூரம் வந்திருக்கு, எப்படி இருக்குன்னு பாக்கறதுக்கு.''

லட்சுமி பேசவில்லை.

''வெக்கம் கிக்கம் எதுக்கு? காட்றேன் வா. தினம் பாத்துக் கிட்டுத்தான் இருக்கறேன், நீ படற வேதனையை அதுக்குத்தான் இன்னைக்கி வழியிலே பழியாக் கிடந்து உன்னை இழுத்து வந்தேன் இங்கே.''

மல்லியின் நெஞ்சு படபடவென்று அடித்துக் கொண்டது. தான் இந்தக் காட்சியைப் பார்த்துக்கொண் டிருப்பதற்காக அல்ல. பார்க்கப் போனால் அவளைப் பற்றி யாரும் கவலைப்பட மாட்டார் கள். லட்சுமி ஆகட்டும், அத்தான் ஆகட்டும், அவள் பார்த்துக் கொண்டிருந்தாலும் வெட்கப்படமாட்டார்கள். அவளுடைய அவஸ்தைக்குக் காரணம், தான் உயிருக்குயிராக ஒளித்துக்கொண் டிருக்கும் கடிதக் கட்டு அவள் கையில் இருந்ததுதான். அவளையோ கடிதக் கட்டையோ அந்த இருட்டில் ராஜுவோ லட்சுமியோ பார்க்க முடியாது. இருந்தாலும் அசட்டுத்தனமான வேகம் ஒன்று அவளை ஆட்கொண்டது. கடிதக் கட்டை மடியில் செருகப் போனாள்; கைகள் நடுங்கின. புடைவைக் கொசுவம் சரிந்துவிட்டது. கட்டுக் கீழே விழுந்துவிட்டது. ஒரு கையில் புடைவைக் கொசு வத்தையும், இன்னொரு கையில் கடிதக் கட்டையும் பிடித்துக் கொண்டு அங்கிருந்து வேகமாக யாருமில்லாத ஏகாந்தத்தை நோக்கி ஓடிப்போக வேண்டும் என்ற துடிப்பு அவளுக்கு. முன்னும் பின்னும் தென்படாத அந்த இருட்டில் கண்முன் தெரியாமல் ஓடத் தொடங்கினாள். ஓர் அடி எடுத்து வைத்தாளோ இல்லையோ, அவள் காலில் மிக ஆழமாகக் குத்தியது பெரிய எலுமிச்சம் முள் ஒன்று. ''அம்மா!'' என்று கத்தியபடி கீழே பொத்தென்று விழுந் தாள். சட்டென்று தன் பக்கம் அவசரமாகத் தேடி வரும் டார்ச் லைட் வெளிச்சம் தென்பட்டது. கடிதக் கட்டை அவசர அவசர மாக ஜாக்கெட்டின் உள்ளே இடுக்கில் செருகிவிட்டாள். சரிந்த சேலைக் கொசுவத்தை மொத்தமாகச் சுருட்டித் தாறுமாறுகச் செருகிக் கொண்டாள்.

''யாரது?'' என்றான் ராஜு.

ராஜு குரல் கேட்டதுமே அவள் அச்சமெல்லாம் பறந்துபோய் விட்டது.

''நான்தான் அத்தான்! முள்ளு குத்திவிட்டது. அவ்வளவுதான்'' என்றாள் மல்லி. அவள் குரலைக் கேட்டதும் பாதி எழுந்த சுவர் பின்னால் ஒளிந்து கொண்ட லட்சுமி வெளியே வந்தாள். ராஜு

முள்ளைப் பிடுங்கிவிட்டான். "அப்பா!" என்றாள் மல்லி வலியோடு. அந்த வலியில் ஒரு திருப்தி இருந்தது. திருப்தியின் பின்னால் ஒரு சின்ன முள் உள்ளே எங்கேயோ அசைந்தது. மெதுவாக எழுந்தாள் மல்லி.

"வீட்டைப் பார்த்து முடிச்சாச்சா லட்சுமி அக்கா? இனிமே போகலாம் வா. உன் வீட்டுக் கிட்டேயே விட்டுட்டுப் போறேன்."

"வா!" என்றாள் லட்சுமி.

"அப்போ நான் வரவேணுமா?" என்றான் ராஜு.

"நீ வராட்டாப் பரவால்லே" என்றாள் மல்லி.

லட்சுமி, மல்லம்மனுக்கு நன்றி தெரிவித்தாள் ஆயிரம் முறை, மல்லி துணை கிடைத்ததற்கு. அவள் இல்லையென்றால், எவ்வளவு வேண்டிக் கொண்டாலும் ராஜு கூட வராமல் இருக்கமாட்டான். அவனுடைய பிடிவாதம் அவளுக்குத் தெரியும். வீட்டில் எல்லாரும் அவளைப் பிய்த்தெடுத்து விடுவார்கள், பரிகாசம் பண்ணியே. இருந்தாலும் வெட்கத்தில் செத்துப் போவாள், பதில் சொல்ல முடியாமல். அதிலும் அண்ணிக்கு வாய்த் துடுக்கு அதிகம்.

அவனுடைய அநுமதிக்காக நிற்காமல் மல்லியுடன் புறப்பட்டாள் லட்சுமி.

டிராக்டர் சக்கரங்களுக்கு இரும்புப் பட்டைகளை மாட்டினான் ராஜு, புழுதியாக்கிய வயலில் சக்கரங்கள் வழுக்கித் திரும்பி விடாமலிருக்க. பெரிய டப்பா போன்றவற்றில் சோள விதைகளைப் பதாலும் மற்ற வேலைக்காரர்களும் போட்டனர். ராஜு டிராக்டரில் ஏறினான். டு-ர்-ர்-ர்-டப்-டுர்ர் என்றது டிராக்டர், அவன் அழுத்தினதுமே. முப்பத்திரண்டு ஏக்கர் சதுரத்தை இரண்டு மணி நேரத்தில் தூள்தூளாக்கி விட்டது டிராக்டர், அதற்கு முன்பே. சோள விதை போட்ட டப்பாவில் மேலே தூக்கிய யானைத் துதிக்கை போன்ற குழாயை மாட்டினான். துதிக்கையை டிராக்டர் பின் பக்கத்தில் தூக்கி வைத்துக் கொண்டது. டிராக்டரை ஓட்டிக்கொண்டே ஒரு ஸ்விட்சை இழுத்தான். யானைத் துதிக்கையிலிருந்து விதைகள் வரிவரியாகத் தூவுவது மாதிரி விழுந்துகொண் டிருந்தன. இரண்டு நிமிஷத்தில் சாலின் அந்த முனைக்குச் சென்று பின்னுக்குத் திரும்பியது டிராக்டர். திரும்பும் போது ஸ்விட்சை முன்னுக்குத் தள்ளினான். விதைத் தூறல் நின்று

விட்டது. திரும்பியதுமே ஸ்விட்சை மறுபடியும் இழுத்தான். விதைகளைத் தூவியது துதிக்கை.

ஒரு மணி நேரத்தில் முப்பத்திரண்டு ஏக்கராச் சால்களிலும் விதை விதைப்பது முடிந்துவிட்டது.

"மாமா, உங்க வயலை உழட்டுமா?'' என்றான் ராஜு.

"வேணும், ஆகட்டும்டா. கூலிக்காரங்க பொழப்பு என்னாவறது?'' என்றார் ராமையா.

''நான் சொல்லலேடா'' என்றார் தர்மராஜு. ''நீங்க இனிமே பிச்சை எடுத்துத் தின்ன வேண்டியதுதான். சுப்பையா பண்ணையார் முந்நூறு ஏக்கரா சொந்தமா விவசாயம் பண்ண ஆரம்பிச்சிட்டாரா? இனிமே குத்தகை எடுக்கும் குடியானவாங்க என்னாவறது, கூலிக்காரங்க என்னாவறது? நம்ம ராமையா பண்ணையார் என்றும் பழைய காலத்து மனுஷனானதுனாலே எந்திரம் வெச்சி விவசாயம் பண்றதுக்கு ஒத்துக்கலே. இந்தக் கல்யாணம் நடந்து ரெண்டு குடும்பமும் ஒண்ணாயிட்டுதுன்னா மருமவன் பேச்சே எவ்வளவு காலத்துக்கு ஒத்திவைக்க முடியும்? எங்க ராமையா தான் மாத்திரம்? யெங்கன்னுக்குத் திடமா ஆசை விழுந்துதுன்னா நாளைக்கே இன்னொரு டிராக்டரெ வாங்கிடுவான். இனிமே மூட்டை முடிச்சைக் கட்டிண்டு நீங்கெல்லாம் ஊரை விட்டுப் போகவேண்டியதுதான். அதுக்குத் தாண்டா, ரஷ்யாக்காரன் விளெச்சலெ எல்லார்க்கும் சமமாப் பங்கிட்டுத் தரணும்னு சொன்னது.''

ஏரிகரையில் அரச மரத்தின் கீழே கல்லின் மேல் உட்கார்ந்து சபை நடத்திக் கொண்டிருந்தார் தர்மராஜு. சபை நடத்துவதென்றால், அங்கே சுருட்டைப் பற்ற வைத்துக் கொண்டு உட்கார்ந்து, வழியில் போவோர் வருவோர் எல்லாரையும் தனித்தனியாகப் பேரிட்டு அழைத்தார், க்ஷேமலாபங்களை விசாரிக்கப் போவதுபோல.

விவசாயக் கூலிக்காரர்களையும், குத்தகைக்காரர்களையும் ஏற்கனவே மெல்லிய பயம் கௌவிக்கொண்டிருந்தது. அது இப்போது அதிகமாகிவிட்டது. பெண்டையா, தாங்களெல்லாம் போய்ச் சுப்பையா பண்ணையார் கிட்டே இந்த விஷயத்தைப் பற்றிக் கேட்ட கட்டத்தை வர்ணிக்கலானான்:

''அவர் என்ன சொன்னார்னா, இந்த வருஷத்துக்குக் கூலிக்காரங்களைக் குறைக்கற பேச்சில்லேடா. உங்களுக்கு என்ன சேரணுமோ அதைக் குடுத்துடறேம். குத்தகைக்கு யாரு எவ்வளோ வயலு செஞ்சிக்கினிருந்தாங்களோ, அந்தப் பங்கை அவங்களுக்

குச் சேத்துடறோம். உங்க வாயிலெ மண்ணைப் போடுவமான்'னு சொன்னாருங்க. சின்னப் பண்ணையாரு சொன்னாருங்க, 'டேய் பென்னடையா, வெள்ளாமே நல்லா வந்துதுன்னா ஊர்லெ எல்லார்க்கும் லாபந்தாண்டா. ஆனால் எந்தரத்தெ வெச்சிக்கினு பயிர் பண்ண ஆரம்பிச்சப்புறம் வெவசாயத்துக்கு இவ்வளோ பேரு வேண்டிதில்லே. அதனாலெ ஜனங்க வேறெ வழி எதாவது தேடிக்கணும். ஒரு மிஷினு வாங்கித் தர்றேன், நீ பட்டணம் செருப்பு ஏன் தைக்கக் கூடாது'ன்னு சொன்னாருங்க.''

''உங்க கண்ணைத் தொடைக்கறதுக்கு இப்படிச் சொல்லுவாங்கடா. உங்களெ நிறுத்திட்டப்பறம் உங்களுக்குச் சொன்ன சகாயம் செய்யலேன்னா, நீங்க என்ன செய்ய முடியும்? முதல்லெ அந்த எந்தரம் இந்த ஊருக்கு வந்ததே ஒரு பெரிய ஆபத்துன்னு வெச்சிக்கோங்கடா.''

ஏரிகரையில் மேற்கு ஓரத்தில் இருக்கிறது அம்மன் கோவில். கிழக்கு ஓரத்தில் அரச மரத்துக்குக் கீழே பஞ்சாயத்துக் கல். பஞ்சாயத்துக் கல்லின் மேல் உட்கார்ந்து கணக்கர் சபை நடத்திக் கொண்டிருக்க, ரங்கனும் லிங்கையாவும் தண்ணீர் ஓரமாக உட்கார்ந்து, ஓட்டுச் சில்லுகளைத் தண்ணீரின் மேல் எறிந்து கொண்டிருப்பார்கள். காலையிலும் மாலையிலும் அவர்கள் இருவரும் அங்கேயே உட்காருவது வழக்கம். பக்கத்திலேயே துறை உண்டு. துறைப் படிகளுக்கு எதிர்ப் பக்கம் ஆலமரத்தின் கீழே துவைக்கும் கல் இருக்கும். பெண்கள் அந்தக் கல்லின் மேல் துணி துவைப்பார்கள். இன்னும் சில பேர் தண்ணீர் எடுத்துக்கொண்டு போவார்கள். தண்ணீரோடு கனமேறிய பானைகளையும் தவலைகளையும் தலைமேல் தூக்கி வைக்கும்போதும், பாறுங்கல்லின் மேல் நனைத்த துணிகளைத் துவைப்பதற்குக் கைகளைத் தூக்கும்போதும் பெண்களின் உடம்பு வளைவுகள் எப்படி நெளிகின்றன என்று பார்த்துக்கொண் டிருப்பார்கள் இருவரும். கொஞ்சம் கவர்ச்சியாக இருந்தால் ஓட்டுச் சில்லுகளைத் துறைப் பக்கம் வீசுவார்கள். துறைக்கு வரும் பெண்கள் எல்லோரும் ஏழைக் குடும்பங்களைச் சேர்ந்தவர்கள். வசதியான வீட்டு மனைவிமார்கள், இளம் பெண்கள் ஏரிக்கு வரமாட்டார்கள். ஏழைக் குடும்பத்துப் பெண்கள் வீட்டிலும் சொல்லிக் கொள்ள முடியாது ரங்கன் விஷயத்தை. ஆண்களும் தைரியமாக ராமையா பண்ணையாரிடம் முறையிடவும் முடியாது. ரங்கனுடைய பாதுகாப்பு முழு அளவில் லிங்கையாவுக்கு இருந்தது.

ரங்கன் ராமியைப் பார்த்தான். பச்சைப் புல் கூடையைத் தலையில் சுமந்துகொண்டு வயலிலிருந்து வந்து கொண்டிருந்தாள் ராமி. ரங்கன் ஓட்டுச் சில்லைக் குறி பார்த்து எறிந்தான். அது காற்றில் மிதந்து கொஞ்சம் குறி தப்பிவிட்டது. கூட்டுக்குள் போகும் குருவி போல வளைந்து திரும்பி, கரைமீது ஏறிக்கொண்டிருந்த கணுச்சாரி தலையில் பட்டது. அவன் எறிந்ததை ராமி பார்த்தாள்.

''அய்யோ!'' என்று கத்தினாள். அந்தப் பதற்றத்தில் தலைமீதிருந்த புல்கூடை கீழே விழுந்துவிட்டது.

''அடி படல்லேடி. குடுமிதான் நல்லாத் திடமா இருக்குதே!'' என்றார் காணுச்சாரி. ரங்கனும் லிங்கையாவும் உட்கார்ந்திருந்த இடத்துக்கு வந்தார். ரங்கனுக்கு எழுந்தால் கௌரவக் குறைவு. உட்கார்ந்திருப்பது அசம்பாவிதம். லிங்கையாவுக்குக் கௌரவமோ பெருமையோ கிடையாது. சட்டென்று எழுந்து போய்ப் பஞ்சாயத்துக் கல் அருகில் அப்பாவின் பின்னால் உட்கார்ந்து கொண்டான்.

''தப்பு ரங்கையா. தப்பான இடத்திலெ பட்டுட்டா கண்ணு போகலாம், மண்டையும் உடையலாம்'' என்றார் கணுச்சாரி, மெதுவாக இரக்கம் ததும்பும் கண்களோடு.

''தினம் இதே வேலெதான் கணுஸாரய்யா. என்னை மாதிரி துறைக்கு வர்றப் பொம்பளைங்களைப் பாத்துக் கண்ணடிக்கறது, ஓடடிக்கறது'' என்றாள் ராமி கூடையைத் தூக்கிக்கொண்டே.

''வாயெ மூடுடி. என்ன இப்படிக் கத்தறே பெரிய பண்ணையார் வீட்டுப் பையனைப் பாத்து?'' என்றார் தர்மராஜு.

''பெரிய வீட்டுக்காரங்கின்னா பெரிய புத்தி இருக்கோணும்'' என்று சொல்லிக் கொண்டே போய்விட்டாள் ராமி.

''அவளுக்குக் கொழுப்பு ஏறிப்போயிட்டுது. ஆவட்டும், சுப்பையா பண்ணையார் சோத்தெத் தின்னுக்கிட்டு'' என்றான் லிங்கையா.

ரங்கன், போய்க் கொண்டிருந்த ராமியின் பக்கம் ஆத்திரத்தோடு பார்த்தான்.

சோளப் பயிர் சாணுயரம் வளர்ந்திருந்தது. முப்பது ஏக்கராச் சதுரம் பச்சைக் காஷ்மீர்க் கம்பளம் போல இருந்தது. ஒரே உயரத்

துக்கு. கண்ணுக்கெட்டிய தூரம் வரையில் வெங்கன்னு ஏரி கரையில் உட்கார்ந்து ஆசை தீரப் பார்த்தார் வயல் பக்கம். தங்கள் நிலத்தின் பக்கம் பார்த்துக் கொண்டார். வயல் வரப்புகள் நிலத்தின் அழகுக்குத் திருஷ்டிப் பரிகாரக் கோடுகள் மாதிரி தென் பட்டன. 'ஐம்பது ஏக்கராச் சதுர வயல். நடுவில் நான்கு ஏக்கராக் கிழிசல் சூரப்ப சாஸ்திரிது. அதையும் சேத்துட்டு, நடு வரப்பெல் லாம் எடுத்தெறிஞ்சிட்டா, மிஷின் வெச்சி தண்ணி இறெச்சிப் பயிர் செஞ்சா, தான் இந்த வரப்பிலெ உக்காந்து—சே, வரப்பிலெ உக்கார்றது என்னது?—ஏரியைச் சுத்திக் கல்லு ரோடு போட்டுப் பெண்டாட்டியோடக் கார்லே வரணும். அதுலே யிருந்து இறங் கிக் கார் மேலெ சாஞ்சிக்கிட்டுப் பாப்பாங்க நிலத்தெ. அப்பொ குட்டிப் பையன் ஒருத்தன் பிறந்திருப்பான். பையனுக்குக் கார் பானெட் மேலே உக்கார்றதுன்னு ரொம்பக் குஷி. இந்த இனிய கனவுக்கு அப்பா ஒருத்தர்தான் குறுக்கே நிக்கறுர். சுப்பையா பண்ணெயார் மகன் பேச்செக் கேப்பார். தன் அப்பா கேக்க மாட்டார்.'

ஆனுல் அவருக்கு அப்பாவின் அசட்டுத்தனமான பிடி வாதத்தின் மேல் அதிருப்தியைவிட, சுப்பையா பண்ணையாரின் மிருதுவான தன்மையைப் பார்த்தால் கோபம். ராஜுவின் துணிச்சலைப் பார்த்தால் அசூயை. அவர்களுடைய வயல் பக்கம் பார்த்துக் கொண்டிருந்தால் வயிற்றெரிச்சல். நீண்ட நேரம் இந்தச் சிந்தனைகளில் விழுந்து சுருட்டுப் புகை இழுப்பதை மறந்து விட்டார். அது அணைந்துவிட்டது. கோபத்தோடு அதை வயலின் மேல் எறிந்தார். அந்த அடிக்குச் சுப்பையா பண்ணையார் வயலில் இரண்டு சோள முளைகள் உடைந்துவிட்டன. கொஞ்சம் ஆத்திரம் குறைந்தது வெங்கன்னுவுக்கு. வீட்டுக்குப் போக எழுந்தார்.

மங்கலான இருட்டு திடப்பட்டுக் கொண்டிருந்தாலும் ராமி புல் அறுத்துக்கொண்டே இருந்தாள். ஏனென்றால் அந்தப் பக்கம் மாமரத்தின் நிழலில் கங்கப்பா பிறக்கப் போகும் காராம் பசுவின் கடாக்குட்டிக்காகத் தலைக்கயிறு பிணைந்து கொண்டிருந்தான். ராமி கூடை எடுத்துக்கொண்டு எழுந்திருக்கும் வரையில் அவன் பிணைப்பு வேலை முடியாது. அவன் எழுந்திருக்கும் வரையில் ராமிக் கும் எழுந்திருக்க நினைவு இராது. அவ்வளவு பருமனுன் ஆள் தன் அருகில் வருவதற்கே வெட்கப்பட்டுக் கொண்டிருந்ததால், பயப் பட்டுக் கொண்டிருந்ததால் ராமிக்குக் குஷி, ஆனந்தம். கங்கப் பாவின் அப்பட்டமான அப்பாவித்தனம் வெளிச்சம்போல் பரவி யிருக்கும் அவன் முகத்தில். அந்த வெளிச்சத்தை எவ்வளவு நேர

மானுலும் பார்த்துக்கொண்டே உட்கார்ந்திருக்க வேண்டும் என்று தோன்றும் ராமிக்கு. கங்கப்பாவுக்கு ஏதோ செய்ய வேண்டு மென்று தோன்றும், ராமி தென்படாத போதெல்லாம். என்ன செய்ய வேண்டுமோ தெரியாது. தாகத்திஞல் தொண்டை வறண்டு போகும். கைகள் நடுங்கும். கழுத்தெல்லாம் வேர்வை யில் நனைந்துபோகும்.

பிணைந்து கொண்டிருந்த தலைக்கயிறு முறுக்கு அதிகமாகித் தடியைப் போல் சிலிர்த்து நின்றது. கங்கப்பா எழுந்தான். 'ராமி கிட்டே போகணும்னு வாய்க்கால் வரப்பு வழியா நடந்து ஏரி கரையிலெ ஏறணும். போகணுமா வேணுமா?' தலைக்கயிற்றைக் கெட்டியாகப் பிடித்துக் கொண்டான் இடது கையில். சாணைக் கல்லைப் போல் பட்டது, உள்ளங்கையில் தலைக்கயிறு. வலது கையில் தடி. கொஞ்சம் தைரியம் வந்தது கங்கப்பாவுக்கு. வாய்க்கால் வரப்பை நான்கு தப்படியில் தாண்டிவிட்டான். ஏரிகரை மேலே அதே வேகத்தில் திரும்பிஞன். நின்றுவிட்டான். ஏனென்றால் லிங்கனும் ரங்கனும் அவனுக்கு முன்ஞல் புல் அறுத்துக் கொண் டிருந்த ராமி அருகில் வந்து ஆளுக்கொரு பக்கம் நின்ருர்கள்.

''ஏ பொண்ணே, பச்செப் புல் சுமை எவ்வளவு?'' என்று கேட் டான் ரங்கன். பெண்களிடம் பேச்சுக் கொடுப்பதில் கைதேர்ந் தவன் ரங்கன். கேட்கக் கூசும் விஷயங்களை மிகவும் நாசூக்காகக் கேட்பான் ரங்கன். லிங்கனுக்கு வார்த்தை ஒன்றும் தோன்ருது. அதஞல் ரங்கனிடம் அவனுக்கு மிகமிக மரியாதை. ராமி பதில் ஏதும் சொல்லாமல் தனக்கொன்றும் சம்பந்தமில்லாததுபோல் புல் அறுப்பதை நிறுத்திவிட்டு, அறுத்த புல்லைக் கூடையில் அள்ளிப் போட்டுக் கொண்டிருந்தாள்.

''நான் அள்ளி வெக்கட்டுமா?'' என்ருன் ரங்கன். அவளுடைய பதிலை எதிர்பார்க்காமலே பச்சைப் புல்லோடு சேர்த்து அவள் கையையும் கூடைக்குள் அழுத்திவிட்டான். ரங்கனின் கன்னத்தில் பளார் என்று விழுந்தது. அந்த அடிக்கு ரங்கன் ஆடிப்போய் விட்டான். லிங்கன் இரண்டடி பின்ஞல் நகர்ந்து விட்டான். கங்கப்பா பயந்து போய்த் தன் கன்னத்தைத் தடவிக்கொண்டான்.

''தேவிடியா! எவ்வளோ கொழுப்புடி உனக்கு?'' என்று சொல் லிக்கொண்டே அவளை நோக்கி முன்னேறிஞன் ரங்கன். ஆர அமற அரிவாளை எடுத்தாள் ராமி. ரங்கன் டக்கென்று நின்றுவிட்டான்.

''இப்போ கன்னம் புளிச்சிது. இந்தத் தடவெ கிட்டே வந்தே கயித்து அறுந்து போயிடும், சாக்கிரதை'' என்ருள் ராமி.

ரங்கன் பின்வாங்கினான். லிங்கன் ராமியைத் தாண்டி ரங்கன் பக்கம் போகவேண்டும். அரிவாளைக் கையில் பிடித்திருக்கும் ராமியிடமிருந்து தப்பித்து அந்தப் பக்கம் போக முயற்சிப்பது தேவையில்லாத அபாயத்தைத் தேடிப்போவது போல. லிங்கன் மிகச் சுறுசுறுப்போடு பின்னுக்குத் திரும்பினான். யானை போன்ற கங்கப்பா, தடி ஒரு கையிலும் இன்னொரு கையில் தடியைப் போன்ற தலைக் கயிற்றையும் பிடித்துக்கொண்டு நின்றிருந்தான். திக்குத் தெரியவில்லை லிங்கனுக்கு. ஏரி வழியாக ஓட்டம் பிடித்தான். பயம் உண்டாக்கிய சக்தி, அவனைப் பத்தே பாய்ச்சலில் ஏரியின் அடுத்த கரை சேர்த்துவிட்டது. அங்கிருந்து நேராக மங்கி வீட்டுவரையில் ஒரே ஓட்டந்தான்.

''ப்ப ப...பளீ...'' என்றான் கங்கப்பா. மரம் போன்ற மனிதன் குலுங்கிவிட்டான், பெரிய புயலில் சிக்குண்டது போல. விழுந்து விழுந்து சிரிக்க அதில் வார்த்தைகள் மறைந்துகொண்டிருந்தன. இருந்தாலும் சிரிப்பும் பெருமூச்சும், இடையில் வெளிவந்த 'ரங்க... ராமி கன்னம்...பளீர்...' என்ற வார்த்தைகளும் சுப்பையா பண்ணையார் குடும்பத்துக்குக் கதையைப் பூர்த்தி செய்துவிட்டன.

''தாயில்லாத குழந்தையாச்சேன்னு ராமையத்தானும் சூராவும் குட்டிச்சுவராக்கிட்டாங்க அவனை. அவனுக்கு விழவேண்டியது தான், ஆவட்டும்'' என்றார் சுப்பையா.

மகனைப் பார்த்ததுமே, தர்மராஜுவுக்கு உள்ளங்கால் எரிச்சல் உச்சந் தலைக்கேறியது. இந்தச் சனியன் எப்போதும் வேளையில்லாத வேளையில் வந்து தொலைப்பான். அப்போதுதான் செக்கிலிருந்து இறங்கினாள் மங்கி. அவள் மைத்துனன் எள் கழுவ ஏரிக்குப் போனான். அவள் முன்றானையின் ஒரு முனையைப் பிடித்து வீட்டுக்குள் இழுத்துக்கொண்டிருந்தார் தர்மராஜு. அவள், ''அடே, இன்னாது இப்படி, உடு! நல்லா இருக்குது கொஞ்சறது'' என்று சொல்லிக்கொண்டே கோபத்தில் புன்முறுவலைச் சேர்த்துவிட்டு உள்ளே போய்க்கொண்டிருந்தாள் அவர் பின்னால். இந்த நேரங்கெட்ட நேரத்தில் வந்து சேர்ந்தான் லிங்கையா. மங்கியின் முன்றானையை விட்டு விட்டுக் கண்முன் தெரியாத கோபத்தோடு மகனை நோக்கி வந்தார் தர்மராஜு. லிங்கையாவின் ஈரத் துணிகளையும் நடுக்கத்தையும் பார்த்ததுமே தர்மராஜுவின் கோபம் இறங்கிப் போய்விட்டது.

"என்னடா மகனே, என்னயிட்டது ?'' என்ருர் தர்மராஜு.

''அ-அ-அடிச்சிட்டா!'' என்ருன் லிங்கையா. அவன் அச்சம் இன்னும் குறையவில்லே.

''யாரு?'' என்ருர் தரமராஜு.

''ராமி.''

''ஆ... உன்னே அடிச்சாளா ?''

''என்னெ யில்லே, ரங்கனெ.''

கதை கொஞ்சம் புரிந்தவுடனே, தர்மராஜு அவசரமாகப் போய்விட்டார், மகனேக் கவனிக்க வேண்டிய பொறுப்பை மங்கி யின் தலேயில் போட்டுவிட்டு. ஏனென்ருல், ஒரு கூலிக்கார னின் மகள், ஒரு பெரிய பண்ணேயார் வீட்டுப் பையனே அடித்து விட்டாள்! இதைவிட மிக முக்கியமான நிகழ்ச்சி வேறு என்ன நடக்கும் அந்த ஊரில்? இதைப் போன்ற கட்டங்கள் எதிர் வரும் போது தர்மராஜு எல்லாச் சுகங்களேயும் சல்லாபங்களேயும் தியாகம் செய்துவிட்டு, தம் சக்தி சாமர்த்தியங்கள் எல்லாவற்றை யும் அவற்றுக்குத் தாரை வார்த்து விடுவார்.

ராமி நடந்த விஷயத்தைப் பெற்ரேரிடம் சொன்னபோது, பதாலு நெருப்பாகி விட்டான். அந்தக் கோபத்தில் என்ன தகாத காரியம் செய்துவிடப் போகிருனே என்று, ராமியின் அம்மா புல்லி, மகளேக் கண்டித்தாள் ஆத்திரத்தோடு.

''பெரிய வூட்டுப் பையன்மேலே ஏண்டி கை நீட்னே?'' என்ருள்.

''கை நீட்டலேன்னு, பின்னே இன்ன செய்யச் சொல்றே? அவன் பக்கத்திலெ படுத்துக்கச் சொல்றியா?'' என்ருன் பதாலு.

''உன் கோவத்திலே கொள்ளி வைக்க. அது இல்லேடா. அவங்க பெரியவங்க கையிலே சொன்னு அவங்க புத்தி சொல்ருங்க'' என்ருள் புல்லி.

''சொல்லமாட்டேன் பின்னே. இப்பவே போயி சொல்றேன், இன்னெரு தரம் இந்த மாதிரி சில்மிஷம் பண்ணினு, காலெ ஒடிச்சிடுவேன்னு'' என்று சொல்லிக்கொண்டே பாணுத் தடியைத் தூக்கிக் கொண்டு புறப்பட்டான் பதாலு.

சின்னத் தெருச் சாவடியில் ரங்கன், வெங்கன்ன, தர்மராஜு மூவரும் நடந்துவிட்ட அநியாயத்தைப் பற்றித் தம் ஆத்திரத்தைக் கொட்டிக்கொண் டிருந்தார்கள்.

''அதில்லே வெங்கன்ன, அவ என்னமோ பெரிய பதிவிரதை மாதிரி. ரங்கன் மாதிரி ஜல்சா மனுஷன், ஏதோ சரசமாடப் போன கன்னம் புளிக்கரு மாதிரியா அடிக்கறது? முதல்லெ இந்த மாதிரி அநியாயம் இந்த ஊர்ச் சரித்திரத்தலெ எப்பவாவது நடந்

திருக்கா கேக்கறேன். பண்ணையார்மார் சொல்லி அனுப்பினு துள்ளிக் குதிச்சிண்டு வரமாட்டாளா எப்பேர்ப்பட்ட பொம்பளெயா இருந்தாலும்? ஊரெல்லாம் நாசமாப் போயிட்டது போ. சரி, அப்படியே இஷ்டமில்லேன்னாலும் 'ஐயா, என் ஜோலிக்கு வராதீங்க'ன்னு மரியாதையாச் சொல்லணுமே தவிர, இப்படிக் கை நீட்டுவாளா?'' என்று அங்கலாய்த்தார் தர்மராஜு.

''இப்போ என்னயிட்டுது, இருக்கட்டும். அவ விஷயத்தெ ரெண்டுலெ ஒண்ணு தீர்க்காமயா போறேன்?'' என்றான் ரங்கன் ரோஷத்தோடு.

''வாயெ மூட்று. அப்பாவுக்குத் தெரிஞ்சா தோலெ உரிச்சிடுவாரு. இந்த மாதிரி வேலேன்னா அவருக்குப் புடிக்கவே புடிக்காது'' என்றார் வெங்கன்னா.

அப்பாவுக்குத் தெரியவே வந்தது. ''ஏன்டா ரங்கா...'' என்று அழைத்துக்கொண்டே வந்தார். பின்னால் சற்றுத் தூரத்தில் இருந்தான் பதாலு.

''உண்மையா என்னடா நடந்துது?'' என்று கேட்டார் ராமையா.

''அதில்லே அத்தான்! ஏதோ வயசுக் கோளாறு. அந்த வயசிலே நாம எவ்வளவு செய்யலே'' என்று சமாதானப்படுத்தப் போனார் தர்மராஜு.

''வாயெ மூடுயா! ஏண்டா பேசமாட்டேங்கறே?''

''அதில்லெ பெரியப்பா. புல்லறுத்துகினு இருந்தா. கூடை எவ்வளுவுன்னு கேட்டேன். அவ்வளவுதான்'' என்றான் ரங்கன், செல்லக் குழந்தை அப்பாவிடம் சமாளிப்பதுபோல் முகத்தைத் தொங்க வைத்துக்கொண்டு.

''புல் எதுக்குடா உனக்கு? துன்றதுக்கா?''

''அய்யா! உங்க மூஞ்சியெப் பார்த்துச் சும்மா கீறுங்க ஊர்லெ எல்லாரும். தண்ணித்துறெ கிட்டெயும் சந்தையிலியும் இவரு பண்ற அக்குறும்பு கொஞ்சநஞ்ச மில்லீங்க'' என்றான் பதாலு.

''வாயெ மூட்று, பண்ணெயார்கிட்டே இப்படியா பேசறது?'' என்றார் தர்மராஜு.

''நீ சொல்ல வேண்டியது சொல்லிட்டே இல்லே, இனி நட'' என்றார் ராமையா. ஒரு கூலி வேலைக்காரன் இவ்வளவு திமிராகப் பேசுவது ராமையாவுக்குப் பிடிக்கவில்லை. ஆனால் தர்மராஜு பேசியதைக் கேட்டதும் பதாலுக்கு ஆவேசம் பொங்கிவிட்டது.

''சாமி, நாங்க எவ்வளதான் ஏழேன்னாலும் எங்களுக்கும் நல்லது கெட்டது இருக்குதுங்க. இன்னொருதரம் இந்த மாதிரி

எதஞச்சியும் நடந்ததுன்ளு .. நல்லா இருக்காதுங்க.'' கடைசி வார்த்தை சொல்லும்போது அவன் கையிலிருந்த பாளுத்தடி ஆவேசத்தோடு குலுங்கியது.

''ஏண்டா, அவ்வளவு கொழுப்பேறிப் போச்சா, சுப்பையா பண்ணேயார் சோத்தைத் தின்னுட்டு?'' என்ருர் வெங்கன்ளு. அவரை மிஞ்சவில்லே என்ருலும் ராமையாவுக்கும் வந்தது கோபம்.

''பெரியவன் நான் கேட்டுக்கிட்டிருக்கறேன். வாய்க்கு வந்தபடி பேசிக்கிட்டிருக்கறியே, என்ன கொழுப்பா? பெரியவங்க சின்ன வங்கன்னு மரியாதெ இல்லே?'' என்ருர்.

''இருக்கப் போயிதாங்க உங்க கையிலே வந்து சொல்றேன்'' என்று சொல்லிவிட்டுப் போய்விட்டான் பதாலு. அந்தப் பதிலில் பணிவு கொஞ்சமும் இல்லாததஞல் ராமையாவுக்குக் கோபம் தலேக்கேறியது. அவன் மேல் கோபத்தை ரங்கன் மேலேயும், குறுக்குவாதங்கள் சொல்ல வந்த தர்மராஜு மேலேயும் காட்டினர் ராமையா.

''செத்த பொணமே, என் மானத்தை வாங்கிக்கிட்டிருக்கறியே. ஒரு ஹரிஜன்கிட்டே பேச்சைக் கேக்கறதைவிட, ஏரியிலே விழுந்து சாவக்கூடாது.''

''என்னது அந்த மாதிரி சபிச்சிக் கொட்றீங்க?'' என்று கேட்டுக் கொண்டே வந்தாள் சூராலு.

''பச்செக் குழந்தையெ நம்பக் கையிலே வெச்சிட்டுப் போளு அவங்கம்மா.''

''அதுக்குன்னு கொழுத்துப் போன கோயில்மாடு மாதிரி ஊர்லெ திரிஞ்சா சும்மா இருக்கச் சொல்றியா? நாம சும்மா இருந்தாலும் ஊர்க்காரங்களும் சும்மா இருக்கணுமா? எப்பவோ கையெக் காலெ ஒடெச்சி உக்கார வெக்கப்போருங்க! அவ்வளவுதான்,'' என்ருர் ராமையா.

''என்ன அத்தான், அப்படிச் சொல்றே? அவன் ஒண்ணும் பண்ணலேன்னு சொல்லிண்டிருக்கான். அந்தத் திமிர் பிடிச்ச பதாலு பேச்செ நம்பிண்டு...'' என்று இன்னும் சொல்லப் போஞர் தர்மராஜு.

''நீ முதல்லெ வீட்லேருந்து நடையைக் கட்டு. பாக்கப் போளு நீதான் வம்பெ வளத்துக்கிட்டிருக்கறே?'' என்ருர் ராமையா. ஆளுல் தர்மராஜு சிரித்துக் கொண்டே உதறிவிட்டார். நிந்தனே வசவுகளே யெல்லாம் புன்முறுவலோடு உதறிவிடக் கூடிய மனப் பக்குவத்தைத் தர்மராஜு கஷ்டப்பட்டுச் சம்பாதித்துக் கொண்

டார். கணவனின் ஆவேசத்தைப் பார்த்துச் சூராலு தன் ஒப்பாரியைத் தொடங்கிவிட்டாள்.

''நீ வீட்டுக்குள்ளே போம்மா தங்கச்சி. அத்தானோட கோவம் பனவோலே எரியற மாதிரின்னு உனக்கு மட்டும் தெரியாதா?'' என்று சொல்லி உள்ளே அனுப்பிவைத்தார் தர்மராஜு. பிறகு ராமையாவின் கையைப் பிடித்துக்கொண்டு, பெரிய தெருச் சாவடிப் பக்கம் அழைத்துச் சென்றார். கொஞ்சம் தூரம் போன பிறகு மெதுவாகச் சொன்னார்:

''அவன் என்ன எல்லாத்தெயும் துறந்துவிட்ட சந்நியாசியா? உப்பு காரம் சாப்படற நம்ம எல்லார்க்கும் ஏதோ ஒரு குறை இருக்கும். இந்த வயசிலெ உன்னலெ விட முடிஞ்சிதா? பெரிய தெருச் சாவடிக்கு வரச்சொல்லி அடிக்கடி அந்த நரசம்மா தாதிக்கு ஏன் சொல்லி அனுப்பிச்சிண்டிருக்கே? பசங்களுக்கு அவ்வளவு தூரம் தெரியாதுன்னு நினைச்சிண்டிருக்கியா?''

ராமையாவுக்கு நரசம்மா தாதி பழக்கமானது, மருமகள் பிரசவிக்கும் சமயத்தில். பேரன் பிறந்து போய்விட்டான். வீட்டில் எல்லாரும் அந்தத் துக்கத்தில் மூழ்கியிருக்கும்போது, ராமையாவுக்குப் பெரிய தெருச் சாவடியில் ஆறுதல் கூறினாள் தாதி. அந்த ஆறுதலை ரங்கன் மறைவிலிருந்து முழுக்கப் பார்த்து விட்டான். அந்த விஷயம் பிறகு தெரிந்தது ராமையாவுக்கு, தாதி மூலமாக. அப்போதிலிருந்து தம் இரகசியத்தைப் பகிர்ந்து கொண்ட ரங்கனிடம் ஒரு பரிவு இருந்து வந்தது ராமையாவுக்கு. எத்தனையோ முறை ரங்கன் மூலமாகவே அந்தத் தாதிக்குச் சொல்லி அனுப்பலானார் அவர். பெரியப்பா தன்மீது அவ்வளவு நம்பிக்கை வைத்தபிறகு, தாதியின் மேல் கை வைக்க நினைக்கவில்லை ரங்கன். அதனால் தன்னை என்னதான் திட்டினாலும், ராமையா ஒன்றும் செய்ய மாட்டார், செய்ய முடியாது என்று ரங்கனுக்குத் தெரியும். ரங்கன் என்ன ஆட்டம் ஆடினாலும் ராமையாவிடமிருந்து தடை ஏதும் இல்லை. ஊர்வம்பை இழுக்காமல் ஆடினால் நன்றாக இருக்கும்.

மாசி மாதம் கிருஷ்ணபட்ச பஞ்சமி. அன்று பலவிதங்களில் ஊருக்குப் பண்டிகை நாள். பெரிய பண்ணையார் குடும்பங்கள் இரண்டும் சம்பந்தம் செய்து கொள்வதற்கென நிச்சயம் செய்து

கொள்ள இருந்தன அன்று. அதுமட்டும் அல்லாமல், அன்று அறுவடைப் பண்டிகை. விளைந்த தானியத்தையெல்லாம் வகைக்கு ஆழாக்கு வீதம் ஊர்மக்கள் மூட்டை கட்டிக்கொண்டு வருவார்கள். மல்லம்மன் கோவிலுக்கு ஒவ்வொரு குடும்பமும் ஒரு பனையோலைக் கூடையில் அம்மன் முன்னால் கறுப்பு மண்ணைப் போட்டு, மந்திரித்த தண்ணீரைத் தெளித்து, நவதானியங்களையும் கலந்து அந்தக் கூடையில் விதைப்பார்கள். அமாவாசை யன்று அம்மனுக்கு உற்சவம். அன்றைய தினம் நவதானியங்களும் முளைவிட்டிருக்கும். முளைகளுடன் கூடிய கூடைகளை உற்சவத்தன்று கோவில்மேல் அடுக்குவார்கள், ஒவ்வொரு குடும்பத்தின் பேரைச் சொல்லி. ஒரு மாத காலம் கோவில், பச்சைப் பயிர்க் கிரீடம் சூடிக் கொண்டாற்போல இருக்கும்.

லட்சுமியும், ராஜுவும் ஆளுக்கொரு கூடை எடுத்துக்கொண்டு வந்தார்கள் அம்மனுக்கருகில். இந்தப் பக்கமும் அந்தப் பக்கமும் இரண்டு குடும்பத்தினரும் நின்றார்கள். எண்ணெயால் மெருகேறிய கறுப்புத் தூண்கள் அம்மனுக்குப் பக்கத்தில் எரியும் ஜோதிகளின் வெளிச்சத்தில் மங்கலமாக மினுமினுத்தன. பொடி செய்த கருங் களிமண்ணை அவரவர் கூடைகளில் நிரப்பினர், லட்சுமியும் ராஜுவும். கணுச்சாரி நவதானியப் பொட்டலங்களை அம்மன் பாதங்களின் அருகில் வைத்தார். கண்ணை மூடிக் கொண்டு கைகூப்பி மௌனமாகப் பிரார்த்தித்தார். மந்திரித்த கலச தண்ணீரை அவர் ஊற்றிக் கொண்டிருக்க, ராஜுவும் லட்சுமியும் விரல்களைக் குறுக்கே வைத்துக் கூடைகளில் நான்கு மூலைகளும் நனையும்படியாகத் தண்ணீர் தெளித்தனர். பிறகு மிக ஜாக்கிரதையுடன் நவதானியப் பொட்டலங்களை அம்மன் பாதங்களிலிருந்து கொண்டு வந்தார். லட்சுமிக்கும் ராஜுவுக்கும் ஆளுக்கொரு பொட்டலத்தைக் கொடுத்தார். இருவரும் பொட்டலங்களைப் பிரித்துக் கூடைகளில் தெளித்தனர். அத்தனை பேர் எதிரில் ராஜுவின் பக்கத்தில் அவ்வளவு நேரம் நிற்பது லட்சுமிக்கு மிகவும் இக்கட்டாக இருந்தது. வெட்கம், பயம், பதற்றம், நாணம், கொஞ்சம் சந்தோஷம் எல்லாம் கலந்து அவள் கைகள் கொஞ்சம் நடுங்கின. நான்கு நவதானிய விதைகள் கீழே சிதறிவிட்டன. அது ஏதோ கொஞ்சம் அபசகுனம்போல் தோன்றியது லட்சுமிக்கு. கணுச்சாரி அந்த நான்கையும் பொறுக்கிக் கூடையில் போட்டார். ராஜுவும் லட்சுமியும் சாஷ்டாங்கமாக விழுந்தனர், அம்மன் முன்னால். ஆளுக்கொரு கூடையைக் கையில் எடுத்துக்கொண்டு வெளியே வந்தனர். கோவிலுக்கு வெளியே ஏரிகரை மேல்

ஏறத்தாழ ஊர் முழுவதும் திரண்டிருந்தது. அம்மன் திருவிழாவை விட முக்கியமானது ராமையாவும் சுப்பையாவும் சம்மந்தம் நிச்சயிப்பது. அம்மன் திருவிழா ஒவ்வொரு வருஷமும் வரும். இந்தச் சம்பந்தம் ஊர்ச் சரித்திரத்தில் ஒரு முறையே வரும்.''

''அப்போ எங்களுக்கு விருந்துச் சாப்பாடு எப்போ போடப் போறீங்க?'' என்று கேட்டான் கோமட்டி செட்டி ஹநுமந்து.

''அம்மன் திருவிழா முடியவேணுமா? அமாவாசை முடிஞ்சதுமே லக்னம்'' என்றார் ராமையா.

லட்சுமியை அண்ணியும் மல்லியும் ஆளுக்கொரு பக்கம் பிடித்தபடி வீட்டுக்கு அழைத்துச் சென்றனர்.

''அப்பா! அம்மன் கோயில் முழுக்க வர்ணம் அடிச்சிடலாம், அமாவாசைக்கு முன்னாடியே'' என்றார் வெங்கன்னா.

''அப்படியே பண்ணிடலாம். எவ்வளவு ஆகுதோ பாரு. பட்டணத்திலே யிருந்து வாங்கிட்டு வாங்க, நல்ல வர்ணமாப் பார்த்து'' என்றார் ராமையா.

''கோவிலைச் சுத்திச் சுவர் கட்டிக் குடுத்தடறேன்'' என்றார் சுப்பையா.

''சுவர் இருக்கட்டும். கோவிலுக்கு வர்ணம் பூசறது எதுக்கு மாமா? கறுப்புக் கல்லே கோயிலுக் கழகு'' என்றான் ராஜு.

''அதென்னப்பா அப்படிச் சொல்றே? பொம்மெ எல்லாத்துக்கும் வர்ணம் பூசினா எவ்வளவு அழகா இருக்கும்?'' என்றார் ராமையா.

''திருப்பதி கோயிலுக்கே அடிச்சாங்களே வர்ணம்'' என்றார் வெங்கன்னா. ராஜு, தன் அப்பா கட்டித் தருவதாகச் சொன்ன சுற்றுச் சுவருக்கு ஒரு தடையும் சொல்லாமல், ராமையா அடித்துத் தருவதாகச் சொன்ன வர்ணம் நன்றாக இருக்காது என்று சொன்னது அவருக்குப் பிடிக்கவில்லை. இரண்டு குடும்பத்துக்கும் இடையே ஒரு சுவாரசியமான போட்டி உண்டு. ஊரில் செல்வாக்கு சம்பந்தமான போட்டி. ராமையா பள்ளிக்கூடத்துக்கு ஒரு மனை கொடுத்தார். சுப்பையா ஒரு சாவடி கட்டிக் கொடுத்தார். ராமையா ஏரிக்குப் படிகள் கட்டினார். சுப்பையா கரையில் சந்தைக் கடைகள் கட்டித் தந்தார். பஞ்சாயத்துப் போர்டு பிரசிடென்ட் பதவியை இருவருடைய அங்கீகாரத்துடன் யாரோ ஒருவர் அநுபவித்துக்கொண் டிருப்பார். ஊர் நன்மைக்காக இருவரும் போட்டி போடுவார்கள். செல்வாக்குக்காகப் போட்டி போடுவார்கள். ஆனால் அந்தப் போட்டிகள் ஆரோக்கியமற்ற நிலைக்கு இறங்க விடமாட்டார்கள். இருவருக்கும் சுய அபிமானம் உண்டு, தன்னம்பிக்கை உண்டு, பொறுமையும் உண்டு. இருந்

தாலும் இருவரிலும் ராமையாவுக்குத் தைரியமும் பிடிவாதமும் இம்மி அளவு அதிகம். சுப்பையாவின் மிருதுவான போக்கும் ஊர் மக்களுக்குப் பிடித்தமானதே.

ராஜு அந்த விஷயம் பற்றிய வாதத்தை மேலும் வளர்த்தாமல் நவதானியக் கூடையை எடுத்துக்கொண்டு வீட்டுக்குப் போய் விட்டான்.

"உங்க மாப்பிளெ சரியான அசடு அத்தான்" என்ருர் தர்மராஜு; "எல்லாரும் கறுப்புன்னு அவன் வெளுப்புங்கருன்."

"உன்னே மாதிரி மூட்டிவுடமாட்டான், ஆவட்டும்!" என்ருர் புன்னேயா.

"அவன் நிஜம்னு நம்பறதெ அடிச்சிச் சொல்வான்" என்ருர் சுப்பையா.

"செய்யவும் செய்வான். என்ன ஆனலும் அவன்கிட்டே நெஞ்சு தைரியம் இருக்குது, நியாயம் இருக்குது" என்ருர் ராமையா, ஓரளவு வரப்போகும் மருமகனே மெச்சியபடி.

"மத்தவங்களுக்குச் சொல்றதெ எவ்வளவு நியாயமா வேணும்ஞலும் சொல்லலாம்யா. தனக்குன்னு வர்றப்போதான் வருது வம்பு. வரதட்சணே சட்டவிரோதம்னு அவ்வள தூரம் சொன்ன வன், முப்பத்திரெண்டு ஏக்கரா சீர்வரிசை வாங்கறதுக்கு ஒத்துக்கிட்டான இல்லேயா?" என்ருர் தர்மராஜு.

இந்த வரதட்சிணே விஷயம் ஊரார் எல்லார்க்கும் தெரிவது ராமையாவுக்குத் திருப்தியாகவே இருந்தது. ஆனல் இந்த ஒப்பந்தம் ராஜு இல்லாதபோது அவருக்கும் சுப்பையாவுக்கும் இடையில் நடந்தது. இந்த விஷயம் தெரிந்தால் ராஜு அப்பாவுடன் சேர்த்து தன்னேயும் துவைத்து விடுவான். இருந்தாலும் சீர்வரிசை செய்யாமல் மகளுக்குக் கல்யாணம் செய்தால் தமக்குக் கௌரவக் குறைவு. இதற்கு ஒப்புக்கொள்ள சுப்பையா மிகவும் தயங்கினர். ராமையாதான் சம்மதிக்க வைத்தார். "ரொம்ப மிஞ்சிப் போன பொண்ணு பேருலே எழுதிடறேன். நான் என் குழந்தைக்குக் குடுத்தா வேணங்கறதுக்கு அவன் யாரு?" என்று சொன்னர். ஆகவே பத்துப் பேர் நடுவில் தர்மராஜு இதைச் சொன்னதுமே, "வரதட்சணேக்கு அவன் எங்கேயா ஒத்துகிட்டான்? என் பொண்ணுக்கு நான் குடுத்துக்கறேன்னு சொன்னேன், சம்மந்தி கிட்டே" என்ருர் ராமையா.

"பீச்செக் கையிக்கு இன்னெரு பேரு இடதுகை. பொண்ணே அவங்க வீட்டுக்குப் போறப்போ, சொத்து அவர் பேர்லே இருந்தா என்ன, பொண்ணு பேர்லே இருந்தா என்ன?" என்ருர் தர்மராஜு.

இந்த விஷயம் தெரிந்தால் ராஜு இதேதான் சொல்வான் என்றும், பெண் பேரிலும் சொத்து எழுத விடமாட்டான் என்றும் ராமையாவுக்குத் தெரியும். தர்மராஜு வம்பு வளர்ப்பதற்கென்றே இந்தப் பிரச்னையை எடுத்தார் என்பதும் தெரியும்.

''கணக்கரே, உங்க மகனுக்கு ஒரு சம்பந்தம்—நல்லதோ கெட்டதோ—பாக்க முடியலே உன்னுலே. உனுக்கேன்யா எதிராளிங்க பேச்சு?'' என்று குத்திக் காட்டினர். வெறும் குத்தலுக்கெல்லாம் கணக்கர் என்றும் பின்வாங்க மாட்டார். அதைப் பற்றிக் கவலையே படமாட்டார். இருந்தாலும் ராமையா எப்போது 'கணக்கரே' என்று அழைத்தாரோ, அவருக்கு இனி கோபம் ஏறப்போகிறதென்பது கணக்கருக்குப் புரிந்துவிட்டது.

''அதைத்தான் உன்னைக் கேக்கணும்னு நினைச்சிண்டிருக்கேன் அத்தான்! என்னுலெ மூடியலே. நீயாவது முன்னெ நின்னு பாத்து அவனெ ஒரு குடும்பஸ்தன் ஆக்கிட்டேன்னு நல்லாருக்கும். ரெண்டு வேளெயும் நானே கையெச் சுட்டுக்க வேண்டி இருக்கு. பத்து வருஷமா அநுபவிச்சிண்டிருக்கேன் இந்த நரகத்தெ. பொம்பளே நாதியில்லாத வீடு சுடுகாடு மாதிரின்னு வெச்சிக்கோ'' என்று தம் குறையை முறையிடத் தொடங்கினர். கணக்கருக்கு வேறெதிலும் நியாயம் இல்லையென்றாலும் இந்த வேதனையைச் சொல்லிக் கொள்வதில் மட்டும் நியாயம் இருந்தது. தலைமுறை தலைமுறையாகத் தோய்ந்து போன லௌகீகத் திரைகளை விலக்கிக்கொண்டு அவருடைய ஆத்ம ஸ்வரம் இயற்கையாகத் தெளிவாக வெளிப்பட்டுக் கொண்டிருந்தது. அப்போது அவர் வெறும் கணக்கராக அல்லாமல், மனிதராகக் காட்சி அளித்தார். ராமையாவுக்குப் பாவமாக இருந்தது. வெட்கப்படவும் செய்தார், துரியோதனின் துடைகளை முறித்துவிட்டுப் பீமன் வெட்கப்பட்டாற் போல. மென்மையான இடத்தில் அடித்துக் கணக்கர் வாயை அடைத்துவிட்டார் அவர். அவருடைய பெருந்தன்மைக்குப் பொருத்தமில்லாத வார்த்தைகள் வந்துவிட்டன அவர் வாயிலிருந்து.

''சரிதான், அப்படியே பாத்தா போவுது. ராத்திரிக்கு நீயும் லிங்கையாவும் வாங்க பலகாரம் சாப்படலாம். ஆவட்டும், எங்க வீட்லே சாப்பிடணுங்கறதுக்காக இல்லே. பறெயங்க எல்லாரும் கூத்து நடத்தப் போருங்க'' என்ருர் ராமையா.

''நீ கூப்படணுமா அத்தான்! நாங்க வரலேன்னு கதை எப்படி நடக்கும்?'' என்று கேட்டார் தர்மராஜு.

''சகுனி யில்லாத பாரதமா?'' என்ருர் சுப்பையா.

அந்த விளாசலுக்குக் கணக்கரே முதலில் சிரித்தார்.

முன்சீப் ராமையா வீட்டு முற்றம் முழுவதும் ஜனக் கூட்டம் நிரம்பி வழிந்தது. அந்தப் பக்கம் பெரிய தெருச் சாவடியிலிருந்து இந்தப் பக்கம் சின்னத் தெருச் சாவடி வரையில் கூட்டம். களஞ்சியத்துக் கீழே மேடையில் சிலர் உட்கார்ந்திருந்தனர். களஞ்சியப் படிக்கட்டுகளில் சிலர். இரண்டு பெரிய திண்ணைகளில் சம்பந்தம் செய்து கொள்ளப் போகும் இரண்டு பண்ணையார்க் குடும்பங்களைச் சேர்ந்த ஆண்கள், மற்றும் ஊர்ப் பெரியவர்கள் எல்லாரும் உட்கார்ந்திருந்தார்கள். பெண்கள் எல்லாரும் பெரிய வாயிற்படிக்குப் பின்னாலும், திண்ணையை ஒட்டிய நான்கு பெரிய ஜன்னல்கள் பின்னாலும் உட்கார்ந்திருந்தனர்.

கிராம தேவதை மல்லம்மா ஹரிஜன வீட்டுப் பெண் ஆதலால், அவள் திருவிழாவுக்கு முன்னால், ஒரு மாதம், பறையர்கள் மேல் எந்தத் தீட்டும் கிடையாது. அவர்கள் தாராளமாக எல்லா வீடுகளுக்குள்ளும் போகலாம். எல்லாரையும் தொடலாம். ராமையா அவர்கள் எல்லார்க்கும் கள் ஊற்றிவிட்டார். பத்து ஆடுகளை வெட்டிக் குழம்பும் சோறும் போட்டார். சாப்பிட்ட சாப்பாடு செறிக்கும் வரையில், கள் போதை இறங்கும் வரையில் அவர்கள் ஆட்டமும் பாட்டும் இரவு முழுதும் நடத்திக்கொண்டே இருப்பார்கள். வழக்கமாக இந்தக் கூத்து அம்மனின் திருநாளன்று நடக்கும். இந்த ஆண்டு பெரிய பண்ணையார்கள் அன்று தாம்பூலம் மாற்றிக் கொண்டதால், இரண்டு பண்டிகைகள் வந்தன, அவர்களுக்கு. இன்று இரவு செலவு ராமையாவினுடையது. திருநாளன்று செலவு சுப்பையாவினுடையது.

களஞ்சியத்துக்குப் பின்னால் நெல் குத்தும் நீண்ட பள்ளம் உண்டு. அங்கே வேஷங்கள் போட்டுக் கொண்டார்கள் கூத்தாடிகள். ஆண்கள், பெண்கள், குழந்தைகள், கிழவர்கள் என்று எல்லாரும், ''மல்லம்மா, எங்க தாயே, கருணை காட்டம்மா தாயே!'' என்று பாடிக்கொண்டு அதற்கேற்ப நடை போட்டுக்கொண்டு வண்ண வண்ண வேஷங்கள் தரித்து வந்தனர். காஸ் லைட்டுகளும், தீவட்டிகளுமாகப் பட்டப் பகல் போல் பிரகாசமாக இருந்தது முற்றம். வீட்டிலிருந்த எலக்ட்ரிக் விளக்குகள் மினுக் மினுக் என்றன, அந்த ஒளிக்கு முன்னால்.

பாடல்கள் எல்லாம் அம்மனின் கதையும் ஸ்மரணையும் துதியுந்தான். மல்லம்மா நூறாண்டுகளுக்கு முன்னால், பறையர்ச் சேரியில், ஓர் ஓலைக் குடிசையில் அவதரித்தாள். பதினாறு ஆண்டுகள் வளர்ந்தாள், தங்க விக்கிரகம்போல். பிறந்ததிலிருந்து உயர்ந்த

நிலைதான் மல்லம்மாவுக்கு. துர்க்கையின் அவதாரம் என்றே சொன்னார்கள், சோதிடம் தெரிந்த பண்டிதர்கள். அவள் தொட்டால் நோய்கள் பறந்துவிடும், வெயில் முன்னால் பனி மறைவது போல. நினைத்துக் கொண்டால் ஆபத்துகள் விலகிவிடும். கல்யாணம் வேண்டாம் என்று சொல்லிக்கொண் டிருந்தாள். முட்டாள்களான அவள் பெற்றோர் அவளுக்கு ஒரு கல்யாணம் நிச்சயம் செய்தனர். கல்யாணத்துக்கு மூன்று நாள் இருந்தன. அழுதாள். பகலெல்லாம் அழுதாள். இரவு பெரிய காற்றும் மழையும் வந்தது. அம்மனின் அழுகைதான் மழை. சிவனின் ஆவேசந்தான் காற்று. லிங்க மடு பொங்கியது. ஊரெல்லாம் விழித்துக் கொண்டது, அந்த இரைச்சலுக்கு. ஆற்றங்கரை இனி உடைந்துவிடும். ஊரைக் கொண்டு போய்விடும், கரை உடைந்தால். பெரிய மின்னல் பிளந்தது வானத்தை. அதன் வெளிச்சத்தில் ஆற்றங்கரை மேல் மல்லம்மா தென்பட்டாள்.

''சாமி! கோவம் வேண்டாம், நான் வந்துட்றேன் உன்கிட்டே. என்னை அழெச்சிக்கிட்டு இந்த ஊரைக் காப்பாத்திடு!'' என்ற மல்லம்மாவின் கடைசி வார்த்தைகள் வானமெல்லாம் பரவி ஊரெல்லாம் கேட்டன. மல்லம்மா பொங்கிய ஆற்றில் குதித்தாள். சட்டென்று குறைந்துவிட்டது காற்று; மழை நின்று விட்டது. ஆறு தணிந்துவிட்டது. காலையில் மல்லம்மாவைத் தேடினர். வண்டல் படிந்த பழைய மண்ணில், சரியாக அவள் ஆற்றில் குதித்த இடத்தில் கிடைத்தது, மல்லம்மாவின் உயரத்துக்குக் கல் விக்ரகம். மும்மூர்த்திகளும் அந்த மல்லம்மன் தான். படிப்படியாக, ஆறு ஊருக்குத் தூரமாகப் பின்வாங்கியது. இப்போது கிராமத்தின் வயல்களுக்கு அந்தப் பக்கம் உள்ளது ஆறு. ஆறு இருந்த இடத்தில் பெரிய ஏரி காட்சியளித்தது. ஆற்றங்கரை விசாலமான ஏரிகரை ஆகிவிட்டது. மல்லம்மன் ஏரிகரை மேல் கோவிலில் கொலுவேறினாள். அன்றிலிருந்து இன்று வரையில் ஆறு பொங்கவில்லை. அடை மழையோ மழையில்லாமையோ அறிந்ததில்லை அந்த ஊர். எல்லாம் மல்லம்மன் தயவு.

கள் போதை, வேஷக்காரர்களுக்குப் பூரண ஈடுபாட்டைக் கைக்கொடுத்து உதவியது. வரிசை தவறாமல் தாளம் பிசகாமல் நாற்பது பேர் ஆண்கள் பெண்கள் ஒரே நொடியில் துள்ளி, ஒரே குரலில் பாடினர். புனிதமான அந்தப் பக்தி ஆவேசம் பார்த்துக் கொண்டிருந்த எல்லாரையும் உலுக்கிவிட்டது.

அதன் பிறகு சசிரேகை கல்யாணம் நாடகம். ராமி சசிரேகை; பதாலு பலராமன். இலக்கிய மொழியில் எழுதப்பட்ட உரை

யாடல் கிராமத்து உச்சரிப்பு என்னும் கிண்ணத்தில் விழுந்து புனிதமடைந்தது. கணீரென்று ஒலிக்கும் குரல்கள் ஊர்க்கோடி வரைக்கும் கேட்டன. சசிரேகை கல்யாணம் முடிந்துவிட்டது. கடைசியில் மங்களம்; எல்லாரும் சேர்ந்து பாடும் கோஷ்டி கானம். அப்போது வேஷக்காரர்கள் பார்ப்பவர்கள் என்ற வித்தியாசம் இல்லை. புல்லி, சின்னத் தெருச் சாவடியில் உட்கார்ந்திருந்த மங்கம்மாவை இழுத்தாள் அரங்கத்துக்கு. மங்கியைப் பார்த்து லிங்கையா குதித்தான். அவனைத் தடுப்பதற்குப் போன தர்மராஜுவைக் கும்பல் ஓர் ஆட்டம் ஆட்டிவிட்டது. அதற்கப்பறம் வேஷக்காரர்கள் ஒவ்வொரு பெரியவரையும் பெயரிட்டுக் கூப்பிட்டார்கள். கூப்பிடப்பட்டவர்கள் அரங்கத்தில் இறங்கவில்லை என்றால் அவமரியாதை. அன்றிரவு பெரியவர்கள் சிறியவர்கள் என்ற தராதரம் கிடையாது. வெங்கன்ன, புன்னையா, ரங்கன், மல்லி, கங்கப்பா எல்லாரும் சேர்ந்து கொண்டார்கள், கடைசிப் பல்லவியில். அவர்கள் உற்சாகத்தைப் பார்த்துத் திண்ணையை விட்டு ராஜு இறங்கினான். சிரிப்பை அடக்க முடியாமல் குலுக்கிக் கொண்டிருந்த லட்சுமியை, சுந்தரம்மா முன்னுக்குத் தள்ளினாள் ஆனால் அவள் வெட்கத்தோடு சர்ரென்று ஓடிவிட்டாள், தன் மாடி அறைக்கு. தலையணையில் முகத்தைப் புதைத்துக்கொண்டு வயிறு வெடிக்கச் சிரித்தாள். அதற்கப்பறம் அறைக்கு வெளியே இருந்த சின்ன பால்கனியில் நின்றுகொண்டு பார்த்தாள். அந்தப் பால்கனி தெற்குப் பக்கத்துப் புழக்கடையைப் பார்த்து இருந்தாலும், வீட்டு முன்பக்க முற்றத்தில் உட்கார்ந்தால் தேவையான அளவு தெரியும்.

முற்றம் இருண்டுவிட்டது. எல்லாரும் போய்விட்டார்கள். பனியில் நனைந்த குளிர்க் காற்று நடுங்க வைத்தாலும், லட்சுமி பால்கனியில் அப்படியே உட்கார்ந்திருந்தாள். முற்றத்தில் ஆனந்தம் தாண்டவமாடுவது போலவே இருந்தது லட்சுமிக்கு இன்னமும். பல்லவி கேட்டுக்கொண்டே இருந்தது. அந்தக் காட்சி எத்தனை நாளானாலும் மறைந்துவிடாது அவள் மனத்தில் பால்கனியில் பாதிவரையில் மேலே படர்ந்த ஜாதிமல்லிப் பந்தல் அடர்ந்து படர்ந்திருந்தது. அடர்ந்த இலைப்பச்சை நிறக் கொத்தான இலைகளின் நடுவில் மெல்லிய வெள்ளை மொட்டுகள் கொத்துக் கொத்தாக இருந்தன. ஈரமான குளிர்க் காற்றில் வாசனை குறைந்திருந்தாலும், வரப்போகும் வசந்தகாலப் பருவம் அவற்றில் மெதுவாக எட்டிப் பார்த்துக்கொண்டிருந்தது. லட்சுமி

நெஞ்சு நிறைய இல்லாத வாசனையை மோந்து கொண்டாள். நெஞ்சில் நிறைந்தவை கடந்துபோன வெப்பமான நாட்களின் நினைவுகள்; வர இருக்கும் நாட்களின் ஆசைகள்.

ஊரில் இவ்வளவு ஆடம்பரம் எந்தத் திருவிழாவுக்கும் இருந்த தில்லை. முகூர்த்தம் குறிக்கப்படவில்லை என்றாலும் கல்யாண ஏற்பாடுகள் தடபுடலாக நடந்துகொண் டிருந்தன. இந்தக் கல் யாணம் எல்லாருக்கும் பொதுவானதுதான், அம்மனுக்குக் கூட. ஊரெல்லாம் அவரவர்கள் வீட்டைச் சீர்ப்படுத்திக் கொண்டார் கள், வெள்ளை அடித்துக் கொண்டார்கள். அம்மன் கோயிலுக்கு மதிற் சுவர் எழுந்தது. கோவிலுக்குக் கண்ணைப் பறிக்கும் வர்ணங் களைப் பூசினார்கள். மழைக்குக் கரையாத வர்ணங்கள், பட்டணத்தி லிருந்து வாங்கி வந்தார்கள், ரங்கனும் லிங்கையாவும். 'அப்பாடா, எவ்வளவு களையா இருக்குது கோவில் இப்போ!' என்றார்கள் ஊர்க்காரர்கள். கணுச்சாரிக்கு மட்டும் இந்த வர்ணங் கள் படாடோபமாகத் தென்பட்டன. முன்பு எப்போதோ கதை சொன்னவர் சொன்ன வார்த்தைகள் கணுச்சாரிக்கு ஞாபகம் வந்தன; மிகவும் அர்த்தம் பொதிந்த வார்த்தைகள்.

'உபநிஷத்துகளில் கடவுள் குணமற்றவர், உருவமற்றவர். புராணங்களில் கடவுள், மனிதர்களைப் போலவே கோப தாப மத மாத்சர்யங்களுடன் காணப்படுகிறார்கள். ஆனால் அவர்கள் பக்தர்களின் கோரிக்கைகளை நிறைவேற்றக் கூடியவர்கள்; அதனால் மதிப்புக்குரியவர்கள். இன்னும், சின்னச் சின்னக் கற்களில் சில் லறைத் தேவதைகள் எத்தனையோ கோடி. அவரவர் சம்பிரதா யத்தை ஒட்டி, தத்தம் கடவுளுக்கு உருவத்தையும் குணங்களையும் உண்டாக்கி வந்தார்கள். சிலர் கப்பி அமைத்துக் கொடுத்த மகாத்மாவில் பகவானைத் தரிசிக்கிறார்கள். இன்னும் சிலருக்குக் கடவுள் என்றால் வண்ண வண்ண ஆடைகள் ஆபரணங்கள் தரித்த செல்வச் சீமான்தான்.'

பெரிய பண்ணையார் இருவருக்கும் தாராளம், தன்னம்பிக்கை யுடன், கொஞ்சம் அகங்காரமும், வெளிப்பகட்டில் ஓரளவு மவுசும் இருந்தன. கோவிலுக்கு வர்ணங்கள் அடிப்பதில் ராஜு ஒருவனுக் குத்தான் இஷ்டம் இல்லை. மற்ற எல்லார்க்கும் அது தேவை யென்றே பட்டது.

கணுச்சாரிக்குக்கூட, மல்லம்மன் உபநிஷத்துக்களில் சொல்லப் பட்ட பர தத்துவம் அல்ல; அவள் மேன்மையான கன்னி. ஆடம்பர மின்மையும், கருணையும், தியாக உணர்ச்சியுமே அவளுடையு

லட்சணங்கள். கஞ்சாரிக்கு அவள் அந்த ஊரின் மகள். ஓர் உருவத்தில் இந்தக் கரைமீது நடனமாடினாள். மறுபடியும் பிறப்பாள், தேவையானால், ஊருக்கு ஆபத்து வந்தால்.

மல்லம்மா, கோவிலுக்குப் பின்னால் உட்கார்ந்து அத்தானுக்குக் கடிதம் எழுதிக் கொண்டிருந்தாள். மிக முக்கியமான விசேஷம் இருந்தது அன்று. அத்தானுக்குத் தெரியும் இருந்தாலும் எழுத வேண்டியது தன் கடமை. காராப் பசு கன்று போட்டது. தான் நினைத்ததுபோலவே கடாக்கன்றுதான். கடிதம் எழுதிக் கவரில் வைத்துக்கொண்டிருந்தாள், பழைய கடிதங்களோடுகூட. கஞ்சாரி பொன்னரளிப் பூக்களைப் பறித்துக்கொண்டு வந்தார் அவள் அருகில்.

''என்னம்மா! படிக்கறதுக்கு வர்றதில்லையே?'' என்று கேட்டார்

''படிப்புத்தான் வந்துட்டுதே'' என்றாள் மல்லி.

''எழுதறது கூடத்தான்!'' என்றார் கஞ்சாரி. மல்லியின் புன் சிரிப்பு ஈரமாகக் கண்களில் பளிச்சிட்டது. கஞ்சாரியிடம் மட்டும் அவள் எதையும் வேண்டுமென்று மறைப்பதில்லை. தானாகவே சொல்ல மாட்டாள். தன் ரகசியங்கள் அவருக்குத் தெரிந்துவிட்டாலும் வெட்கப்பட மாட்டாள். அவருடைய பேச்சில் அவ்வப்போது இனிமையான நகைச்சுவை இருக்கும். பரிகாசம் எப்போதும் தொனிக்காது. மல்லி, அத்தானுக்கு எழுதிய கடித விஷயம் அவருக்குத் தெரியும். அவை ராஜுவுக்கு என்றும் சேராதென்றும் தெரியும். இருந்தாலும் மல்லம்மாவுக்கு அவை எவ்வளவு முக்கியமானவை என்றும் கஞ்சாரிக்குத் தெரியும்.

மல்லம்மா சுயமாகத் திரட்டுப்பால் செய்தாள். காராம் பசுவின் பால் எவ்வளவு திடமானதென்றும், அதில் எவ்வளவு சாதாரணப் பால் கலந்தால் திரட்டுப் பால் நன்றாகத் திரண்டுவரும் என்பதும் அவளுக்குத் தெரியும். அத்தான் திரட்டுப் பாலை மெச்சினார். கொஞ்சம் எடுத்து வேறு கிண்ணத்தில் வைத்துக்கொண்டு ஓட்டம் பிடித்தாள் மல்லி. எங்கே என்பது ராஜுவுக்குப் புரிந்தது.

தெருவழியாகப் புறாப்போல் பறந்தாள் மல்லி. வளைந்த பழைய படிக்கட்டில் மிக அலட்சியமாக விரைந்தேறினாள். லட்சுமியின் அறையில் காற்றுப் போல் நுழைந்தாள். கதவை மூடினாள். லட்சுமி பால்கனியில் உட்கார்ந்திருந்தாள், காற்று வாங்கியபடி முற்றத்தைப் பார்த்துக்கொண்டே.

''திரட்டுப்பால். காராம் பசுது. நல்லா இருக்குதுன்னார் அத்தான்'' என்றாள் மல்லி, கிண்ணத்தை லட்சுமியிடம் கொடுத்துக்கொண்டே. லட்சுமியின் கண்களில் திருப்தியும் நன்றியும்

பளிச்சிட்டன. கொஞ்சம் சின்ன ஸ்பூனில் எடுத்து மல்லி வாயருகில் கொண்டு போனாள்.

''உனக்குத்தான்'' என்றாள் மல்லி.

''பரவால்லே, சாப்பிடு!'' என்றாள் லட்சுமி.

இரண்டு பேரும் கொஞ்சம் கொஞ்சம் ருசி பார்த்தார்கள். இனிப்பாக இருந்தது. ராஜு மீதே இருந்தது இரண்டு பேரின் நினைப்பும்.

'எவ்வளவு நல்ல ஜோடி—ராஜு அத்தானும் லச்சுமி அக்காவும்' என்று நினைத்தாள் மல்லி.

'மல்லிக்கு நல்ல புருஷன் கிடைக்கணும். ஆனா மாமியார் வீட்டுக்குப் போயிட்டா எனக்கு எப்படிப் பொழுது போவும்? அவர் எப்படிக் காலம் தள்ளுவார்?' என்று நினைத்தாள் லட்சுமி. தன்னை அறியாமலே ராஜு, மல்லி மேல் எவ்வளவு அன்பு வைத்திருக்கிறான் என்பதை லட்சுமி கிரகித்திருந்தாள். 'அவர் குளிக்கப் போறப்போ எப்பவும் துண்டை மறக்கறது வழக்கம் அவர் கேக்காமலே மல்லி அதைக் கொண்டுபோய்க் கிணற்றுச் சுவர் மேல் வைப்பாள். ராஜு சாதம் சாப்பிடறப்போ எப்பவும் ஏதோ கவனமா இருப்பார். யாரும் கவனிக்கலேன்னா சாப்பிட்டு முடிக்கறதுக்கு முன்னாடியே தட்டில் கை கழுவிவிடுவார். அவ கிட்டேயிருந்தா வயிறு நிறையச் சாப்பிடுவார். வயலுக்குப் போறப்போ செருப்பை அவர் கால் முன்னாடி வைப்பாள் மல்லி ஏன்னா, முந்தின ராத்ரி எங்கே விட்டாரோ அது அவருக்கு ஞாபகம் இருக்காது. அசந்தர்ப்பமா மல்லி மட்டும் வீட்லெ இல்லேன்னா வேலைக்காரங்களும் தானுமாச் சேர்ந்து வீடெல்லாம் ஜலிச்சிடுவாங்க செருப்புக்காக. எதிர்லே இருக்கறதே தென்படாது அவருக்கு.' இவை எல்லாவற்றையும் சந்திக்கிறப்போதெல்லாம் மல்லி சொல்லிக் கொண்டிருப்பாள் லட்சுமிக்கு.

''அத்தான் இப்போ வயலுக்குப் போவார். தலைப்பா தென்படலேன்னா தலைகீழா குதிப்பார்'' என்று சொல்லிவிட்டு விர்ரென்று போய்விட்டாள் மல்லி ராஜுவின் பழக்க வழக்கங்களைச் சுவாரசியமாக நினைத்துக்கொண்டே அறைக்குள் போனாள் லட்சுமி. ஜன்னலில் இருந்தது நவதானியங்கள் நட்ட பனங்கூடை அடர்த்தியாக, பச்சையாக முளைகள் தென்பட்டன. அவற்றை உதட்டால் தொடவேண்டும் என்று தோன்றவே முன்னால் சாய்ந்தாள். பயமும் வெட்கமும் அவளைப் பின்னுக்கு இழுத்தன. கூஜாவிலிருந்த தண்ணீரை அவற்றின் மேல் தெளித்துவிட்டுப் பால்கனியில் போய் உட்கார்ந்து கொண்டாள்.

ஏரிகரை யெல்லாம் வண்ண வண்ணத் தோரணங்கள். இலை யாலும் காகிதத்தாலும் கட்டிய தோரணங்கள். ஒரு சின்ன ரங்க ராட்டினம், கோவிலுக்குப் பின்னுல் தோட்டத்தில் முளைத்தது. பொம்மைக் கடைகள் பட்டணத்திலிருந்து வந்தன. தங்களுக்கு வேண்டிய வெண்கலப் பாத்திரங்களைத் திருவிழாவில் வாங்கிக் கொள்வார்கள் ஊர் ஜனங்கள். தெற்கே இருந்து வரும் வெண் கலப் பாத்திரங்கள். பட்டுத் துணிக் கடைகளும், மிட்டாய்க் கடைகளும் கயிற்றுக் கட்டில்களின் மேல் முளைத்தன. ரகரகமான பலூன்கள்—வண்ண வண்ணப் பலூன்கள். ஊர் ஜனங்களும் சுற்றுப் பக்கத்து ஊர் மக்களும் அந்த ஏரிகரைமேல் குழுமியிருந் தார்கள்.

ராமி, புடத்தடு கையைப் பிடித்துக்கொண்டு கடைகளைச் சுற்றிக் காட்டிக் கொண்டிருந்தாள். அவள் பின்னுலேயே பழியாகச் சுற்றிக்கொண் டிருந்தனர், ரங்கனும் லிங்கையா வும். மங்கியைச் சுற்றிச் செக்கு மாடுபோல் சுற்றினுர் கொஞ்ச நேரம் தர்மராஜு. திருவிழா எல்லாக் கூச்சங்களுக்கும் விடுதலை அளிக்கும். திருவிழாவில் ஆணும் பெண்ணும் இடித்துக் கொண்டே திரிந்தாலும் தப்பு இல்லை. சம்பிரதாயச் சள்ளைகளினுல் தோன்றிய தீராத கோரிக்கைகளுக்கு விடுதலை கொடுக்கிறது திருவிழா. ரங்கனின் சாகசத் திருவிளையாடல்களுக்குப் பொருத்த மான இடம் அன்றைய ஏரிகரை.

ராமி கடலை வாங்கிக் கொடுத்துக்கொண் டிருந்தாள் புடத் தடுவுக்கு. குனிந்து கடலை மிட்டாய் பொறுக்கிக்கொண் டிருந்த போது திடீரென்று அவளுடைய பாவாடை பின்பக்கம் தீப்பிடித்தது.

''என்ன வேலெயா அது?'' என்று இன்னமும் ஏதோ சொல்லப் போனுன், எதிர் வரிசையிலிருந்த சோடாக் கடைக்காரன். ரங்கன் கோபக் கனல் தெறிக்கப் பார்த்தான் அவனை. பக்கத்துக் கடைக்காரன் சோடாக்காரனை எச்சரித்தான், காதில் இரகசிய மாகச் சொல்லி. அந்த ஊரில் ரங்கனின் செல்வாக்குச் சோடாக்காரனுக்குத் தெரியாது. எல்லாம் கண்ணிமைப்பதற்குள் நடந்துவிட்டது. கொஞ்சம் பெட்ரோல் பட்டதோ என்னவோ பாவாடை எரிந்து சர்ரென்று ஜுவாலை எழுந்தது. கங்கப்பா அப்படியே வந்து விழுந்தான், பாவாடை மேலே. ஜுவாலையைக் கையால் தேய்த்து அணைத்தானே, உடம்பாலேயே நசுக்கிவிட் டானே? ஒரு முழம் அளவு பாவாடை எரிந்துவிட்டது. ராமியின் இரண்டு காலிலும் சின்னச் சின்னக் கொப்புளங்கள் கிளம்பின,

கங்கப்பா கையிலும் மார்பிலும் அங்கங்கே கருகியிருந்தது. இடது கன்னத்தில் சின்னக் கொப்புளம் எழுந்தது. ருத்ரன் போல வந்தான், தடியும் கையுமாகப் பதாலு.

"யார் இந்தச் சில்மிஷ வேலெ பண்ணது? யாரது?" என்றான், எல்லாப் பக்கமும் சுற்றிப் பார்த்து. ரங்கன் மேல் பார்வையை நிறுத்தினான். ரங்கனின் கண்கள் தாழவில்லை. யாரும் சொல்ல வில்லை, இந்தத் தவறான காரியத்தைச் செய்தது யாரென்று. பதாலு ரங்கனை உற்றுப் பார்த்துக்கொண்டே, "அவன் யாருன்னு தெரியாமப் போவுதா? ராவுக்குள்ள அவனை முட்டிக்கு முட்டித் தட்டி உக்கார வெக்கலேன்னா என் பேரு பதாலு இல்லே" என்று சொல்லிவிட்டு, அந்தக் கோபத்திலேயே போய் விட்டான்.

"எவ்வள கொழுப்பு இந்தப் பறப்பய மவனுக்கு?" என்றான் ரங்கன், பதாலு போன பிறகு.

கோவிலில் பூஜை நடந்து கொண்டிருந்தது. பெரிய பண்ணையார் இரண்டு பேரும் ஆளுக்கொரு ஆட்டுக் கடாவைப் பலி கொடுத்தனர் அம்மனுக்கு. கடாக்களுக்கு மஞ்சள் பூசி, குங்குமம் வைக்கும்போது லட்சுமிக்குத் தலைசுற்றுவது போலிருந்தது. மல்லி மட்டும் பிரகாசமான கண்களோடு பார்த்துக் கொண்டிருந்தாள். ராஜுவுக்கு அம்மன் என்றால் அவ்வளவு பக்தியும் இல்லை, அலட்சியமும் இல்லை. எல்லாப் பண்டிகைகளைப் போலவே இது ஒரு பண்டிகை. பலி கொடுப்பது அவனுக்கு அவ்வளவு பயங்கரமாகத் தென்படாது. தினம் சமைப்பதற்காகக் கோழியோ, ஆடோ அறுத்துக் கொண்டிருப்பார்கள் வீட்டில். இந்தப் பலியும் அது போன்றதுதான் அவனைப் பொறுத்தவரை. பழக்கமான, தேவையான ஜீவஹிம்சை அது.

கடாக்களின் ரத்தத்தைப் பெரிய கடாய்களில் பிடித்து அம்மன் முன்னால் வைத்தார் கணேச்சாரி. கைகூப்பித் தியானத்தோடு பிரார்த்தனை செய்யத் தொடங்கினர். சுப்பையா பண்ணையாரும் ராமையா பண்ணையாரும் சந்தோஷமாகப் பேசிக்கொண்டிருந்தனர்.

திருவிழாவில் தர்மராஜு மிகவும் அவசர அவசரமாகத் திரிந்து கொண்டிருந்தார். ராமியின் பாவாடை தீப்பிடித்தது, பதாலு ரங்கனை மனத்தில் வைத்துக் கொண்டு பகிரங்கமாக எச்சரிக்கை விட்டது—இதெல்லாம் நடந்த பிறகு அவருக்குத் தலைக்கு மேலே வேலை வந்துவிட்டது. கோவிலுக்குப் பின்னால் ரங்கராட்டினம்

பக்கத்தில் வெங்கன்னாவோடும் ரங்கனோடும் ஆலோசனைகள் நடத்தினார் முதலில்.

''ராத்ரிக்குள்ளே ரங்கனோட முட்டியெத் தட்டிடுவேன்னு அவ்வள பப்ளிக்காக் கத்திட்டுப் போனானே அந்தப் பறப்பொணம்! காலம் எவ்வள கெட்டுப் போயிட்டுதுடா வெங்கன்னா? இருட்றதுக்குள்ளே நாம அவன் முட்டியெத் தட்டிப் போடலேன்னா இனிமே நம்ம கௌரவம் என்னாவறது?''

பண்ணையார் ரெண்டு பேருக்கும், ராஜுவுக்கும், பெண்களுக்கும் தெரியாமலே உள்ளுக்குள்ளே சதியொன்று புகைந்து கொண்டிருந்தது. ராஜுவின் அண்ணன், புன்னையா அந்தக் கிசுகிசுப்புக்களை பார்த்தான். இருந்தாலும் அது ஏதோ அபாயத்துக்கு அறிகுறி என்று நினைக்கவேயில்லை.

ஊர்ஜனங்கள் கோவில் முன் இரண்டு வரிசையாக ஒதுங்கி நின்றார்கள். ஒவ்வொருவர் கையிலும் முளைவிட்ட நவதானியக் கூடை இருந்தது. முதலில் நின்றிருந்தார்கள் லட்சுமியும் ராஜுவும். ஒவ்வொருவராகக் கூடையைக் கோவிலுக்கு மேலே வீசி எறிவார்கள். மண்டபத்தின் மேல் நின்றுகொண்டு ஆட்கள் அந்தக் கூடைகளைப் பிடித்துக் கொள்வார்கள். கோவில் மேல் அழகாக அடுக்குவார்கள். பெரிய குடும்பங்கள் எல்லாவற்றிற்கும் கோவில் மேல் கூடைகள் வைப்பதற்கான இடங்கள் தலைமுறை தலைமுறையாக நிர்ணயமாய் விட்டன. மல்லம்மன் ஹரிஜன வீட்டுப் பெண் ஆனதால், கோவில் மேலே ஏறுவதற்குப் ஹரிஜனங்களுக்கே அருகதை இருந்தது, ஆசாரத்தை ஒட்டி. பதாலு ஒரு பக்கத்திலிருந்து ஏறப்போனான், இன்னொரு பக்கத்திலிருந்து ரங்கன் ஏறினான் மண்டபத்தின்மேல்.

''டேய், டேய்!'' என்று கத்தினார் ராமையா.

''பரவால்லே அத்தான்! பதாலு ஒருத்தன் இருக்கான்லே ஹரிஜன். இருந்தாலும் காலத்தெ அனுசரிச்சி ஆசாரங்க மாறிண்டிருக்கணும்'' என்றார் தர்மராஜு. கருணாச்சாரி தடையொன்றும் சொல்லவில்லை. சில ஆசாரங்களைப் பொறுத்தவரையில் அவருக்கு அழுத்தமான பிடிப்பிருந்தாலும், சில ஆசாரங்கள் அர்த்தம் இல்லாதவை என்பது அவருடைய நம்பிக்கை. மல்லம்மன் பறையர் வீட்டுப் பெண் என்றாலும் எல்லாக் குலத்தார்க்கும் பொதுவான தெய்வம். அவளுடைய சேவையில் பறையர்க்குச் சில பிரத்தியேக உரிமைகளும், அருகதைகளும் இருப்பது அவளுடைய பெருந்தன்மைக்குச் சில வேலிகள் போடுவதுபோல இருந்தது அவர் பார்வையில். ஆகவே, தாமாகவே பழைய ஆசாரங்களைக் குலைக்க

வில்லை என்றாலும், யாராவது முன்நின்றால் அந்த ஆசாரங்கள் அவ்வளவு முக்கியமானவை அல்ல என்று மாற்றத்தை ஆமோதிப்பார் கணுச்சாரி.

''கணக்கர் சொல்றது நியாயந்தான். ரங்கையா ஆசைப் படறான். சின்னவங்களுக்கு அம்மன் மேலெ அக்கறை பொறக்கணுமே தவிர, ஆசாரங்க மாறினா என்ன ஆயிடப் போவுதுங்க?'' என்றார்.

ராஜு வீசிய கூடையைப் பதாலு பிடித்துக் கொண்டான். லட்சுமி வீசிய கூடையை ரங்கன் பிடித்துக் கொண்டான். இரண்டு பேரும் இரண்டு கூடைகளை எடுத்துக்கொண்டு, மண்டபத்தின் பின் பக்கம் நடந்து போனார்கள். அதனால் கோவில் மேல் அந்த இரண்டு கூடைகளையும் வைக்கும்போது என்ன நடந்ததோ? கீழே இருந்த யாருக்கும் தெரியாது. ஒரு கூடை மட்டும் துள்ளிக் கீழே வந்து விழுந்தது. முளைகளின் இடுப்புகள் முறிந்துவிட்டன. இந்த அபசகுனத்தைப் பார்த்து நெஞ்சம் அதிர்ச்சி யடைந்தது. அதை உற்றுப் பார்த்துக் கொண்டிருந்த மக்களுக்கு மேலே ஆசை தீர அடித்துக் கொண்டிருந்த பதாலுவும் ரங்கனும் தென்பட்டார்கள். ராமையாவுக்கு முதலில் தென்பட்டது, பதாலு ரங்கனின் கன்னத்தில் பளீரென்று அறைந்ததுதான்.

''எங்க பண்ணெயார் கூடெயெ கீழெ எறியறயா?'' என்று கத்தினான் பதாலு.

''எங்க கூடெயெ வெக்கற எடத்திலெ உங்க கூடெயெ வெக்கறியேடா?'' என்று சொல்லிக் கண்மண் தெரியாமல் குத்திக் கொண்டிருந்தான் ரங்கன், பதாலுவை. வெங்கன்னாவும், புன்னையாவும் ஆளுக்கொரு பக்கமாக ஏறினார்கள் மேலே. புன்னையா இரண்டு பேரையும் பிரிப்பதற்கு முயற்சிக்கும்போது, ரங்கனின் முஷ்டி குறி தவறி அவருடைய புருவத்தின் மேல் பட்டது. புன்னையா கோபத்தை அடக்க முடியாமல் ரங்கனைச் செம்மையாக உதைக்கத் தொடங்கினார். வெங்கன்னா தடியால் பதாலு மண்டையை உடைக்கப் போனார். அவன் அந்தத் தடியை லாகவமாகப் பிடித்துக்கொண்டு உலுக்கியதும் பிடி நழுவி, துள்ளிக் கீழே வந்து விழுந்தார். ராஜுவும் இன்னும் நாலு பேரும் பிடிக்கவில்லை என்றால் எலும்புகள் முறிந்திருக்கும். ஆனால் யார் சொன்னாலும் கேட்காமல், தலைகால் தெரியாத கோபத்தோடு மண்டபத்தின் மேல் ஏறினார் வெங்கன்னா. ராஜு இன்னொரு தூணைப் பிடித்துக் கொண்டு ஏறினான். லட்சுமியின் இதயம் நின்றுவிட்டது.

''வேலைக்காரனுக்கு இவ்வளவு கொழுப்பா?'' என்றார் ராமையா.

''ரங்கன் மாதிரி ரௌடிக் கழுதையைக் கோவில் மேலே ஏன் ஏற விட்டீங்க?'' என்றார் சுப்பையா. புனிதமான தம் கூடையை மண்ணோடு மண்ணாக்கியதற்கு ரங்கனை அவரால் எப்போதும் மன்னிக்க முடியாது. தர்மராஜு சண்டையை நிறுத்துவதற்கு முன்னால் வருவதுபோல வந்துகொண்டே, பத்துப் பேர் கைகளி லிருந்த கூடைகளைக் கீழே தள்ளிவிட்டார். மேலே பின்னிப் பிணைந்து ஒருவரையொருவர் அடித்துக் கொண்டிருந்த நாலு பேரையும் பிரிப்பதென்பது ராஜுவால் முடியவில்லை. கீழே பாணாத் தடிகளை தாங்கிக் கொண்டு, முப்பது நாற்பது பண்ணை யாட்கள் கூட்டத்தைத் தள்ளிக் கொண்டே முன்னேக்கி வந்து கொண்டிருந்தார்கள். குறுக்கே வந்தவர்களை அடிக்கப் போக, அடிபட்டவர்கள் எதிர்க்கத் தொடங்கினார்கள். கைக்கலப்பு பெண்கள் பக்கமாக நகர்ந்து கொண்டிருந்தது. ராஜு கீழே குதித்தான், லட்சுமியைப் பத்திரமான இடத்தில் சேர்க்க வேண்டும் என்று. சுப்பையாவும் ராமையாவும் உரக்கக் கத்திக் கொண்டிருந்தனர். பண்ணையார்களின் குரல்கள் அந்தக் கொந் தளிப்பில் முழுகிப் பலவீனமாகிவிட்டன. தர்மராஜுவின் குரல் மட்டும் ராமையாவின் காதில் விழுந்தது.

''பார் அத்தான்! இவ்வளவு வயசாயும் சுப்பையாப் பண்ணெ யாருக்கு ஏதாவது புத்தி இருக்கா? சண்டையை நிறுத்தறதுக்குப் பாக்காமெ ரங்கனைக் கொண்ணுடுங்கோன்னு கத்திண்டிருக்கார்'' என்றார். மக்கள் வெள்ளம் சுழலாகச் சுழன்று வந்தது. அந்தப் பிரவாகத்தில் சுப்பையா பண்ணையார் முகத்தைப் பார்த்தால், தர்மராஜு சொன்ன வார்த்தைகளே அவர் வாயிலிருந்து கேட்டனபோல் இருந்தது ராமையாவுக்கும்.

கூட்டம் பெண்களையும் குழந்தைகளையும் புயல் போலச் சூழ்ந்து கொண்டது. மூச்சு விடமுடியாமல் திணறிப் போனார்கள் மக்கள். ராஜு அந்த வெள்ளம் போன்ற ஜனப்பிரவாகத்துக்கு எதிராக நீந்தி, லட்சுமியிடம் போவதற்கு முயற்சி செய்தான். ஆனால் அவன் முயற்சி செய்யச் செய்ய ஜனப்பிரவாகம் இருவரையும் தூரமாகத் தள்ளிவிட்டது. மல்லி மட்டும் லட்சுமி பக்கத்தில் நெருங்கி விட்டதைப் பார்த்து ராஜு பெருமூச்சு விட்டான்.

அன்றுவரையில் சில ஆண்டுகளாகவே போலீஸின் தேவை ஏற்படவில்லை, அந்தக் கிராமத்துக்கு. திருவிழாவில் சின்னச் சின்னத் திருட்டுகள் நடக்காமல் பார்த்துக் கொள்வதற்கு இரண்டு போலீஸ்காரர்கள் மட்டும் வந்திருந்தார்கள். பட்டணம் சென்று ஒரு பட்டாளத்தை அழைத்து வருவதற்கு நேரம் இல்லை. ஒரு

போலீஸ்காரன் கொஞ்சம் புத்திசாலி—துப்பாக்கியை எடுத்துக் கொண்டு மண்டபத்தின் மேல் ஏறினன். காற்றிலே ஒரு தடவை சுட்டான். சட்டென்று சத்தம் அடங்கியது. அதற்குப் பிறகு மண்டபத்தின் மேல் அடித்துக்கொண் டிருந்த பதாலு, புன்னையா, ரங்கன், வெங்கன்னு ஆகியோரைப் பார்த்துக் கூறினன்.

''நிறுத்தறீங்களா, இல்லே சுடச் சொல்றீங்களா?'' என்ருன். எதற்கும் அஞ்சாத பட்டிக்காட்டு ஜனத்துக்குத் துப்பாக்கியைப் பார்த்தால் பயம். நாலு பேரும் கீழே இறங்கிவிட்டார்கள்.

''ஏரிகரை மேலே ஒரு ஈ காக்காகூடத் தென்படக்கூடாது. அவங் கவங்க வீட்டுக்குப் போய்ச் சேருங்க'' என்ருன். ராமையாவும் சுப்பையாவும் கோபமாக ஒருவரை ஒருவர் பார்த்துக் கொண் டனர். ஏதோ சொல்லப் போனர்கள். ராஜு, ''அப்பா! வீட்டைப் பாத்து நட'' என்ருன். பண்ணையார்கள் இரண்டு பேரும் ஆளுக்கொரு பக்கம் நடந்து போனர்கள். ஜனமும் கலையத் தொடங்கியது. வெள்ளம் துவம்சம் செய்த ஊரைப் போல் இருந்தது ஏரிகரை.

கூட்டம் காலி செய்த திருவிழாக் களத்தில், நசுங்கிப்போன நவதானியக் கூடைகளும், சின்னபின்னமான கடைகளுமே மிஞ்சி யிருந்தன. அந்தக் குருக்ஷேத்திரத்தைப் பார்க்க முடியவில்லை கணக்காரியால். கோவிலில் மல்லம்மனை நோக்கி, கண்ணீரால் குருடாகிவிட்ட கண்களோடு, மௌனமாகத் தன் இதய வேதனையை வெளியிட்டுக் கொண்டார்.

மாலையில் ஊரில் வந்து இறங்கினர், ஒரு சப்-இன்ஸ்பெக்டர். அவருடன் ஐம்பது போலீஸ்காரர் அடங்கிய பட்டாளமும் வந்தது. ராமையா வீட்டுக்குப் போனர் எஸ். ஐ. ராமையாவுக்கு இந்த அடிதடி மிகவும் அவமானமாகப் பட்டது. இவ்வளவு வாழ்வு வாழ்ந்த தம்மால் அந்த அடிதடியை நிறுத்த முடியவில்லை. கடைசி யில் ஒரு போலீஸ்காரன் தமக்கும் சேர்த்துக் கட்டளையிடும் நிலைக்கு வந்துவிட்டதே காலம். ஊர் மீதும், போலீஸ் மீதும், எல்லார் மீதும் அவருக்குக் கோபம் வந்தது.

''ஐயா! நீங்க ரெண்டு பெரிய மனுஷங்களும் சேர்ந்து ஊரை ஒரு நல்ல வழியிலே கொண்டுபோய்க்கிட்டிருந்தீங்க இதுவரைக் கும். நீங்க ரெண்டு பேரும் தகராறு வளத்துக்கிட்டா ஊருக்குத் தான் கெடுதல். ஏதாவது மனஸ்தாபம் இருந்துதுன்னு நல்ல படியா விட்டுக் கொடுத்துக்கிட்டா எல்லாத்துக்கும் நல்லது. இல்லேன்னு நாங்க வந்து ஊரிலே கலாட்ட நடக்காமெ பார்த் துக்கவேண்டி வரும்'' என்ருர் எஸ். ஐ. ராமையாவிடம்.

ராமையாக்கு இது சரியென்றே பட்டது என்றாலும், இன்ஸ்பெக்டர் தோரணைதான் பிடிக்கவில்லை. இந்த ஊரில் தாம் வைத்ததுதான் சட்டம். பெரிய அதிகாரி மாதிரி வந்து தன்னைப் போன்ற பெரிய மனுஷனைப் பயமுறுத்துவதா என்று கோபம் சர்ரென்று வந்தது. அவர் பதில் சொல்வதற்கு முன் வெங்கன்னு திடுதிப்பென்று எழுந்தார்.

''தெம்பிருந்தா, அந்தப் பதாலுவையும் புன்னையாவையும் பிடிச்சி விலங்கெ மாட்டுயா. எங்க வீட்டுக்கு வந்து விரட்றியே என்னமோ?''

இன்ஸ்பெக்டர் லேசாகப் புன்முறுவல் பூத்தார்.

''அரெஸ்ட் பண்றதுன்னு வந்தா, அவங்களோட சேத்து உங்களெயும் உங்க தம்பியையும் அரெஸ்ட் பண்ணனும்'' என்றார் இன்ஸ்பெக்டர்.

''என்ன சொன்னே?'' என்று கத்தினான் ரங்கன்.

இன்ஸ்பெக்டர் மறுபடியும் லேசாகப் புன்முறுவல் பூத்தார்.

''உங்கக் கோவமெல்லாம் அடங்கனப்பறம் மறுபடியும் வந்து பாக்கறேன். அதுக்குள்ளே மறுபடியும் கலாட்டா ஆரம்பிச்சி துன்னு சந்தேகத்துக் குரியவங்க எல்லாரையும் பிடிக்க வேண்டியிருக்கும். அந்த நிலமெ மட்டும் வராமப் பாத்துக்கங்க.''

இன்ஸ்பெக்டர் போய்விட்டார். அந்த வீட்டுக்கு வந்து எந்த அதிகாரியும் அந்த மாதிரி பேசியது கிடையாது, ராமையாவிடம். அவருடைய வார்த்தையை இதுவரையில் யாரும் சந்தேகித்தது கிடையாது. ஆனால், இந்தச் சந்தர்ப்பத்தில் எது நிஜம், எது பொய், தாம் என்ன சொல்ல வேண்டும் என்பன எல்லாம் அவருக்கு ஒன்றும் தோன்றவில்லை. அதிகாரிகள் மேலும், சுப்பையா பண்ணையாரின் ஆட்கள் மேலும் அளவு கடந்த ஆத்திரமும், கோபமும் மட்டுமே மிஞ்சின, அவர் மனத்தில். சொல்லப் போனால் கோவில் மீது மூண்ட தகராறு திருவிழா முழுவதும் எப்படிப் பரவியதோ அவருக்குப் புரியவில்லை. சுப்பையா வேலையிலிருந்து எடுத்துவிட்ட கூலியாட்களைத் தர்மராஜு தூண்டிவிட்டாரோ என்ற சந்தேகம் அவர் மனத்தில் ஆழப் பதிந்தது. அதில் கொஞ்சம் பங்கு தன் மகனுக்கும் ரங்கனுக்குங்கூட இருக்கலாம் என்ற சந்தேகமும் அவர் மனத்தில் எழாமல் இல்லை. ஆனால் அவர்கள் எல்லாரும் 'ராமையா பண்ணையார்க்கு ஜே!' என்று கூச்சல் போட்டதும், இதெல்லாம் தம்முடைய தூண்டுதல் என்று நம்பி, சுப்பையா உரக்கக் கத்தியதே அவருக்கு மிகவும் கோபத்தைத் தூண்டியது. சுப்பையா கத்தியது முழுவதும் அந்த ஆரவாரத்தில் கேட்கவில்லை.

'ராமையா பண்ணையார் துணைக்கு ஆள் சேத்துக்கட்டும்'..? என்று சொன்னது மட்டும் காதில் விழுந்தது. சுப்பையா பண்ணையார் அப்படிக் கத்துவதற்கு முன்னால் தம்மிடம் ஏன் கேட்டிருக்கக் கூடாது? பத்துப் பேர் நடுவுலே கத்தி ஆர்ப்பாட்டம் பண்ணணுமா? தன் விஷயம் தெரியாது அவருக்கு?''

தர்மராஜு மங்கியை மறந்துவிட்டார். அவர் அறிவு சாணை பிடித்த அரிவாள்மணை. எவ்வளவு பெரிய பூசணிக்காய் கிடைக்கிறதோ அவ்வளவு சந்தோஷம் அரிவாள்மணைக்கு. இந்த ஊரில் அவருடைய அறிவாற்றலுக்கு இவ்வளவு நல்ல வாய்ப்பு இது வரையில் கிடைக்கவில்லை.

ஆனால் ஊரெல்லாம் அல்லோலகல்லோலம் செய்ய வேண்டுமென்றோ, இரண்டு குடும்பங்களும் ஒன்றாகாமல் செய்ய வேண்டுமென்றோ ஒரு தெளிவான முடிவு ஒன்றும் அவர் மனத்தில் ஏற்படவில்லை. கடைசியில் ராஜுவுக்கும் லட்சுமிக்கும் கல்யாணம் நடக்க வேண்டும். நடந்தே தீரும். ஆனால் அது அவ்வளவு அமைதியாக முடிந்துவிட்டால் அவரால் பொறுக்க முடியாது. அவருடைய எண்ணங்களுக்கும் வார்த்தைகளுக்கும் ஒரு விசித்திரமான விரோதம் உண்டு. இருப்பதாகவே அவருக்குத் தெரியாது. எங்கோ உள்ளே அடங்கிப் போயிருந்த ஓர் அழுத்தம் அவருடைய வாயிலிருந்து குத்தலான சொற்களை உதிர்க்கும்.

அவர் சுப்பையா பண்ணையார் வீட்டுக்குப் போனது நல்லெண்ணத்தோடுதான். கோஷ்டிகளும் பூசல்களும் இரண்டு இளைஞர் வாழ்க்கையைப் பாழாக்கிவிடும் என்றும், இந்த இரண்டு பெரிய குடும்பங்களும் நடந்ததை மறந்துவிட்டு ஒற்றுமையாக இருந்தால் ஊருக்கே நல்லது என்றும் சொல்லும் எண்ணத்தோடுதான் புறப்பட்டார். ஆனால் அவர் கண்ணில் பட்டதுமே ராஜு சொன்னான் :

''என்னய்யா கணக்கரே! மிச்சம் மீதியிருக்கற பயிர் வேலையை எல்லாம் டிராக்டரெ வெச்சே பாத்துக்கறோம். இன்னும் இருக்கற கூலிக்காரங்ககூட அவங்க வயத்துப்பாட்டெ அவங்களே பாத்துக்கறுங்களா? இல்லே எல்லாரெயும் எங்க ராமையா மாமா உக்கார வெச்சி சோறு போடறுரா கேட்டுக்கோ?''

ஆனால் தர்மராஜு, 'ராமையா அத்தானுக்கு இதுலே ஒரு சம்பந்தமும் இல்லை'ன்னு சொல்வதற்குப் பதிலாக, ''அதில்லே ராஜு! திடீர்னு அவா வயத்திலெ மண்ணைப் போட்டா அவா வயிறு எரியாது பின்னே?'' என்றார்.

5

''அதனாலெதான், வயித்தெரிச்சலெத் தீக்கறதுக்குக் கள்ளுத் தண்ணியெ ஊத்தனாரில்லே மாமா'' என்றான் ராஜு.

''முதல்லெ இதெல்லாம் அந்தப் பதாலுப் பய ரங்கன் மேலே கை வெச்சதனாலெ வந்ததப்பா'' என்றார் தர்மராஜு.

''அவன் செஞ்ச வேலெக்கி நானா யிருந்தா அம்மனுக்கு அப்பவே பலி குடுத்துட்டிருப்பேன். என் கூடையைக் கீழெ எறியரானா அவன்?'' என்றான் ராஜு கோபமாக.

தர்மராஜு, ராமைய பண்ணையார் வீட்டுக்கு வந்தார்.

''அத்தான்! அந்த ராஜுவும், புன்னையாவும் சேந்துண்டு நம்ம எல்லார் மேலேயும் மண்ணை வாரித் தூத்திண்டிருந்தாலக் கேக்க முடியாமப் போயிட்டேன். ரங்கனை முறுக்கிவிட்டு நீதான் நவ தானியக் கூடையெக் கீழே எறியச் சொன்னியாம். அவர் வேலையிலெருந்து எடுத்துட்ட கூலிக்காரங்களுக்குக் கள்ளெ ஊத்தி அவா மேலே ஏவிவிட்டியாம். போவட்டும், பயலுக ஏதோ கோவத்திலெ சொல்லிட்டாங்க. பெரியவராச்சேன்னு சுப்பை யண்ணாகிட்டே சொன்னேன்; 'நீரும் எங்க அத்தானும் சம்மந்தி ஆகப்போறேள். இந்தப் பகை ரெண்டு பேருக்குமே நல்லதில்லே. ஒரு தடவை எங்க அத்தான் கிட்டே வந்து பேசு. பெரியவா நீங்க ரெண்டு பேரும் ஒத்துப் போகலேன்னா ரெண்டு பேருக்குமே கெடு தல்தான்னு.' கிளிக்குச் சொல்றா மாதிரி சொன்னா, மகன் பேச்சுக்குத்தான் ஒத்து ஊதறாரே தவிர, வேறொண்ணும் பேச மாட்டேங்கறார்! இன்னும் சொல்றார். 'உங்க ராமையா அத்தான் கால்லே வந்து விழலேன்னா எனக்கு ஒண்ணும் நடக்காதுன்னு நினைச்சிண்டிருக்கியா? போ, போ! நல்லாச் சமாதானம் பண்ண வந்துட்டே'ங்கறார்?''

''அப்படீன்னா அப்பவெ வந்து தன் கால்லே விழச் சொல்றாரா?'' என்றார் வெங்கன்னா.

''அதில்லே வெங்கன்னா, நம்ம வீட்டுப் பொண்ணெ அந்த வீட்லெ குடுக்கப் போறோம்...''

''அதுக்காக, பெரியப்பாவை மானத்தை விட்டுடச் சொல்றியா? இந்த மாதிரி சம்பந்தம் எங்க தங்கச்சிக்குக் கிடைக்காமப் போவாது, ஆவட்டும்!'' என்றான் ரங்கன்.

''வாயெ மூட்றா'' என்றார் ராமையா.

ஆனால் மகள் கல்யாணத்துக்காகத் தன்மானத்தை இழப்பதற்கு அவரும் ஒப்புக்கொள்ள மாட்டார். திருவிழாவில் அடிதடி நடந்ததுக்குப் பிறகு இந்தக் கேள்வி அவர் மனத்தில் தலைதூக்கிக் கொண்டே இருந்தாலும், இதுவரையில் அந்தப் பிரச்னையை

யாரும் எழுப்பவில்லை. ரங்கன் எழுப்பியது ராமையாவுக்கு ஒரு வகையில் திருப்தியாகவே இருந்தது.

கதவுக்குப் பின்னால் நின்று இந்தப் பேச்சையெல்லாம் கேட்டாள் லட்சுமி. அவளுடைய உதடுகள் துடித்தன. கண்களைக் கண்ணீர்த் திரைகள் மூடிவிட்டன. கண்ணை மூடிக்கொண்டு ஓட்டம் பிடித்தாள், மாடியில் தன் அறைக்கு. பழக்கமான படிக்கட்டில் கால்கள் தடுமாறவில்லை. அறைக்குள் சென்று கதவைத் தாழிட்டுக் கொண்டாள். பால்கனியில் பொத்தென்று விழுந்தாள். ஜாதி மல்லிப் புதர் கன்னத்தில் சில்லென்று பட்டது. இரவு விழுந்த பனி இன்னும் காயவில்லை. லட்சுமியின் உடம்பெல்லாம் பனியில் சில்லென்று ஆகிவிட்டது. மாடிக்கு ஓடிக்கொண்டிருந்த மகளைப் பார்த்தாள் சூராலு. இரக்கமும் ஆத்திரமும் தொண்டை வரையில் பொங்கியது. திண்ணைக்கு வந்து சொன்னாள்:

''உங்க சண்டையிலெயும், பிடிவாதத்துலேயும் சின்னப் பொண்ணு கழுத்தை அறுக்கறீங்களா?''

''போ உள்ளே. எல்லாம் தெரிஞ்சவ மாதிரி பேசவந்துட்டே!'' என்றார் ராமையா. சொன்னாரே தவிர, மனைவியின் வேதனை அவருக்கும் இல்லாமல் இல்லை. ''ஆனா சுப்பையாவிடம் முகங் கொடுத்துப் பேசறது எப்படி? தூது போறதுக்குத் தர்மராஜு சரியான ஆள் இல்லே. கெடுக்கறதுக்கு அவரெ விட்டா வேறே ஆள் கிடையாது.'' தலைப்பாகையை இடையில் சுற்றிக்கொண்டு புறப்பட்டார் ராமையா. கூடப் புறப்பட்ட தர்மராஜுவை வர வேண்டாம் என்று தடுத்துவிட்டார்.

அம்மன் கோவில் முற்றத்தில் உட்கார்ந்திருந்தார் ராமையா. சுப்பையாவுக்குச் சொல்லி அனுப்பியிருந்தார் கணுச்சாரி மூலம். சுப்பையா வந்தார். ராமையாவும் சுப்பையாவும் ஒருவரை ஒருவர் பார்த்துக்கொண்டிருந்தனர். யார் தொடங்கணும், என்ன பேசணும் என்று இரண்டு பேருக்கும் தெரியவில்லை. இந்த இக்கட்டான நிலையில் கணுச்சாரி இரண்டு பேரையும் பார்த்துச் சொன்னார்.

''ஊருக்குப் பெரியவங்க நீங்க ரெண்டு பேரும். தப்பு யாருதோ ஒப்பு யாருதோ அம்மனுக்குத்தான் தெரியும். மனஸ்தாபம் வந்துட்டா எதிரொளி செய்வதெல்லாம் தப்பாத்தான் தெரியும்.

எல்லாத்தையும் மறந்துவிட்டு, அம்மன் திருவிழாவை மறுபடியும் நடத்திடுங்க. முடிவு செஞ்ச கல்யாணத்தைச் சீக்கிரமாப் பண்ணிடுங்க. அம்மன் அநுக்கிரகம் பண்ணுவாங்க.''

''அதுக்குத்தானே நான் சொல்லி அனுப்பிச்சேன்'' என்றார் ராமையா.

''நான் மாத்திரம்? நீ சொல்லி அனுப்பிச்சா வந்தேன்லே, வர மாட்டேன்னு அடம் பிடிக்கலியே!'' என்றார் சுப்பையா.

கணுச்சாரி மனம் கொஞ்சம் அமைதி அடைந்தது. கொஞ்ச நேரம் அதற்குப் பிறகு யாரும் பேசவில்லை. சுப்பையா சொன்னார் கடைசியில், ''அத்தான்! கல்யாணத்துக்கு லக்னம் குறிச்சிடு'' என்று.

''அப்படியே செய்றேன்!'' என்றார் ராமையா.

பெரிய சுமை இறங்கிவிட்டது. இரண்டு பேரும் ஒருவரை ஒருவர் தழுவிக் கொள்வதற்கென எழுந்து நின்றார்கள். அப்போது வந்தான் பாதலு. அவன் நெற்றியில் இரத்தம் வழிந்திருந்தது.

''எங்கடேசு, கூட ஒரு பத்துப் பேரோட நம்ம கல்யாணப் பம்ப்லேருந்து வெள்ளாமெயைத் தள்ளிக்கினு போறாங்க. நாங்க குறுக்கே போனோம். அடி தடியாயிட்டுது'' என்றான்.

''பட்டப் பகல்லே வெள்ளாமெயைத் தள்ளிக்கிட்டுப் போக வந்தாங்களா? எங்கே இருந்து வந்துது அவுங்களுக்கு இவ்வளவு தைரியம்?'' என்றார் சுப்பையா.

''அவங்க வயலு வரப்புலே நின்னுக்கினு சிரிச்சிகினே பாத்துகினிருக்காங்க, யெங்க்கையா பண்ணெயாரும், ரங்கயா பண்ணெயாரும்'' என்றான் பதாலு.

''அவங்க ரெண்டுபேரும் தூண்டிவிட்டாங்கன்னு சொல்றியா?'' என்று சத்தமாகக் கேட்டார் ராமையா.

''வேணும்னு புத்தி சொல்ல வேணும்? எங்க ஆளுங்க வந்து உங்க வெள்ளாமெ தள்ளிக்கிட்டுப் போனா நீ சும்மா இருப்பியா?'' என்று கேட்டார் சுப்பையா.

''அவங்க வயத்திலெ அடிச்சிட்டே. அதனலெ அவங்க துணிஞ்சிட்டாங்க'' என்றார் ராமையா.

''உன் ஆதரவு இருக்குதுன்னு சொல்லு இந்த லுச்சா வேலைக்கி'' என்றார் சுப்பையா.

ராமையா விர்ரென்று போய்விட்டார். கணுச்சாரி மௌனமாக அம்மன் முகத்தைப் பார்க்கலானார்.

''யெங்கடேசு ஆப்பட்லீங்க. பென்டையாவெப் பிடிச்சிப் போலீஸ்லெ குடுத்துட்டோம்'' என்றான் பதாலு.

சுப்பையா பண்ணையார் பதாலுவோடு வயல்பக்கம் போனார்.

இன்ஸ்பெக்டரும், போலீஸ்காரர்களும் திருட்டு நடந்த இடத்தில் விசாரணை நடத்திக்கொண்டிருந்தார்கள். அகப்பட்டுக்கொண்ட பென்டையா தனக்கு இதெல்லாம் ஒன்றுமே தெரியாதென்றும், வயல் வரப்பு மேலே நடந்து போனபோது அநியாயமாகத் தன்னைப் பிடித்து அடித்தார்களென்றும் சொல்லிக்கொண்டிருந்தான். ராஜுவுக்குக் கோபம் வந்தது. பென்டையா கன்னத்தில் ஓங்கி அறைந்தான்.

''எங்க பொறுப்புலே இருக்கற கைதியை அடிக்கறதுக்கு உங்களுக்கு உரிமையில்லே'' என்றார் இன்ஸ்பெக்டர்.

''உதைக்கலேன்னா அவன் உண்மையைச் சொல்வானா?'' என்றார் சுப்பையா.

''அது சட்டத்துக்கு விரோதம்'' என்றார் இன்ஸ்பெக்டர்.

''ஆகா, சட்டமாம் சட்டம்! அவங்க வெள்ளாமையைத் தள்ளிக்கிட்டுப் போனப்போ உங்க சட்டம் எதாவது குறுக்கே வந்து நின்னுதா?'' என்று கேட்டார் சுப்பையா.

''நீங்க கம்ப்ளெய்ன்ட் எழுதிக் குடுங்க. கேஸ் போடறோம்'' என்றார் இன்ஸ்பெக்டர்.

''நாங்க வழக்குப் போட்டுட்டுப் பட்டணம் பக்கம் திரிஞ்சிகிட்டிருந்தா எங்க வீடுவாசலைப் பாக்கறது யாருங்க? நாங்க ஒண்ணும் கேஸ் போடமாட்டோம். நீங்களே போட்டுக்கங்க'' என்று சொல்லிவிட்டுப் போய்விட்டார் சுப்பையா.

ஏரிகரை மேல் நின்றிருந்தான் ராஜு. தூரத்தில் மேட்டின் மேல் இருந்தது புளியமரம். அந்த மரத்தில் சாய்ந்து நின்றிருந்தாள் லட்சுமி. வயலுக்கு எப்போது வந்தாலும் நெட்டிப் புதர்கள் நடுவில் ராணி போல் நடந்து வருவாள். கொஞ்ச காலமாக வருவதையே நிறுத்தியிருந்தாள். இப்பவும் நெட்டிப் புதர்கள் அசைந்தால் அவள் நடப்பது போலவே இருக்கும். புளியங்கொம்பால் நெட்டிப் புதர்களின் உச்சியில் அடித்துக்கொண்டே நடப்பாள். ஈச்சங் குச்சியால் நெட்டிப் பூக்களை உதிர்த்துக்கொண்டே நடந்தான் ராஜு. தெற்கு நிலத்தில் மாந்தோப்பு; தன் புது வீட்டைப் பார்த்து நான்கு நாட்களாகிவிட்டன. அவன் கால்கள் மெதுவாக அங்கே அழைத்துச் சென்றன. தோட்டத்துக்கு மேற்கே அடர்த்தியாக இருக்கும் நீண்ட அடைப்பு உண்டு. அந்த அடைப்பில், கள்ளி, தாழம்புதர்கள். அந்தப் பக்கம் ராமையா பண்ணையாரின் ஆரஞ்சுத் தோட்டம். பேரு ஆரஞ்சுத் தோட்டம் என்றாலும், அதில் மாமரங்களே அதிகம்.

ஏரிகரையிலிருந்து தன் புது வீட்டுக்கு வரவேண்டும் என்றால், ராமையா பண்ணையாரின் தோட்டத்தின் குறுக்கே வரவேண்டும். அடைப்பில் தேவையான இடத்திலெல்லாம் பாதைகள் உண்டு. இப்போது அவன் சுற்றுப் பாதையிலேயே வந்தான். ராமையா பண்ணையாரின் நிலத்தில் கால் வைக்க அவனுக்கு விருப்பம் இல்லை.

தன் தோட்டத்துக்கு வந்த பிறகு பார்த்தால் அடைப்புக்கு நடுவில் பாதைகளுக்குக் குறுக்கே உயரமாக வேலி போட்டிருந்தது தென்பட்டது. அவன் நெஞ்சு சுருக்கென்றது. இரண்டு குடும்பங்களுக்கும் நடுவில் வேலிகள் முளைத்து விட்டன. ஊருக்கு நடுவிலேயே பெரிய வேலி முளைத்து விட்டது, ஊரை இரண்டாகப் பிரித்துக் கொண்டு. பெருமூச்சு விட்டுக்கொண்டே தன் புது வீட்டருகே வந்தான்.

அன்று இரவு நிலா வெளிச்சத்தில் லட்சுமியை அந்த வீட்டுக்கு அழைத்து வந்தான். அந்தக் காட்சி இன்னமும் கண் முன்னாலேயே இருந்தது. அப்போது சுவர்கள் முழுவதும் எழவில்லை. இப்போது வீடு ஏறத்தாழ முடிந்து விட்டது. அம்மன் திருவிழா முடிந்ததுமே கல்யாணம், அதற்குப் பிறகு கிருகப்பிரவேசம் என்று எண்ணியிருந்தார்கள். திருவிழா நடக்கவில்லை. இனி மேல் கல்யாணம், கிருகப்பிரவேசம் எப்படி நடக்கும்? வெள்ளை அடிப்பது ஒன்றுதான் பாக்கி வீட்டுக்கு தெற்குப் பக்கம் புழக்கடையில் பம்ப்புகூடப் போட்டுவிட்டான். செய்ய நினைத்ததையெல்லாம் லட்சுமிக்குக் காட்டுவது போலவே தோன்றியது ராஜுவுக்கு. கையைப் பிடித்துக்கொண்டு புழக்கடைக்கு அழைத்துப் போகும்போது, கையை இழுத்துக் கொள்ளவும் முடியாமல், தன் கையிலேயே விட்டுவைக்கவும் முடியாமல் எவ்வளவு வெட்கப் பட்டாள் லட்சுமி! எவ்வளவு இன்பமான வெட்கம் அது!

ராஜு தெற்குப் புழக்கடைக்கு வந்து சேர்ந்தான். தன் கண்களைத் தானே நம்ப முடியவில்லை. லட்சுமி சப்போட்டா மரத்தில் சாய்ந்துகொண்டு வீட்டுப் பக்கம் வெறித்துப் பார்த்துக்கொண்டிருந்தாள். அது கனவோ என்று ஒரு விநாடி நினைத்தான். லட்சுமி தன்னைப் பார்த்து ஓடத் தொடங்கவே அப்போது அது கனவு அல்ல என்று அர்த்தமாகியது அவனுக்கு.

"லட்ச்மீ!'' என்று கூப்பிட்டான்.

படபடப்புடன் நின்றாள். ராஜு அருகில் சென்றான். தோள் மேல் கைவைக்கப் போனான். அவள் திடுக்கிட்டாள். இருந்தாலும் நகர முடியாமல் போய்விட்டாள்.

''வீடு எப்படி முடிஞ்சிருக்குதுனு பாக்க வந்தியா?'' என்றான், சாதாரணமாகப் பேசுவதற்கு முயற்சி செய்து கொண்டே. இல்லை யென்று பலமாகத் தலையாட்டினாள் லட்சுமி. வெட்கம் போய்விட்டது லட்சுமிக்கு. முதல் தடவையாக அவனுடைய கண்களைத் தயங்காமல் பார்த்தாள். அந்தப் பார்வையில் முந்திய நாணம் இல்லை. ஆத்திரம் இருந்தது. ஆத்திரத்தினால் வந்த துணிச்சல் இருந்தது.

''எங்க தோட்டத்துக்கும் உங்க தோட்டத்துக்கும் நடுவுலே வேலி போட்டுட்டாங்க'' என்றாள்.

''பார்த்தேன்'' என்றான் ராஜு

''அதை எப்படி எடுக்கறது?'' என்று கேட்டாள் லட்சுமி

அந்தக் கேள்விக்குப் பதில் ராஜுவுக்குத் தெரியாது.

சமையலுக்கு எலுமிச்சம் பழத்துக்காக வந்தாள் மல்லி. குரல் கேட்கவே, தெற்குப் புழக்கடை பக்கம் பார்த்தாள். அவள் இதயம் தொண்டையில் வந்து அடைத்துக் கொண்டது. படபடப்போடு ஓடினாள், சத்தம் செய்யாமல். அடுத்த தோட்டத்திலிருந்து ராமையா பண்ணையாரின் ஆட்கள் யாராவது பார்த்து விட்டால்! இப்படியும் அப்படியும் பார்த்தாள். தூரத்தில் வாழைத் தோட்டத்தில் இலை அறுத்துக் கொண்டிருந்தான் கங்கப்பா. அவனைக் கண்டதும் மல்லி ஓட்டம் பிடித்தாள்.

''டேய் அண்ணா, லச்சிமி அக்காவும் அத்தானும் புது வீட்டுப் பக்கத்திலே பேசிக்கிட்டிருக்காருங்க. யாராவது பாத்துட்டா குடி முழுவிப் போவும். நீ கிழக்குப் பக்கம் காவலிரு; நான் மேற்குப் பக்கம் காவல் இருக்கிறேன், யாரும் வராதபடி.''

அவ்வளவு பெரிய உடம்பைத் தூக்கிக் கொண்டு ஓட்டம் பிடித்தான் கங்கப்பா. ஓட்டம் மாதிரி நடை. கிழக்குப் பக்கம் வெளி வாயில் அருகில் நின்றான், கன்னத்தில் பாணந்தடியை முட்டுக் கொடுத்துக்கொண்டு. தன் உயிர் போனாலும் தெற்குப் புழக் கடைக்குள் ஒரு குருவியை நுழைய விடமாட்டான் கங்கப்பா. மல்லி மேற்குப் புழக்கடைக்குச் சுற்றிக் கொண்டு போனாள். அங்கே போய்ச் சுவரில் சாய்ந்துகொண்டு நின்றாள்.

''முதல்லே இந்தத் தகராறு எல்லாம் இவ்வளவு தூரம் ஏன் வந்துதோ, எனக்கொண்ணும் புரியலே'' என்றான் ராஜு.

''யாராவது விட்டுக் கொடுத்திருந்தா இவ்வளவு தூரம் வந்திருக்காது'' என்ருள் லட்சுமி.

''உங்க ரங்கன் என் கூடையைக் கீழே எறியாம இருந்தா...'' என்ருன் ராஜு.

''ரங்கன் ஓர் அவசரக்காரன். போவட்டும், பதாலாவது விட்டுக் கொடுத்திருக்கக் கூடாதா?'' என்ருள் லட்சுமி.

''என்ன ஆனுலும், நீ ராமையா பண்ணெயார் மகள் என்பதை உன்னுலே மறக்க முடியாது'' என்ருன் ராஜு.

தாழ்த்திய முகத்தை நிமிர்த்தி, ராஜுவை லட்சுமி முறைத்துப் பார்த்தாள். காற்று மழையில் இலையைப் போல் துடித்துவிட்டாள். தன் தோட்டத்தை நோக்கிக் கண்முன் தெரியாமல் ஓட்டம் பிடித்தாள். ராஜு பயந்து விட்டான். அவசரப் பட்டுவிட்டதாக உணர்ந்தான். ''லட்சுமி, லட்சுமீ'' என்று கூப்பிட்டான். வேலி வழியாக அந்தப் பக்கத்துக்குக் கண்ணை மூடிக்கொண்டே நுழைந்து போனுள் லட்சுமி. ''லட்சுமி'' என்று அழைத்துக் கொண்டே வேலியில் நுழையப் போனுன் ராஜு.

''அத்தான்!'' என்று கூப்பிட்டுக் கொண்டே ஒரே ஓட்டத்தில் வந்து கையைப் பிடித்துக் கொண்டாள் மல்லி. ''வேண்டாம் அத்தான்! நீ அந்தத் தோட்டத்திலே அடி வெச்சின்னு குடிமுழுவிப் போயிடும். யாராவது பாத்துட்டா, லட்சுமி அக்காவெக் கொண்ணு போட்டுடுவாங்க.''

ராஜு பின்வாங்கினுன். ஓட்டை விழுந்த அடைப்புப் பக்கம் பார்த்துக்கொண்டே நின்ருன். மல்லி சொன்னுள்: ''அத்தான்! லட்சுமி அக்காவைச் சொல்றியே தவிர, சுப்பையா பண்ணையார் மகன் என்கிறதை உன்னுலெ மறக்க முடியாது.''

இதைச் சொல்லிவிட்டுப் புருப் போல் பறந்து விட்டாள் மல்லி. அவள் முன்ருனே இறக்கை போல் பறந்தது காற்றில். ராஜு பயந்துவிட்டான். இந்த அப்பாவிப் பெண், இவ்வளவு ஆழமாகப் பேசுவாள் என்று ராஜு ஒரு நாளும் நினேக்கவே இல்லே.

லட்சுமியின் இதயத் துடிப்பு அம்மன் கோயிலுக்கு வரும்வரையில் அடங்கவே இல்லே. அப்படியே அம்மன் முன்னுல் விழுந்து கதறிக் கதறி அழுதாள். வயலிலிருந்து கோவிலுக்கு வரும்வரையில் அடக்கி வைத்திருந்த உணர்ச்சிகள் கட்டறுத்துக் கொண்டு

பாய்ந்தன. கஞ்சாரி அருகில் வந்து நடுங்கிக்கொண் டிருந்த லட்சுமியின் தோள்களை ஆதரவோடு நீவினர்.

''தகராறுகள் எப்போதும் இருக்காதம்மா. அழாதே, எப்பவாவது அம்மனின் கருணையால் நீங்க ரெண்டு பேரும் சேர்ந்துடுவீங்க!'' என்றார்.

''அது நடக்காது. ஊரு ரெண்டாயிட்டுது. குறுக்கே வேலி விழுந்தாச்சி. எங்க ரெண்டு பேரு நடுவுலே வேலி வளர்ந்துட்டது. எடுக்கறதுக்கு முடியாத வேலி'' என்று சொல்லிக் கொண்டே அழுதாள் லட்சுமி.

ராமையா தெற்குப் பக்கத்துத் தோட்டங்களின் நடுவில் வேலி போட்டார். கல்யாணப் பம்பில் இரண்டு வயல்களுக்கும் நடுவில் சுப்பையா வேலி போடலானர். ஏரிகரை ஓரத்தில் வேலி போட்டு முடிக்கும் சமயத்தில் வந்தார்கள் ராமையா, வெங்கண்ணு, தர்மராஜு, அவர் பின்னுலே வெங்கடேசு, பென்டையா எல்லாரும், பென்டையாக்கு ஜாமீன் கொடுத்து அழைத்து வந்திருந்தார் வெங்கன்னு. தர்மராஜுவும் லிங்கையாவும் லிங்க்கை எடுத்துக் கொண்டு வந்தனர்.

''அன்னைக்கே சொன்னேன், சர்வேக் கல்லு எங்க ராமையா அத்தான் நிலத்துக்குள்ளே வந்திருக்குன்னு. அப்போ யாரும் காதுலெ போட்டுக்கலே'' என்றார் தர்மராஜு.

''தாத்தா காலத்திலே இருந்து அங்கேதான் இருக்குது கல்லு. இப்பொ நகத்தறதுக்குச் செத்தாலும் ஒத்துக்க மாட்டோம்'' என்றார் புன்னையா.

''எங்க நிலத்தைத் தர்மத்துக்கு எடுத்துக்கலாம்னு பாக்கறியா?'' என்று கேட்டார் ராமையா.

''யார் நிலத்தே யார் எடுத்துக்கறுங்களோ கோர்ட்டுக்குப் போய்த் தெரிஞ்சிக்கோ'' என்றார் சுப்பையா.

''போடுங்கடா வேலியை'' என்றார் வெங்கன்னு.

''எப்படிப் போட நீங்க பாக்கறேன்?'' என்றார் சுப்பையா.

கம்பத்தை நட்டுக் கொண்டிருந்த பதாலுவைப் பிடித்துத் தள்ளினன் வெங்கடேசு. புன்னையா, லிங்கையா கையிலே இருந்த லிங்க்கைப் பிடுங்கித் தூர எறிந்தார்.

சில கால்கள் முறிந்தன.

சில தலைகள் உடைந்தன.

வேலிக்கு அந்தப் பக்கத்துக் காக்கா இந்தப் பக்கம் வந்து உட்கார்ந்தால் காலை முறிக்கலானர்கள். வயலிலும் ஊரிலும் மக்கள் தனியாக நடப்பதை நிறுத்திக் கொண்டார்கள். பாணுத் தடிகளைத்

தாங்கியபடி மக்கள் கும்பல் கும்பலாகத் திரியலானுர்கள். தடிகளை நிலத்தில் அடிக்கும் சத்தம் இரவும் பகலும் சமதாளத்தில் பயங்கரமாகக் கேட்டது. குடிசைகள் எரியலாயின. குறுவைப் பயிர் வயல்கள் துவம்சமாகிக்கொண்டிருந்தன. பட்டணத்து மாஜிஸ்ட்ரேட் கோர்ட்டில் நூற்றுக்கணக்கான கேஸ்கள்! போலீஸ்காரருக்கு ஓய்வு ஒழிச்சல் இல்லை. பட்டணத்து வக்கீல்களுக்குக் கைநிறைய வேலை. எப்போது யார் உயிருக்கு ஆபத்து வருமோ, யாருக்கும் தெரியாது.

எதிர்பாராமல் நடுக் குளிர் காலத்தில் பெரிய காற்று மழை வந்தது. மிஞ்சிய சம்பா விளைச்சலை எல்லாம் பத்திரப்படுத்துவதற்கு விவசாயிகள் எல்லாரும் விரைந்தனர். அன்று எல்லோரும் விரோதங்களை மறந்துவிட்டனர். ஓர் இரவும் பகலும் பெய்தது மழை. பகலும் இரவும் வயல்களிலேயே இளம் வயது ஆண்களும் பெண்களும் காலம் தள்ளினர். சாயந்திரம் கொஞ்சம் வேகம் குறைந்தது. வயல்வெளியில் இருப்போருக்குச் சோறு கட்டிக்கொண்டு வீடுகளில் இருந்த வயதானவர்களும் சிறுவர்களும் புறப்பட்டனர்.

சில வயல்கள் ஊருக்கு மேற்கே லிங்க மடுவுக்கு அந்தப் பக்கம் இருந்தன. முடிந்த வரையில் பயிரை அறுவடை செய்து பத்திரப்படுத்துவதற்குள் பொழுது சாய்ந்தது. கொஞ்சம் மூச்சு வாங்கியது விவசாயிகளுக்கு. நாள் முழுவதும் பட்டினி. ஆகவே ஈர நிலத்திலேயே உட்கார்ந்து வீட்டிலிருந்து வந்த சோற்றைத் திருப்தியாகத் தின்ருர்கள். களைப்போடு, லேசான மனத்தோடு எல்லாரும் வீடுகளுக்குப் புறப்பட்டனர். லிங்க மடுவில் துடை அளவுக்குப் பெருகியது மழைத் தண்ணீர். குறுக்கே இறங்கினர் மக்கள்.

ராமி புடத்தடுவைத் தூக்கிக்கொண்டு மடுவில் இறங்கினுள். ரங்கன் எதிரில் வந்தான். அவள் ஒரு பக்கமாக ஒதுங்கிக்கொண்டாள். ரங்கன் அவள் பக்கமாக அடி எடுத்து வைக்கப் போகயானை மாதிரி கங்கப்பா திடுதிப்பென்று குறுக்கே வந்தான். ஆற்றங்கரையிலிருந்து இறங்கிக்கொண்டிருந்த மக்களுக்குச் சட்டென்று முந்திய பகையெல்லாம் நினைவு வந்தது. நினைக்காமலேயே கோஷ்டி பிரிந்துவிட்டனர். கங்கப்பா பின்னுல் சில பேர்,

ரங்கன் பின்னல் சில பேர். ராமி ஆற்றுக்குக் கொஞ்சம் அருகாமையில் சென்று கரையேறி விட்டாள். அவள் பக்கத்தில் துணையாக நடந்துகொண்டிருந்த கங்கப்பா, வாயில் சுருட்டை ஒரு பக்கமாக ஒதுக்கிவிட்டு, பல்லிடுக்கிலிருந்த எச்சிலை ஆற்றில் துப்பினன். அது வெள்ளத்தில் ரங்கன் பக்கமாக மிதந்து போயிற்று. ரங்கன் பின்னல் திரும்பிப் பார்த்தான். பின்னல் மக்களைப் பார்த்ததும் அவனுக்குத் தைரியம் வந்தது. ஆற்றில் குறுக்காக நடந்தான், கங்கப்பாவின் அருகில். தாண்டிவிட்ட மக்கள் நின்றுவிட்டனர். வத்தி பற்றவைக்கப்பட்ட பட்டாசு போல் உருவாயிற்று நிலைமை.

''என் மேலெயாடா துப்பறே?'' என்று சத்தம் போட்டான் ரங்கன்.

''உன் மேலெ யாரு துப்பினு? ஆத்துலே துப்பனேன்'' என்றுன் கங்கப்பா.

''கழுதெ மவனே'' என்றுன் ரங்கன், தடியை ஒங்கியபடி.

''வாயெ அடக்கிப் பேசு'' என்று அவனை நெருங்கினுன் கங்கப்பா. பெண்களும் சிறுவர்களும் பயந்து போய்க் கூச்சல் போடத் தொடங்கினர். எப்படியும் போவதற்கு வழியில்லை. அடிதடியில் எல்லோரும் முழுகிவிட்டனர். திடீரென்று ஆறு பொங்கத் தொடங்கியது. அடிதடி மயக்கத்திலிருந்த எல்லாருக்கும் இது தெரியவில்லை. சில வயதானவர்களும் பெண்களும் உரக்க எச்சரித்துக் கொண்டு ஆற்றைக் கடந்து கொண்டிருந்தனர்.

இந்தத் தலைமுறை மக்களுக்கு ஆறு இப்படிப் பொங்குமென்று தெரியாது. ராமியை நெருங்கிப் போனுன் ரங்கன். ராமி புடத்தடுவை விட்டுவிட்டாள். அவனுக்குக் கழுத்து வரை தண்ணீர் வந்தது. புல்லி சட்டென்று தூக்கவில்லை என்றால் அவன் முழுகிப் போயிருப்பான். ஆறெல்லாம் அல்லோல கல்லோலப்பட்டது, யானைகள் மிதித்த குளத்தைப் போல. ஆறு பொங்குவதைக் கவனித்தவர்கள் அடிதடிக்கு வாய்தா போட்டுவிட்டு அடுத்த கரையைச் சேர்ந்துகொண்டிருந்தனர். இந்தக் காட்சியைக் கரையிலிருந்து ராஜு பார்த்தான். முழுவதும் நனைந்து போன நெல் தாள்களைக் கரைமேல் எறிந்துவிட்டு, வண்டியை ஆற்றின் குறுக்காக ஓட்டினுன். பழைய தலைமுறைக் கிழங்களையும் சிறுவர்களையும் பெண்களையும் கரை சேர்க்கத் தொடங்கினுன். ஆற்றில் நீர் பயங்கரமாகப் பெருகத் தொடங்கியது.

மத்தியிலிருந்து நெடுந்தூரம் கரைகள் விலகியிருந்தன. ஆறு, கரைகளை உரசிக் கொண்டு பொங்குவதைப் பார்த்தால் கோதாவரி போல இருந்தது. அந்த வேகத்தில் நீச்சல் தெரிந்

தவர்கள்கூடக் கரை சேர்வது கஷ்டமாகிக் கொண்டு வந்தது. வடக்கே தொடுவானத்தில் மேகங்களும் மலைகளும் ஒன்றுகி விட்டன. மின்னல்கள் வானத்தையெல்லாம் கிழித்துக் கொண்டிருந்தன. இங்கே மழை குறைந்திருந்தாலும் மலைகள் மேல் அடைமழை பெய்து கொண்டிருந்தது. ஆறு இன்னும் அதிகமாகப் பொங்கத் தொடங்கியது. ஊருக்கு ஆபத்து இல்லை என்றாலும் ஆற்றின் கரை உடைந்து விட்டால், அறுத்துப் பத்திரப்படுத்திய சம்பாப் பயிரெல்லாம் கங்கையிலே கலந்து விடும். ராஜு, அவர்கள் இவர்கள் என்ற வித்தியாசம் இல்லாமல் எல்லாரையும் கரை சேர்த்துக் கொண்டிருந்தான். மாடுகள் களைத்து விட்டன; அவனும் களைத்து விட்டான். கடைசியாக இரண்டு சிறுவர்களையும் கிழவர்களையும் கரை சேர்த்துக் கரை மேலே நின்று ஆற்றுப் பக்கம் பார்த்தான். மனித உருவே தண்ணீரில் தெரியவில்லை.

''எல்லாரும் கரை சேர்ந்துட்டாங்களா?'' என்று கேட்டான் பக்கத்திலிருந்த பதாலுவிடம்.

சொன்னுனே இல்லையோ, கரைக்குப் பத்துக் கஜ தூரத்தில், எட்டியும் எட்டாத ஆழத்தில் ரங்கனின் தலை தண்ணீருக்கு மேலே எழுந்தது. பின்னலேயே ராமியின் தலையும் எழுந்தது. களைத்துப் போய்ப் பெருமூச்சு விட்டபடி திணறினுள் ராமி. தானும் மூச்சு வாங்கிக் கொண்டு ராமியின் தலைமேல் இரண்டு கைகளையும் வைத்துத் தண்ணீருக்குள் முக்கிக் கொண்டிருந்தான் ரங்கன். ராமி துடிதுடிக்கலானுள். ராஜுவுக்குப் பொறுக்க முடியாத கோபம் வந்துவிட்டது. அப்படியே ஆற்றில் குதித்தான். ரங்கனின் சட்டையைப் பிடித்து இழுத்தான். ராமி தண்ணீருக்கு மேலே தலையைத் தூக்கினுள். கண்ணும் மூக்கும் அவளுக்கு உப்பிவிட்டன.

''அந்தத் திருட்டுப் பொணம் முக்கருன் என்னை'' என்ருள், தண்ணீர் அடைத்துக் கொண்ட தொண்டையைச் சரிப் படுத்திக்கொண்டே. ராஜுவுக்குக் கண்முன் தெரியாமல் கோபம் வந்துவிட்டது. ரங்கனின் கன்னத்தில் பளீரென்று அறைந்தான். ரங்கன் துள்ளி விழுந்தான். சமாளித்துக் கொண்டு ராஜுவின் பக்கம் திரும்பி அடிக்கப் போனுன். ராஜுவின் ஆவேசத்தையும் வேகத்தையும் தாங்க முடியாமல் கரையைப் பார்த்து ஓடலானுன். கரையேறிக் கொண்டே ஆத்திரத்தோடு கத்தினுன்:

''உன்னெ...உன்னெ வெட்டிப் புதைக்கலேன்னு பாரு.''

ரங்கன் போய்விட்டான். ராஜு கரை மேல் காலை இழுத்துக் கொண்டே ஏறினான். மனமும் உடம்பும் களைத்துவிட்டன. தண்ணீர் ஓரமாக வேலமரக் கிளைகள் மேல் அப்படியே விழுந்து விட்டான்.

"வா அத்தான்! தலையைத் துடைச்சிக்கிட்டுச் சாம்பராணி புகை போடலாம். இல்லேன்னா ஜலிப்பு புடிச்சிக்கும்" என்றாள் மல்லி. ஆறு பொங்கிவிட்டதென்று கேட்டு ஓடோடி வந்தாள் அவள்.

ஆழ்ந்த களைப்போடு ராஜு எழுந்தான். இயந்திரம் மாதிரி வீட்டை நோக்கி நடந்து போனான்.

இரவு அம்மனுக்குத் தீபாராதனை செய்து கொண்டே கணாச்சாரி தேவியை உற்றுப் பார்த்தார். அம்மன் கண்ணில் என்ன தென்பட்டதோ?

'தாயே! உன் குழந்தைங்க மேலே அப்படிக் கோவிச்சிக்கிட்டா எப்படி? இத்தனை வருஷமாப் பொங்காத ஆறு இப்போ ஏன் பொங்கணும்? யாரைப் பலி வாங்கறதுக்கு?' என்று நினைத்துக் கொண்டார் மனத்துக்குள்ளேயே.

வீடு சேர்ந்த பிறகு ரங்கனின் பயம் பகையாக, தலைகால் தெரியாத கோபமாக மாறியது.

"அந்த லுச்சாப் பய என்னை ஆத்திலே போட்டு அடி அடின்னு அடிச்சிக்கிட்டிருந்தப்போ ஒரு பயலும் இறங்கி வரலே தடுக்கறதுக்கு. இவ்வளவு ஆளுங்க நம்ம பக்கம் இருந்து என்னா லாபம்? அவனையும் உங்களையும் வெட்டிப் போடலேன்னா பாத்துக்கோங்க. எங்க வீட்டுச் சோத்தைப் போட்டு உங்களுக்கு எல்லாருக்கும்..." என்னதான் பேசுவது என்று இல்லாமல் உளறிக் கொட்டிக் கொண்டிருந்தான் ரங்கன். அவனைத் திண்ணை மேல் கட்டிலில் படுக்கவைத்து உடம்பைத் துடைத்துச் சூடாக ஒத்தடம் கொடுத்துக்கொண் டிருந்தாள் சூராலு.

"கொஞ்சம் இருந்தா பையன் பொழைச்சே இருக்க மாட்டான்" என்று சொன்னாள் சூராலு. துக்கத்தினாலும் வந்து போன ஆபத்தைப் பற்றிய பயத்தினாலும் அவள் குரல் பாதிதான் கேட்டது. ராமையா என்ன செய்ய வேண்டுமென்று தெரியாத சிங்கம் போல, அடிபட்ட சிங்கம் போல அடுத்த திண்ணையில் உலவிக் கொண்டிருந்தார்.

"அதில்லே ஐயா" என்று ஏதோ சொல்லப் போனான், திண்ணையருகில் நின்றிருந்த வெங்கடேசு.

''வாயெ மூடரு! நீங்கெல்லாம் முதல்லெ வெளியே போங்க'' என்ருர் தர்மராஜு, தகராறைத் தீர்த்து வைப்பவர் போல. நடந்த கதையைப் பென்டையா மூலம் தெரிந்து கொண்டார்கள் தர்மராஜுவும் வெங்கன்னுவும். சண்டைக்கு அடிப்படைக் காரணம் ராமையாவுக்குத் தெரியாது. மற்றவர் தெரிந்து கொள் வதையும் அவர் விரும்பவில்லே. அதனுல் அவர்களேயெல்லாம் அதட்டி வெளியே அனுப்பி விட்டார் தர்மராஜு. உண்மையில் நடந்ததை ராமையாவிடம் சொல்ல வேண்டாமென்று அவர்களே எச்சரித்திருந்தார் என்ருலும், என்னவோ அறிவு கெட்ட ஜன்மங்கள் பதற்றத்தில் வாய் நழுவிக் கூறிவிட்டால், ராமையா வின் கோபம் ரங்கன் மேல் திரும்பி விடலாம்.

''அத்தான்! நமக்குப் போதுமான சாட்சி இருக்கு. ஒரு கிரிமினில் கேசு போட்டுடு; ஜெயில்லே தள்ளிடலாம், அந்த ரௌடிப் பயலே'' என்ருர் தர்மராஜு.

''முடிஞ்சாக்கா அந்தக் கேஸை நம்ம ஊர்லியே முடிச் சிக்கணும். கோர்ட்டுக்குப் போனு அவங்களுக்குப் பயந்துட்ட மாதிரியில்லே அர்த்தம்'' என்ருர் ராமையா.

கேஸ் போடுவதில் ராமையாவுக்குப் பெரிய தடை வேறு ஒன்று இருந்தது. ரங்கனுக்கு எண்ணெய் முழுக்கு முதலிய பணிவிடைகள் நடந்தபோது கோமட்டி செட்டி ஹனுமந்து வந்து சொன்னுர்.

''அண்ணுச்சி, உங்க மருமகன் என்னுனும் ரொம்பப் பெரிய மனுஷங்க. அவர் உதவிக்கு வரலேன்னு பாதி ஜனம் ஆத்துலே போயிருப்பாங்க! இவங்க அவங்கன்னு பாக்கலே அவரு. நம்ம பென்டையாவோட பெண்டாட்டி, யெங்கடேசுவின் அப்பா எல்லாரையும் அவர்தான் கரையேத்திவிட்டார்.''

இரண்டு குடும்பமும் ஒன்ருகி, ஊர் அமைதியாக இருந்தால், தம் வியாபாரத்துக்கு நல்லது. தினம் புகைந்து கொண்டிருக்கும் இந்த அடிதடியில் தம் வீட்டுக்கு ஏதாவது ஆபத்து வருமோ என்று ஹனுமந்துக்குப் பயம். அதனுல்தான் சமயம் பார்த்து ஜாடையாக ராஜுவை 'மருமகன்' என்று ராமையாவோடு பேசும்போது சொல்லிக்கொண் டிருப்பார். ஆனுல் ரங்கன் செய்த அநியாயத்தை ராமையாவிடம் சொன்னுல் வெங்கன்னு ரசிக்க மாட்டார் என்பது அவருக்குத் தெரியும். வம்பை விலைக்கு வாங்கியது போலிருக்கும். ஆகவே, ரங்கனின் உடம்பைப் பற்றிய கவனிப்புகள் திண்ணேக்கு மாற்றப்பட்டபோது போய் விட்டார் ஹனுமந்து.

ரங்கன் கூச்சல் போட்டுக் கொண்டிருந்த நேரமெல்லாம், ஹனுமந்து சொன்ன வார்த்தைகள் ராமையாவின் மனத்தில் ஒலித்துக் கொண்டே இருந்தன. 'பகையெல்லாத்தையும் மறந்துட்டு எல்லார்க்கும் உதவி செய்த ராஜு, ரங்கனை மட்டும் எதுக்கு அடிச்சி நொறுக்கினான்? ரங்கன் ஏதாவது துஷ்டத்தனம் செய்தானா?' என்ற சந்தேகம் அவர் மனத்தில் தலையெடுத்தது. அதனால்தான் கேஸ் போடுவதற்கு அவர் ஒப்புக் கொள்ளவில்லை. காரணம், இயற்கையாக அவரிடம் இருந்த நியாய புத்தி மட்டும் காரணம் அல்ல. கேஸ் போட்டால் தம் பக்கத்துச் சாட்சிகள் மட்டும் அல்லாமல் எதிர்ப் பக்கத்துச் சாட்சிகளையும் கோர்ட்டார் கேட்பார்கள். ரங்கன் ஏதாவது தவறு செய்ததாக வெளியானால் அது போன்ற ஒருவனுக்குத் துணை போன அவமானந்தான் தமக்கு ஊரில் மிஞ்சும். தாம் நியாயத்துக்குக் கட்டுப்பட்டவர் என்ற பெயரே எல்லாவற்றையும் விட ராமையாவுக்கு உயர்வானது. எதிர்ப் பக்கத்துச் சாட்சியம் பொய்யாக இருந்தாலும், அது நிஜமாக இருக்குமோ என்ற சந்தேகம் போதும், ஊர்க்காரரிடையே தம் மேல் உள்ள கௌரவம் குறைவதற்கு. ஆனால் திருவிழா நாளிலிருந்து நடந்து வரும் கலாட்டாக்களுக்கெல்லாம் சுப்பையாவும் ராஜுவுமே காரணமென்று அவர் நிச்சயமாக நம்பினார். ரங்கன் பொறுப்பை உணராமல் தலையை விட்டிருக்கலாம். அதற்காகக் கோஷ்டி சேர்க்கணுமா, சுப்பையா? போவட்டும், அவ்வளவு கலாட்டா ஆன பிறகாவது தம்மிடம் வந்து, 'என்ன அத்தான்! யார் தப்பா இருந்தா என்ன? நடந்தது நடந்து போயிட்டுது. இந்த மாதிரி கலாட்டா எல்லாம் ஊர்லே தலையெடுக்காமெ பாக்க வேண்டியது நம்ம கடமை' என்று சொன்னாரா? தாம் எவ்வளவு நியாயமான மனுஷர்னு சுப்பையாக்குத் தெரியாது?

முதலில் அந்த டிராக்டரை ராஜு வாங்கியதும், தலைமுறை தலைமுறையாக் கூலி வேலை செஞ்சி பிழைச்சிக்கிட்டிருந்தவங்க வயித்திலே அடிச்சதுமே இந்தத் தகராறுக்கு எல்லாம் காரணம். ஊர்லே இருக்கிற பெரியவங்களுக்கு அவங்க வாழ ஒரு வழி காட்டணுங்கற பொறுப்பு இல்லையா? அவங்கெல்லாம் வந்து தம் கால்லெ விழுந்தா, இரக்கப்பட்டு ஒரு பத்து ரூபா வீசி எறிஞ்சார். அதுக்குன்னு தானே என்னவோ அவங்களுக்குக் கள்ளு ஊத்தி, திருவிழாவுலே கலாட்டாப் பண்ண வெச்சதாச் சொல்றார் அந்தச் சுப்பையா!

லட்சுமி ஹாலில் தூணில் சாய்ந்து நின்று இந்த ஆர்ப் பாட்டத்தையெல்லாம் கேட்டாள். மனத்தில் திகில் கனமாக இறங்கியது. அவள் கண்ணீருக்குக் கூட எட்டாத திகில்! மெது வாக மாடிப்படி ஏறித் தன் அறைக்குள் போய்விட்டாள்.

மல்லி சின்னத் தெருச் சாவடி வழியாகக் கவலை இல்லாமல் வருவதைப் பார்த்து ரங்கன் குறுக்கே வந்தான். ''ஏன் வந்தே?'' என்று கேட்டான்.

''அக்காவைப் பாக்கறதுக்கு'' என்றாள் மல்லி.

''உங்க அத்தான் அனுப்பிச்சாரா தூது சொல்லி?'' என்று கேட்டார் வெங்கன்னா.

''ஏன் பெரியப்பா, இதெல்லாம் கேட்டீங்களா?'' என்று கேட்டாள் மல்லி, ராமையாவைப் பார்த்து. அவர் ஒன்றும் பதில் சொல்லாமற் போகவே பின்னால் திரும்பினாள் போவதற்கு.

''மல்லீ!'' என்று கூப்பிட்டாள் பால்கனியிலிருந்து லட்சுமி. மல்லி நின்று தலையைத் தூக்கிப் பார்த்தாள்.

''வெக்கமில்லே? அப்படி நிக்கிறியே?'' என்றான் ரங்கன்.

மல்லி தலை குனிந்து நின்றாள். ராமையா மனசு சுருக்கென்றது. மல்லியின் மனத்தில் எந்தப் பகையும் வராதென்றும், வர முடியாதென்றும் ராமையாவுக்குத் தெரியும்.

''ஏண்டா கத்தறே, அந்த அப்பாவிப் பொண்ணெ பிடிச்சிக் கிட்டு?'' என்றார் ராமையா. சூராலுவுக்கு மல்லியிடம் மிகவும் இரக்கம், அன்பு எல்லாம் உண்டு.

''போம்மா, மேலே போ.'' என்றாள் சூராலு. ராமையா சொன்னதற்குப் பிறகு ரங்கனுக்கும் வெங்கன்னாவுக்கும் ஒன்றும் சொல்ல முடியாமற் போய்விட்டது. மல்லி மாடிக்குப் போனாள்.

இத்தனை நாட்கள் தேக்கி வைத்த திகிலும் வேதனையும் கரை உடைத்துக் கொண்டன லட்சுமிக்கு. மல்லியைக் கட்டி யணைத்துக் கொண்டு பொலபொலவென்று அழுதாள்.

''அழாதேக்கா. நடுவுலே வந்த தகராறுங்க நடுவுலியே மறைஞ்சிடும். மல்லம்மா உங்க ரெண்டு பேரையும் ஆசீர் வதிப்பாங்க'' என்றாள் மிகவும் கம்பீரமாக. அமைதியாக, உணர்ச்சி வசப்படாமல் சொன்ன அந்த வார்த்தைகள் எவ்வளவோ ஆறுதலைக் கொடுத்தன லட்சுமிக்கு.

"ஒரேயடியா வயல் பக்கம் வர்றதயே நிறுத்திட்டியே?'' என்றாள் மல்லி.

''எப்படி வர்றது?'' என்று கேட்டாள் லட்சுமி.

"ஆம்பளெங்களும் ஆம்பளெங்களும் சண்டெ போட்டுக் கிட்டிருந்தா ஏரி என்ன பண்ணிச்சி? பெரிய புளிய மரம் என்ன பண்ணிச்சி? அக்கா! நீ வராமெ வயலெல்லாம் எவ்வளவு கஷ்டப்படுது தெரியுமா? மேய்க்கறதுக்குத் தினம் காராப் பசுவை ஓட்டிக்கிட்டுப் போறேன். இப்போதான் கன்று போட்டுதில்லே! 'நீ ஏன் ஓட்டிக்கிட்டுப் போறே, வேலையாளுங்க இருக்கறப் போ'ன்னு கேக்கறார் மாமா. யாராரு இன்னுன்னு கேக்கறேன் நான். பொழுதோடச் சின்னக் கன்னுக்குட்டி பாலு குடிச் சிட்டுத் துள்ளிக் குதிக்குது. அதைப் பாக்கணுமே! அன்னைக்கி ஒரு நாள் தெரு வழியா ஓடியாந்தது. உங்க வீட்டுக்குள்ளே வந்துட்டுது. மெதுவா இதுவும் அதுவும் சொல்லிக் கூட்டிக் கிட்டுப் போனேன். சரியான கடாக்குட்டி அது. பந்தய மாடாத் தயாராவும். அத்தானுக்கு ரொம்ப ரொம்ப ஆசை அது மேலே!''

ஊரில் இவ்வளவு தலைகள் உருண்டு கொண்டிருந்த போது, இவ்வளவு ஆவேசங்கள் பொங்கியபோது, மல்லி மகிழ்ச்சியோடு, ஆசையோடு இந்த விஷயங்களைச் சொல்லிக் கொண்டிருக்கிறாள்! அவற்றின் கறை மனசுலே கொஞ்சங் கூடப் படாமல் எப்படி இருக்க முடியுது மல்லியாலே?

மல்லியின் பேச்சைக் கேட்டுக் கொண்டிருந்தபோது ஊர் எப்போதோ முன் காலத்தில் இருந்தாற்போல் சந்தடியில்லாமல் சந்தோஷமாக இருப்பதுபோல் பட்டுது லட்சுமிக்கு. அவள் சொல்வதே சாசுவதமான, முக்கியமான விஷயங்களாகவும், இப்போது இருக்கும் குழப்பங்கள் தற்காலிகமான, முக்கியம் இல்லாதன போலவும் லட்சுமிக்குத் தோன்றியது. இந்த விஷயங்கள், இந்தச் சுகம், இந்த அமைதி காலமெல்லாம் நிலை பெற்றிருக்க வேண்டுமென்று தோன்றியது. ஊரில் கெட்ட கனவு கலைந்துவிடும் என்று தோன்றியது. மல்லி போவதற்கு எழுந்தபோது லட்சுமிக்கு மறுபடியும் திகில் பிறந்தது. தினம் நேரம் கிடைக்கும்போதெல்லாம் வருவதாக உறுதி சொல்லி விட்டு மல்லி புறப்பட்டு விட்டாள்.

மல்லி கோவில் பின்னுல் உட்கார்ந்து அத்தானுக்குக் கடிதம் எழுதிக் கொண்டிருந்தாள். 'லச்சுமி அக்காவைப் பார்த்துட்டு வந்தேன். திகிலோட இருக்கரு, பாவம்!' என்று கடிதத்தை எழுதி, பழைய கடிதங்களோடு சேர்த்துக் கவரில் வைத்து மடியில் செருகினுள்.

வயல் நடுவில் வேலி. வேலியின் ஒரு பக்கத்தில் ராஜு. மறுபக்கத்தில் லட்சுமி.

ராஜுவைச் சந்திக்க வேண்டுமென்று லட்சுமி வரவில்லை. சந்திப்பது ஆபத்தானது என்று அவளுக்குத் தெரியும். ஆனுல் புளிய மரத்தின் அருகில் வந்தபோது அவன் தென்பட்டால் நன்ருக இருக்கும் என்று தோன்றியது. தென்பட்ட பிறகு அவன் அருகில் வராமல் இருக்க முடியவில்லை அவளால். வந்து, அவர் பேச்சு கொடுத்த பிறகு அவளால் பேசாமல் எப்படி இருக்க முடியும்?

''என்ன சொல்ருர் உங்கப்பா?'' என்று கேட்டான் ராஜு. லட்சுமியின் மனம் சுருக்கென்றது. இதுவரையில் ராமையா அவருக்கு 'மாமா!' இப்போது லட்சுமியோட 'அப்பா!' லட்சுமி அந்தக் கேள்விக்குப் பதில் சொல்லவில்லை. ஒரு நிமிஷம் பொறுத்துக் கேட்டாள்:

''இந்த வேலி இப்படியே இருக்க வேண்டியதுதானு?''

ராஜு பெருமூச்சு விட்டான்.

''முதல்லே எதுக்கு வந்ததோ இந்த வேலி? எப்படிப் போகுமோ? எனக்கொண்ணும் புரியலே'' என்ருன்.

''யாராவது ஒருத்தர் போட்டி போடறதை மறந்து நேர்லே பாத்து நல்லது கெட்டது பேசிட்டா...எப்பாவது உங்களுது எங்களுதுங்கற வித்தியாசம் இருந்துதா நமக்குள்ளே? எவ்வளவு ஒத்துமையா இருந்தோம்!'' வார்த்தை வார்த்தையாக நிறுத்தி நிதானித்துப் பேசினுள் லட்சுமி.

''நான் மானத்தை விட்டுட்டு வந்தாலும் ரங்கனும் உங்க அண்ணனும் உங்கப்பாகிட்டே பேச விடுவாங்களா? மறுபடியும் உங்கப்பாதான்...'' பெருமூச்சு விட்டாள் லட்சுமி. அமைதியாக மேலும் சொன்னுள்:

''ரங்கன் மேலே பகைதானு முக்கியம்? இருந்தாலும் அவனுக்கு நீங்க சமமாகணுமா? ஆறு பொங்கினப்போ எதுக்கு அவனைப் போட்டு அடிக்கணும்?''

''ராமியைக் கொண்ணுட்டிருப்பான், நான் குறுக்கே போக லேன்னு. கோவம் தாங்கமுடியலே. இருந்தாலும் அந்தப் போக்கிரிப் பய துணைக்கு வருர் உங்கப்பா!''

''இதுவரைக்கும் எப்பவும் மாமான்னு சொல்லுவீங்க. இப்பொ 'உங்கப்பா' ஆயிட்டார்'' என்றாள் லட்சுமி, மனத்தில் இருப்பதை அடக்க முடியாமல்.

''அவருக்கு நான் எவ்வளவு தூரமோ எனக்கும் அவர் அவ்வளவுதான்'' என்றான் ராஜு. லட்சுமி சொன்ன வார்த்தைகள் எங்கேயோ குத்திக் கொண்டன.

''அதுதான் நானும் சொல்றேன். யாராவது ஒருத்தர் கிட்ட வந்தா, அடுத்தவங்களும் கிட்ட வந்துடறாங்க.''

''இந்தப் புத்திமதியை உங்கப்பாவுக்குச் சொல்ல முடியலியா?''

''நீங்களாவது கேப்பீங்களோன்னு நினைச்சேன். எங்கப்பாவும் உங்கப்பாவும் பழைய காலத்து ஆளுங்க. பிடிவாதம் அதிகம் ரெண்டு பேருக்கும். நீங்க அப்படி இருக்க மாட்டீங்கன்னு நினைச்சேன்.'' லட்சுமியின் குரலில் கொஞ்சம் அவநம்பிக்கையும் கேலியும் தொனித்தன. ஆனால் ராஜுவின் மனத்தில் புதைந்த விவரங்கள் எத்தனையோ இருந்தன. ''நீங்க டிராக்டர் வெச்சி விவசாயம் செய்யறது ராமையாக்கு விருப்பமில்லே. தம் குடும்பம் புது வழிகளைக் கையாண்டு ராமையா குடும்பத்தை மிஞ்சிப் போவதை அவரால் சகிக்க முடியலே. அதனாலேதான் விவசாயக் கூலிக்காரங்களை எல்லாம் தூண்டி விட்டுத் திருவிழாவுலே கலாட்டா பண்ண வெச்சார்.''

இந்த முடிவுகளைப் பொறுத்தவரை ராஜுவுக்குச் சாட்சியம் தேவையில்லை. ஆகவே தன்னிடம் வந்து ராமையா மன்னிப்புக் கேட்பது நியாயம். லட்சுமியிடம் இதையெல்லாம் சொல்லாவிட்டாலும், ''உங்கப்பா என் எதிர்லே வந்து திட்டினாலும் பொறுத்துக்குவேன். மறப்புலெ இருந்துகிட்டு வேண்டாத வேலையெல்லாம் செஞ்சிகிட்டிருந்தா மட்டும் மறுபடியும் ஒண்ணு சேர்றதுங்கறது கனவுதான்.''

''எங்கப்பா உயிர் போனாலும் வேண்டாத வேலையெல்லாம் செய்ய மாட்டார்'' என்றாள் லட்சுமி ரோஷத்தோடு.

''அப்படின்னா நாங்க பண்றோம்னு சொல்றியா?''

''யார் தப்பு பண்றாங்களோ அது அம்மனுக்குத்தான் வெளிச்சம். மனசுலே பகையை வெச்சிக்கிட்டா, எதிராளி செய்யறதெல்லாம் தப்பாத்தான் படும்'' என்றாள் லட்சுமி.

கொஞ்ச தூரத்தில் வேலிக்கு இந்தப் பக்கம் காராப் பசுவும் வேலிக்கு அந்தப் பக்கம் ராமையா பண்ணையாரின் வெள்ளைப் பசுவும் வேலிக்கு மேலே கழுத்தைத் தூக்கித் தொங்கும்

தாடைகளை நக்கிக் கொண்டிருந்தன. ராஜுவும் லட்சுமியும் அதைப் பார்த்து வெட்கப்பட்டார்கள்.

"அதுகளை எந்த வேலியும் பிரிக்க முடியாது'' என்றாள் லட்சுமி.

"அதுகளுக்கு இருக்கிற புத்தி நமக்கில்லே'' என்றான் ராஜு.

அதை ருஜுப்படுத்துவது போல வந்தார்கள், ரங்கனும் வெங்கன்னாவும்.

"சீ! வெட்கங் கெட்டவளே! வழியிலெ போற ஆம்பளெகிட்டே சரசமாடறியா?'' என்றார் வெங்கன்னா கட்டுமீறிய கோபத்துடன்.

"நட!'' என்றான் ரங்கன்.

இருவரும் பலவந்தமாக லட்சுமியை ஆளுக்கொரு கையைப் பிடித்து இழுத்துக் கொண்டு போனார்கள். ராஜுவுக்கு வேலியைத் தாண்டிப் போய் அவர்கள் தொல்லையிலிருந்து லட்சுமியைக் காப்பாற்ற வேண்டுமென்று முரட்டு ஆவேசம் பொங்கி வந்தது. ஆனால் அவனுக்குக் கையும் காலும் ஓடவில்லை. நடந்த நிகழ்ச்சியைக் களத்து மேட்டில் மேற்பார்வை பார்த்துக் கொண்டிருந்த சுப்பையாவும் புன்னையாவும் கண்டனர்.

ராமையா நடந்த கதையைக் கேட்டு எரிந்து விழுந்தார்.

"பேரைக் கெடுக்கறதுக்குன்னு என் மகளாய்ப் பொறந்தியா?''

"என்னது அதுமாதிரி தகாததெல்லாம் பேசிக்கிட்டு?'' என்றாள் நாராலு. அவள் மனத்தில், எப்போதாவது சூழ்நிலை சரிப்பட்டு, லட்சுமி, சுப்பையா பண்ணையார் வீட்டுக்குப் போய்ச் சேர்ந்தால் நன்றாக இருக்குமென்று இருந்தது. அடிதடிகள் முற்றி, பேச்சு வார்த்தைகூட இல்லாமல் இரண்டு குடும்பங்களும் தூரமாய்விட்டாலும், சம்பந்தம் முறிந்துவிட்டதாக அவள் மனம் ஒப்புக் கொள்ளவில்லை. இதுவரையில் எப்போதும் சொல்லவில்லை என்றாலும் இப்பொழுது தைரியத்தை வரவழைத்துக் கொண்டு சொன்னாள்:

"எப்போவாவது அவங்க வீட்டுக்குப் போகவேண்டிய பொண்ணுதானே?''

"என்னது? அவங்க வீட்லே கொடுக்கறதைவிட அவளைக் கழுத்தை அமுக்கி ஆத்திலே எறிஞ்சிட்டா நல்லது'' என்றார் வெங்கன்னா. அப்பா எதிரில் அவ்வளவு தைரியமாக அவர் இது

வரையில் ஒருநாளும் பேசியதில்லை. பல வகையான கோபதாபங்களும் ராமையாவை ஒவ்வொரு பக்கத்துக்கு இழுத்தன. மகளென்றால் அவருக்கு எவ்வளவோ செல்லம். சுப்பையா பண்ணையார் பேரைச் சொன்னாலே அவருக்குத் தாங்க முடியாத கோபம் வந்தது. மகளை ஒரு நாளும் சொல்லக்கூடாத சொல் சொன்னது கிடையாது. மனைவி அந்த வார்த்தை சொல்லவில்லை யென்றால், தாமே சொல்லியிருப்பாரோ என்னவோ? சொல்ல வில்லை என்றாலும் மனத்தில் அந்த வார்த்தையே ஊசலாடிக் கொண்டிருந்தது, தண்ணீர்மேல் எண்ணெய்த் துளி போல. அந்த எண்ணம் மற்றக் கோபங்களோடு பொருந்திப் போக முடியாது. கோபங்கள் பொங்கி எண்ணெய்த் துளி ஆவியாகிப் பறந்துவிட்டது.

''ஏண்டி, உனக்கூடக் கொழுப்பு ஏறிட்டுதா? இவ்வளவு நடந்தப்புறம் அவங்க வீட்லே கொடுக்கறியா மகளை?'' என்றார் கோபமாக. சூராலுவின் கண்கள் நீர்க்குளங்கள் ஆயின.

''அம்மா!'' என்று அருகில் அழைத்துக் கொண்டாள் லட்சுமியை மாமியாரைக் கொஞ்சம் பலமாக அதட்டியது மருமகளுக்குச் சற்றுத் திருப்தியாக இருந்தது. குத்தலான வார்த்தைகளை, மெள்ள மெள்ள மறைவிலிருந்து சொன்னாள்.

''அந்தப் பெண்ணைச் சொல்லி என்ன லாபம்? காலமே மாறிப் போச்சி. சினிமா வந்தப்பறம் நாட்டுப் புறத்திலே கூடக் காதல் கும்மாள மெல்லாம் அதிகமாயிட்டுது.''

லட்சுமி இதுவரையில் கண்ணீர் விடவில்லை. ஒரு வார்த்தை பேசவில்லை. அம்மா அருகில் அழைத்து அணைத்துக் கொண்ட போதுகூட, அவள் வெண்ணெய் மாதிரி உருகித் துக்கத்தை வெளிக் காட்டவில்லை. அவள் உள்ளத்துக்குள்ளே ஏதோ உறைந்து போய் விட்டது, முக்கியமாக ராஜு கூடத் தன் அண்ணனைப் போலவே பேசத் தொடங்கியதும். அவளுக்கு அசிரத்தையிலிருந்து அசட்டுத் தைரியம் பிறந்தது.

''அண்ணி! பொண்ணுன்னு பிறந்துட்டா ஆசைகள் இல்லாமல் இருக்காது. சினிமா வந்து கத்துக் குடுக்க வேணும். அப்பா, அவர் பகையை மறந்துட்டா ஊரும் நல்லாகும்; என் வாழ்க்கையும் நல்லபடியாகும்னு சொல்லப் போனேன்.''

''நீ கால்லெ கையிலே விழுந்தா உருகிப் போய் அப்பாகிட்டே வந்து கெஞ்சுவான்னு நினைச்சியா அந்த லுச்சாப் பய?'' என்றார் வெங்கன்ன.

"அந்த லுச்சாப் பய மச்சானுயிட்டாப் போதும்னு மேலே மேலே போய் விழுந்தே இல்லே ஒரு காலத்திலே? அப்போ அவர் லுச்சாப் பய இல்லே, இப்போ அப்படி ஆயிட்டார். உங்க ஆம்பளெங்களுக்கு அன்பைக் காட்டிலும் கோபந்தான் முக்கியம். எனக்காக யார் கால்லியும் யாரும் விழவேணும். ஒருத்தர் தலையை ஒருத்தர் உடைச்சிக்கிட்டு உங்க ஆசைங்களை நிறவேத்திக்கங்க.'' லட்சுமி மெதுவாக மாடிப்படி ஏறிப் போய்விட்டாள். ராமையா அசந்துவிட்டார். மகள் சொன்ன வார்த்தைகளில் எவ்வளவு உண்மை இருக்கிறதென்பது அவருக்கு அர்த்தமாயிற்று. அவள் அவ்வளவு தைரியமாக அந்த வார்த்தைகளைச் சொன்னதற்கு ஒரு பக்கத்தில் அவள் மேல் மதிப்பு அதிகமாயிற்று. ஆனுல் ஒரு சாண் பொண்ணு தன்னைவிடப் பெரிய மனுஷி மாதிரி பேசிவிட்டாளே என்று அவருடைய பெரிய மனுஷ கர்வம் ஒப்புக்கொள்ள விடவில்லை.

பெரிய தெரு சாவடிக்குச் சென்று சற்று நேரம் உலாவினுர். அவர் மனத்தில் ஒரு மெல்லிய எண்ணம் தலைதூக்கியது. தாம் துணிந்து வயலுக்குப் போய்ச் சாதாரணமாக, 'ஏண்டா மாப்பிளே!' என்று சொன்னுல் போதும். ராஜு, 'மாமா' என்று கூப்பிடுவான். எல்லாம் தீர்ந்து போய்விடும். ஆனுல் அந்த வார்த்தையைச் சொல்வதற்கு மனத்துக்குள்யே திரைகள் எத்தனையோ குறுக்கிட்டன. அந்தத் திரைகளைக் கிழித்துக் கொண்டு அந்த எண்ணம் வெளியே வந்து சேர்வதற்குள் இருட்டு வந்து கவ்விக் கொண்டது. இருட்டு உண்மையை இன்னும் கொஞ்சம் தெளிவாக்கிவிடும். கண்ணுக்குத் தெரியும் காட்சிகளின் தன்மையை மெலிவித்து மனத்தில் ஒளிந்திருக்கும் காட்சிகளுக்குத் தெளிவாக உருவம் கொடுத்துவிடும்.

இருட்டில் அவர் வயலை நோக்கி நடந்தபோது தெருவில் ரோந்து சுற்றிக் கொண்டிருந்த போலீஸ்காரர்கள் அவர் கண்ணில் படவில்லை. அம்மன் கோவிலுக்கு முன் முந்திய நாட்களில்

இருந்தது போலவே அமைதி நிலவியிருந்தது. சுவர்க்கோழிகள் முந்திய நல்ல நாட்களைப் போலவே சத்தம் போட்டுக்கொண் டிருந்தன. ஊர்க் கால்வாய் மேம்பாலத்தைத் தாமும் சுப்பையா வும் சேர்ந்து கட்டினர். அந்தப் பாலத்தின் மேலே பஸ் ஊருக்குள் வரத் தொடங்கியது. 'ஏண்டா மாப்பிளே' என்ற வார்த்தைகள்தான் அவர் மூளையில், வாயில் நடமாடிக்கொண் டிருந்தன. ஒரு வழியாக வயலுக்குப் போய்ச் சேர்ந்தபொழுது அந்த வார்த்தைகள் உதட்டைத் தாண்டவில்லை. அங்கிருந்த காட்சியைப் பார்த்ததுமே மூளையிலிருந்து மாயமாய்விட்டன.

டிராக்டர் வயல் நடுவில் பற்றி எரிந்து கொண்டிருந்தது. பதாலு வாய்க்காலிலிருந்து தண்ணீரைக் கொண்டு வந்து ஊற்றிக்கொண் டிருந்தானே தவிர, எரிவது குறையவில்லை. போலீஸ்காரர்கள் வெங்கடேசையும் பென்டையாவையும் பிடித்துக்கொண்டு தூரத்தில் நின்றிருந்தனர். அவர்கள் வந்து பிடித்துக் கொள்ள வில்லை என்றால் சுப்பையா பண்ணையாரின் ஆட்கள், இரண்டு பேரையும் வயலிலேயே கொன்று போட்டிருப்பார்கள். ராஜு திகிலோடு உட்கார்ந்திருந்தான் வயல் வரப்பின் மேல். சுப்பையா, புன்னையாவின் முகங்கள் கோபத்தில் சிவந்திருந்தன. வேலியின் இந்தப் பக்கம் தர்மராஜு, ரங்கன், லிங்கையா, வெங்கன்ன யாவரும் நின்று கொண்டு வேடிக்கை பார்த்துக் கொண்டிருந் தனர். அவர்கள் முகங்களில் சந்தோஷம் பிரகாசித்துக் கொண் டிருந்தது. ராமையாவுக்கு இந்தக் காட்சியைப் பார்க்கப் பார்க்க அருவருப்பு பொங்கி வந்தது. டிராக்டரைப் பற்ற வைத்ததில் தம் மகனுக்கும் தர்மராஜுவுக்கும் பங்கு இருந்திருக்கும் என்பது அவருக்குத் தெரிந்துவிட்டது. அவர்களை நொறுக்கிப் பந்தாட வேண்டும் என்ற அளவுக்குக் கோபம் வந்தது. அப்போது கேட்டது புன்னையாவின் குரல். ஏரிகரை மேல் நின்றிருந்த புன்னையாவைப் பார்த்தார், ஜ்வாலை வெளிச்சத்தில்.

"அதோ வந்துட்டார் பெரிய பண்ணையார். இவங்களுக்குப் பணம் கொடுத்துப் பத்த வெச்சாரில்லே? ஜாமீன் குடுத்துக் கூட்டிட்டுப் போறதுக்கு வந்துட்டார்'' என்றார் உரத்த குரலில்.

''என்னடா சொன்னே?'' என்றார் ராமையா. ஏற்கனவே பலவிதங்களில் குலைந்து போயிருந்த அவர் மனம் இந்த நிந்தனை யால் மிகவும் வேதனைப்பட்டது. வேதனை கோபமாக மாறுவது ராமையா விஷயத்தில் இயற்கையானதே.

''நான் பணம் குடுத்துப் பத்த வெச்சேனா?''

''நீ இல்லேன்னு யார் குடுத்தாங்களாம் இதுக்குப் பணம்? ஒரு வேளைச் சோத்துக்குக் கதியில்லாதவங்களுக்கு நாலு டப்பா பெட்ரோல் எங்கேயிருந்து வந்தது? திருவிழா அன்னைக்கிக் கள்ளு ஊத்தினே, இன்னைக்கிப் பெட்ரோல் குடுத்திட்டே'' என்றார் சுப்பையா.

ராமையாவுக்குக் கோபம் பொங்கியது. கைத்தடியைப் பயங்கரமாகத் தூக்கிக் கொண்டு கரை மேல் நடந்து வந்தார், ''எங்கே அந்த வார்த்தையை இன்னொருதரம் சொல்லு'' என்று சொல்லிக் கொண்டே. சுப்பையா மறுபடியும் சொல்லியே இருப்பார். ராமையா என்ன செய்வாரென்று அவருக்கே தெரியாது. போலீஸ்காரர்கள் சட்டென்று இரண்டு பேருக்கும் குறுக்கே வந்து விட்டார்கள். அப்போதுதான் பெரிய வெடிகுண்டு போல டிராக்டர் பெட்ரோல் டாங்க் வெடித்தது. இரும்புத் துண்டுகளும் எரியும் பெட்ரோலும் கொஞ்சம் வேலி மீதும் கொஞ்சம் ஆட்கள் மீதும் விழுந்தன. எல்லார் இதயங்களும் அந்தச் சத்தத்தைக் கேட்டுச் சட்டென்று நின்றுவிட்டன. ராஜு மட்டும் உட்கார்ந்த இடத்தைவிட்டு நகரவில்லை. அவன் மனத்தில் உறைந்துபோன பனிக்கட்டியை அந்த வெடிகூட உருக்க முடியாமல் போய் விட்டது. அந்தச் சந்தர்ப்பம் பார்த்து வெங்கடேசும் பென்டையாவும் ஓட்டம் பிடித்தார்கள். அவர்கள் பின்னால் போலீஸ்காரர்களும் ஓடினார்கள். இருட்டில் தோட்டங்களிலும் வயல்களிலும் இரண்டு குற்றவாளிகளும் மறைந்துவிட்டார்கள். தர்மராஜுவும் லிங்கையாவும் வெடித்த அடுத்த விநாடி தென்படவில்லை. வெங்கன்னவும் ரங்கனும் மெதுவாக நழுவிவிட்டார்கள். இருவரின் காதுகளும் அடைத்துக் கொண்டன. இருவரின் இதயங்களும் சுருதி தவறித் துடித்துக்கொண்டிருந்தன. சுப்பையாவும் புன்னையாவும் ராஜுவின் அருகில் ஓடி வந்தனர்.

''ஏம்பா? ஏதாவது பட்டுதா?'' என்று கேட்டார் சுப்பையா.

''இல்லே'' என்றான் ராஜு.

''எழுந்திரு, வீட்டுக்குப் போகலாம்'' என்றார் புன்னையா. ராஜு மெதுவாக எழுந்து எரிந்து கொண்டிருந்த டிராக்டர் பக்கம் பார்த்தான். தலை குனிந்து நடந்து போனான். அவன் முதுகு காரணம் இல்லாமல் வளைந்து விட்டதாகப் பட்டது ராமையாவுக்கு, அப்போதே ஐம்பது வயதுக்கு மேல் ஆகி விட்டாற்போல். அதற்குக் காரணம் தாமே என்று ஒரு மூலையில் மனசு குறை கூறியது. ரோஷத்தை வளர்த்துக் கொண்டு அந்தக் குறைகூறலை மிதித்து அடக்கிவிட்டார்.

ராமையா ஜுவாலையைப் பார்த்துக்கொண்டே ஏரி கரை மேல் நீண்ட நேரம் அப்படியே நின்றிருந்தார்.

தர்மராஜு, சேஷம்மாவிடம் பேசிக் கொண்டிருந்தார், சுப்பையா, ராஜு, புன்னையா எல்லாரும் வீட்டுக்குத் திரும்பி வரும்போது. அதற்குள்ளே ஆண்கள் வீட்டுக்குத் திரும்பி விடுவார்கள் என்று அவர் நினைக்கவில்லை. அவர்கள் எல்லாரும் தன்னையும் தன் மகனையும் வேலிக்கு அந்தப் பக்கம் நின்று பார்த்தனர். வயலில் நடந்த அநியாயத்தில் தனக்கும் பங்கிருக்கும் என்று அவர்கள் நினைக்கலாம். வெங்கன்ன, வெங்கடேசுக்குப் பணம் கொடுத்த விஷயம் தனக்குத் தெரியும். அதைக் கொண்டு அவன் பட்டணத்துக்குப் போகும் வழியில் இருக்கும் பெட்ரோல் பங்குக்குப் போய்ப் பெட்ரோல் வாங்கி வந்தான். அதைத் தர்மராஜுவுக்குத் தெரிந்தே தெலுக்குல மங்கி வீட்டில் ஒளித்து வைத்தான். ஆனால் தன் மேல் அவர்களுக்குச் சந்தேகம் இல்லாதபடி செய்யவேண்டும். ஏனென்றால் இன்னும் ஒரு மாதத்தில் பஞ்சாயத்துத் தேர்தல் வர இருந்தது.

முந்திய நாட்களில் பேருக்குத்தான் தேர்தல் நடக்கும். ராமையா பண்ணையாரும் சுப்பையா பண்ணையாரும் கலந்து பேசி உறுப்பினர்களின் பெயர்களை முடிவு செய்வார்கள். தலைவர் பதவிக்கு 'நீ இரு' என்றால் 'நீ இரு' என்று சொல்வார்கள். அவ்வப்போது தாமும் உறுப்பினராக இருப்பார். ஆனால் உறுப்பினருக்கு அப்போது செல்வாக்கு ஒன்றும் கிடையாது. பெரிய பண்ணையார் தீர்மானங்களை இருவரும் ஒத்துக்கொண்டு வருவார்கள். அவற்றை வேண்டாம் என்று சொல்லக் கூடிய உறுப்பினரே அப்போது கிடையாது. இப்போது நிலைமை மாறி விட்டது. இரண்டு குடும்பங்களிடையே ஒற்றுமை போய் விட்டது. தேர்தலில் போட்டி நிச்சயம் இருக்கும். சுப்பையா வேலையிலிருந்து நீக்கிவிட்ட கூலிக்காரர்கள் இருந்தார்கள். அவர்களுக்கு ராமையாவின் உதவி இருந்தாலும், உண்மையில் அவர்கள் எல்லாரும் தர்மராஜு சொன்ன பேச்சைக் கேட்டார்கள். இரண்டு யானைகள் மோதிக் கொண்டால் நரிகளுக்குக் கொண்டாட்டமாம்! பஞ்சாயத்துச் சமிதியில் தன் பங்கு முக்கியமாகிவிடும். இரண்டு பேருடனும் நல்லபடியாக இருந்தால் தான் ஊரை ஓர் ஆட்டம் ஆட்டி வைக்க முடியும். ஆனால் நேருக்கு நேராகச் சுப்பையாவோடு பேசினால், சுப்பையா இடம் கொடுக்காமல் போகலாம். தன் பேச்சை அவ்வளவு சுலபமாக ஆண்கள் நம்பமாட்டார்கள். ஆகவே சேஷம்மாவை

முதலில் சரிக்கட்டி விட்டால், மெதுவாக அந்தம்மா சுப்பையா விடம் பரிந்து பேசுவாள். அதனால் வயலில் நடந்ததைச் சேஷம்மா வுக்கு மிகவும் விவரமாகச் சொன்னார்.

"எது நடந்தாலும் நிஜத்தை உணரணும் சேஷம்மா அண்ணி! எங்க ராமையா அத்தானுக்கு இந்த விஷயத்தைப் பத்திக் கொஞ்சங்கூடத் தெரியாதுங்கறது என்னோடை நம்பிக்கை. அந்தப் படுவாப் பய ரங்கன்தான் இதுக்கெல்லாம் மூலகாரணம். அவன்தான் அவாளுக்குக் காசு குடுத்துப் பெட்ரோல் வர வழைச்சான். இருந்தாலும் நான் ஒண்ணு சொல்றேன். சுப்பையா அண்ணாவுக்கு மூக்கு மேலே கோபம் இருக்கும். நான் நல்லதுக்குச் சொன்னாலும் அவருக்கு ஏறாது. முதல்லே தலைமுறை தலைமுறையா நம்ம வயல்லே பயிர் செஞ்சிண் டிருந்த யெங்கடேசுவையும் இன்னும் மத்தவங்களையும் நிறுத் திட்டது தப்புத்தானே. டிராக்டரு வாங்கலாம். எந்தர விவசாயம் பண்ணலாம். நான் வேண்டாம்னு சொல்லலே. 'டேய், நீங்க எங்கேயாவது வேலையிலே அமர்றவரைக்கும் உங்க பொழைப்புக்கு இதோ வழி செஞ்சிருக்கேன். உங்களுக் கொண்ணும் குறை இருக்காது; கொஞ்ச பேரு வயத்திலே அடிச்சிடும் எந்தரம்; அதனாலேதான் இப்பத்திலெ இருந்து நீங்க வேறெ வழி பாத்துக்கணும்'னு நல்லதனமாச் சொன்னா அவா இவ்வளவு தூரம் துணிஞ்சி வருவாளா? மத்தவா சொல்ற பேச்சைக் கேப்பாளா? முழுக்க நனைஞ்சவாளுக்குக் குளிர் இல்லே. அவா டிராக்டரைப் பத்த வெச்சுட்டா. பிடிச்சிண்டு போய் அவாளை ஜெயில்லே போட்டுட்டா மட்டும் அவாளுக்கு ஒரு கணக்கா?"

அவருடைய சொற்பொழிவு முடிவதற்கு முன்னாலேயே வந்து விட்டார்கள் சுப்பையா, புன்னையா, ராஜு எல்லாரும். அவர் குரல் சட்டென்று நின்றுவிட்டது. சமாளித்துக்கொண்டு, "மரு மவளே, வெந்நீரு கொஞ்சம் கொண்டுவா" என்றார் சுந்தரம்மாவைப் பார்த்து.

"வெளியே போ" என்றான் ராஜு, குரலைத் தாழ்த்தி, பெரிய இரகசியம் சொல்வது போல. தர்மராஜுவுக்கு வயிற்றிலிருந்து கலக்கம் பிறந்து வந்தது. ராஜு குரலை உயர்த்திக் கோபத்தோடு கத்தினால், சொல்வதை முடிப்பதற்கு முன்னாடியே ஏரிகரையை அடைந்திருப்பார். இனம் தெரியாத இந்த அளவு வேதனைப்படுத்தி இருக்காது. என்ன செய்யவேண்டும் என்று புரியாத ராஜுவின் குரலிலும் முகத்திலும் மிகப் பயங்கரமான எரிமலைப் புகைகள் தர்மராஜுவுக்குத் தென்பட்டன.

''அதில்லே ராஜு, என் பேச்செ நம்பு. உனக்கொண்ணும் தெரியாது. அவா என்னமோ லட்சுமிக்கு வேறெ சம்பந்தம் பாத்துண்டிருந்தா, 'வேண்டாம் நியாயமில்லே'ன்னு சொல்ற துக்கு வந்தேன் வயல் பக்கம். அங்கே எரிந்ததை எல்லாம் பாத்துப் பயந்து போயிட்டேன். முப்பதினுயிரம் ஆகிறது எந்திரம்.'' என்ன சொல்கிறோம் என்று அவருக்கே தெரி யாது. பழக்கத்திஞலே வாய் வார்த்தைகளைப் பின்னிக்கொண் டிருந்தாலும், எரிமலை வெடித்துத் தம்மை முழுக்கடித்து விடுமோ என்ற நடுக்கம் கண்களில் போதைபோல் கம்மிவிட்டது. சொல்லிக் கொண்டே எழுந்தார். அவருடைய கடைசி வாக்கியம் முடிவதற்கு முன்னுடியே ராஜு மறுபடியும் அதே மெல்லிய குரலில், ''நட வெளியே'' என்முன்.

தர்மராஜு இனித் தாமதிக்கவில்லை. அடுத்த விநாடி ராமையா பண்ணையார் வீட்டில் இருந்தார்.

''முழுக்கப் பேச விட்டுருக்கணும். அந்தச் சம்பந்தம் விஷயம் என்னவோ?'' என்முர் புன்னையா. ராஜு ஒன்றும் பேசவில்லை. அவன் மனம் எப்போதும் அவ்வளவு வெறிச்சோடிப் போனதில்லை. இந்த அநியாயங்களின் விஷயம் ராமையாவுக்கு முழுக்கத் தெரியா தென்றும், வெங்கன்னுவும் ரங்கனுமே இதெல்லாம் தூண்டி வருகிருர்கள் என்றும், வளர்ந்துவிட்ட பகையின் காரணமாகத் தம் ஆட்களுக்கு உதவியாக வருகிருரே தவிர, அவருடைய பெரிய தனம், நியாயபுத்தி இவ்வளவு கீழாகப் போகாதென்றும் ராஜு வின் மனத்தின் ஒரு மூலையில் நம்பிக்கை இருந்துவந்தது. இப்போது அது முற்றும் செத்துவிட்டது.

''ராமையா வயல்லே வேலையைச் சாக்கா வெச்சிக்கிட்டு வந்தார். ஏரிகரையின் மேலே நின்று வேடிக்கைப் பார்த்தாரே தவிர, ஒரு வார்த்தை சொல்லலே. ஒரு வாரமா வெங்கன்னுவும் ரங்கனுந்தான் வந்துகிட்டிருந்தாங்க வயலுக்கு. ராமையா அந்தப் பக்கமே வரலே. இன்னைக்கிச் சாயந்திரம் இருட்டி னப்பறம், வேலையை உண்டாக்கிட்டு வந்தார். பகை அவர் மனசெக்கூட விஷத்தாலெ நிரப்பிட்டது.''

ராஜுவின் மனத்தின் ஒரு மூலையில் இத்தனை நாட்கள் ஓர் ஆசை இருந்தது. அவர் வயல் வரப்பிலோ, ஏரிகரையிலோ தென் பட்டால் நேருக்கு நேர் பேச்சுக் கொடுத்து, இந்தத் தகராறுகளைப் பற்றிப் பேச்செடுக்காமல் கல்யாண விஷயத்தைப் பேசினல், ராமையா நிச்சயமாக இறங்கிடுவார் என்றும், எப்போது லட்சுமிக்கும் தனக்கும் கல்யாணம் முடிகிறதோ, அப்போதே

இந்தப் பகையெல்லாம் தானகவே ஒழிந்துபோகும் என்றும் அவன் நம்பினன். இப்போது அந்த நம்பிக்கை ஒரேயடியாக அடிபட்டுவிட்டது.

''வெந்நீரை விளாவிட்டேன், வா அத்தான்'' என்ருள் மல்லி.

''வெந்நீரு எதுக்கு? என்ன அவ்வளவு குளிராவா இருக்குது!'' என்று ராஜு எழுந்துகொண்டே கேட்டான்.

''அதின்னடா அது, பனிக்காத்துலே பல்லு தாளம் போட்டுக் கிட்டிருக்குது!'' என்ருன் கங்கப்பா. ராஜுவின் பின்னலேயே போனன். கிணற்றடிக்குப் போய்ச் சேரும்போது ராஜுவுக்கு நிஜமாகவே குளிர் எடுத்தது. கங்கப்பா சூடான தண்ணீரை அவன் முதுகில் ஊற்றினன். அவ்வளவு சுகத்தை எப்போதும் ராஜு அநுபவித்ததில்லை. வெந்நீர் அவன் உள்ளுக்குள்ளே இருந்த குளிரையும் விரட்டிவிட்டது. அண்டா காலியான பிறகும் இன்னும் ஊற்றிக் கொள்ளவேண்டும் போலிருந்தது. மனத்தில் கவலையும் வயிற்றில் பசியும் சேர்ந்து, அன்றிரவு அவனைத் தட்டைக் காலி செய்ய வைத்தன. அண்ணி எவ்வளவு பரிமாறின லும் அவ்வளவையும் தின்றுவிட்டான். போதும் என்று சொல்ல வில்லை.

பஞ்சாயத்துக் கூட்டம். தேர்தலுக்கு முன்னல் அதுதான் கடைசிக் கூட்டம். ராமையா ஒரு முடிவோடு கூட்டத்துக்கு வந்தார். ஊருக்கு ஏதாவது ஒரு மிகப் பெரிய வேலையைத் தொடங்கி, அதில் ஒவ்வொருவருக்கும் ஒரு பொறுப்பைக் கொடுத் தால், கலகங்கள் மறைந்து போய் ஊர் நிம்மதி அடைவதற்கு வாய்ப்பிருக்கும் என்பது அவர் எண்ணம். தற்போதைய சூழ்நிலை யில் தாமாகச் சென்று சுப்பையா பண்ணையாரிடம் சமாதானம் செய்துகொள்வதற்கு முயற்சி செய்தால், அவர் கை ஓங்கிவிடும். தாம் ஏதோ தப்புச் செய்ததாகவும் அந்தத் தப்பை ஒப்புக் கொண்டதாகவும் ஆகிவிடும். அதனல் கணக்கர் கூறிய ஆலோசனை அவருக்குப் பிடித்திருந்தது. லிங்க மடுவின் நீரெல்லாம் வீணகக் கடலில் போய்க் கலந்துகொண் டிருந்தது. அதைத் தடுத்து விவசாயத்துக்கு உதவும் திட்டம் போட்டால் நன்ருக இருக்கும் என்று இதற்கு முன்னடியே பரிஷத் இன்ஜினியர் அரசாங்கத்துக்கு எழுதியிருந்தார். ஆனல் அது அங்கீகாரமாகி

வருவதற்கு நீண்ட நாட்கள் ஆகலாம். ஆகவே ஊர் மக்களைத் தூண்டிவிட்டு, ஆற்றுக்குக் குறுக்கே வலுவான அணையை மண்ணால் கட்டினால் இந்தப் பக்கம் இருக்கும் மேல்மட்ட வயலில் எல்லாம் பொன் விளையும். சிரமதானத்தின் மூலம் ஊராரை எல்லாம் ஒன்று சேர்க்கலாம். கொஞ்சம் பணத்தைத் தாமும் தானம் செய்யலாம். சுப்பையா பண்ணையாரும் கொடுக்காமல் இருக்க முடியாது. அரசாங்கம் ஒன்றும் கொடுக்கவில்லை என்றாலும் திட்டம் முடிந்துவிடும்.

ஆனால் தர்மராஜு இத் தீர்மானத்தைக் கூட்டத்தில் எடுத்துச் சொன்னதும், இன்ஜினியர், இதில் எத்தனையோ கஷ்டங்கள் இருப்பதாகச் சொன்னார். அன்று பெய்த மழைபோல ஒரு முறை பெய்யுமானால், நீரின் வேகத்துக்கு எவ்வளவு அகலமான அணையானாலும் அடித்துக்கொண்டு போய்விடும். அதோடு, ஸ்லூயிஸ்களைப் பொருத்திக் கால்வாய்கள் வெட்டுவதற்கு ஒரு திட்டம் வேண்டும். அதற்குக் கொஞ்சம் அவகாசம் வேண்டும். கால்வாய வெட்ட வயல்களில் கொஞ்சம் பகுதியை ஆக்கிரமிப்புச் செய்ய வேண்டும். இந்தத் தடைகளை எல்லாம் அவர் விளக்கிக் கொண்டிருந்தபோது ராமையாவுக்கு அலுப்பாக இருந்தது.

''நீங்க அதையெல்லாம் தயார் செய்யுங்க. நான் நாளைக்கே போயி சாங்ஷன் வாங்கிட்டு வர்றேன்'' என்றார். இதைக் கேட்டு இன்ஜினியர் சிரித்தார்.

''இதெல்லாம் சாங்ஷனானாலும், முதல்லெ அணையைக் கல்லாலும் சிமென்ட்டாலும் கட்டணும்னா, அரசாங்கம் நம் திட்டத்தை ஒத்துக்கணும். பணம் அநுமதிக்கணும். டெண்டருங்க கேக்கணும், கான்ட்ராக்ட் கொடுக்கணும்'' என்றார்.

''அவை எல்லாம் இப்போ ஆகற வேலை இல்லே. தேர்தல் வர்றதுக்குள்ளே ப்ராஜெக்ட் முடிஞ்சிடணும். அது எங்க அத்தானோட முடிவு. அதனாலெ மண்ணால் அணையைக் கட்டணும்; நல்லா அகலமாக் கட்டினா நிக்கும்னு நீங்க சொன்னீங்களே'' என்றார் தர்மராஜு

''மண்ணாலே கட்டின அணை நிக்கணும்னா, ஆற்றை இன்னும் நல்லா அகலப்படுத்தணும். ஒரு நூறு ஏக்கராவது பக்கத்து நிலங்களில் ஆக்ரமிப்புப் பண்ணி ஆற்றங்கரையை அந்தப் பக்கத்துக்குத்

தள்ளணும். அப்பொ பெரிய ஏரி மாதிரி தயாராகும். அணை கட்றதுக்கு முன்னால் அணை மேலே தண்ணியோட உதைப்புக் குறையும். அதுக்குக்கூட டைம் பிடிக்கும்.''

''அதுக்கொண்ணும் கவலையில்லே. ஆற்றுக்கு அந்தப் பக்கத்து நிலத்தையெல்லாம் ஆக்ரமிப்பு பண்ணிண்டா போவுது'' என்றார் தர்மராஜு.

''ஊரா வீட்டு நெய்யே என் பெண்டாட்டி கையேன்னுறும். உன் சொத்தா, உங்க அத்தான் வீட்டுச் சொத்தா? என்ன போவுது? ஆற்றங்கரை நிலத்துலே எங்களதுதானே அம்பது ஏக்கரா போவுது'' என்றார் சுப்பையா.

இந்த விஷயத்தை முன்னால் தெரிந்து கொண்டே தர்மராஜு, தம் மூலமாக இந்தத் தீர்மானத்தை வெளியிட வைத்து விட்டா ரென்று அப்போதுதான் ராமையாவுக்குப் புரிந்தது. தமக்கு இவை எல்லாம் தெரியாதென்றால் சுப்பையா எப்படியும் நம்ப மாட்டார். தாம் தீர்மானத்தை வைத்துவிட்ட பிறகு அதை வாபஸ் வாங்கிக் கொண்டால் தம் கௌரவம் போய்விடும். சுப்பையா சொன்ன குற்றச்சாட்டு உண்மையென்று தாம் ஒப்புக் கொண்டதாகவே ஆகிவிடும்.

''சர்க்கார் சும்மா எடுத்துக்க மாட்டாங்களே நிலத்தெ. இருக்கற விலெ பிரகாரம் விலெ போட்டுப் பணம் குடுத்துடு வாங்க'' என்றார் சமாளித்துக் கொள்வதற்காக.

''சர்க்கார் பணம் எனக்கு வேண்டாம், ஆவட்டும். என் அம்பது ஏக்கராவை நீயே வாங்கிக்கிட்டு, அந்தச் சர்க்கார் கொடுக்கற பணத்தை நீயே வாங்கிக்கோ. ஊருக்கு நல்லது பண்ணனும்னு முன்னே வந்தது நீதானே?'' என்றார் சுப்பையா சூடாக. இனி வாதப் பிரதிவாதங்கள் எல்லை மீறிப்போகும் என்று ஊகித்து, இன்ஜினியர் சமாதானம் செய்ய முயற்சி செய்தார்.

''ஐயா, என் யோசனைகளை மந்திரிங்க பரிசீலனை பண்ணிக்கிட்டிருக்காங்க. ஒரு வாரத்திலே சாதகமான முடிவு எடுப்பாங்கன்னு நான் நம்பறேன். அதுவரைக்கும் இந்தத் தீர்மானத்துக்கு வாய்தா போட்டா நல்லா இருக்கும். தேவையானா இன்னும் ஒரு பத்து நாள்ளே அவசரக் கூட்டம் ஒண்ணு ஏற்பாடு செஞ்சிக்கலாம்'' என்றார் இன்ஜினியர். அதோடு கூட்டம் முடிந்துவிட்டது. அதுக்கப்பறம் எந்த விஷயத்திலும், தாம் எந்தப் பக்கம் பேசினாலும் சுப்பையா அதுக்குத் தப்பர்த்தம் பண்ணிக்குவார் என்ற எண்ணத்துடன், ''எனக்கு வேறெ வேலெ இருக்குது, மீதி விவகாரத்தை யெல்லாம் நீங்க பாத்துக்கங்க'' என்று எழுந்து

போய்விட்டார். அவர் போனபிறகு, எந்த முடிவையும் எடுப்பதற்கு யாருக்கும் துணிச்சல் இல்லாமல் போய்விட்டது.

அதற்குப் பிறகு பஞ்சாயத்துக் கூட்டத்தைக் கூட்டுவதற்கும் யாருக்கும் துணிச்சல் இல்லாமல் போய்விட்டது. இதற்குள் தேர்தல் நெருங்கிவந்தது.

''அத்தான்! இதுவரைக்கும் உன்னோட பெருந்தன்மையினுலெ தான் சுப்பையா அத்தனை தடவை ப்ரசிடென்ட் ஆனர். அதென்னவோ தம் சாமர்த்தியத்தினுலே வந்த மாதிரியும், ஊருக்கு உன்னைவிடத் தான்தான் பெரிய மனுஷர் ஆயிட்ட மாதிரியும் ரொம்பப் பெரிசாப் பேசிண்டிருக்கார். நீ வேட்டியை மடிச்சிக் கட்டிண்டு மைதானத்திலெ இறங்கி, அவரோட நிலை என்னுங்கறத்தையும் செல்வாக்கு எவ்வளவுங்கறத்தையும் காட்டிடனும்'' என்ருர் தர்மராஜு.

ராமையா அதற்கொன்றும் பதில் சொல்லவில்லை. ஆனல் வெங்கன்னவும் ரங்கனும் தாளம் போட்டார்கள். அவர்கள் நடுவில் இருக்கும் வரையில், சுப்பையாக் கூட்டத்தை ஒழித்துக் கட்ட வேண்டுமென்றும், அவர்களைக் கூண்டோடு கைலாசம் அனுப்ப வேண்டுமென்றும் தோன்றும் அவருக்கு. இடை இடையில் ஹாலிலோ புழக்கடையிலோ லட்சுமி தென்படுவாள். அவரைப் பார்த்தால் அவள் முகத்தைத் திருப்பிக்கொண்டு போய்விடுவாள். அப்போது அவருக்குத் தாம் ஏதோ தப்புச் செய்வதுபோல் தோன்றுவதுண்டு. உள்ளே எங்கேயோ மனம் பிடுங்கும். அவள் கண்ணுக்கு மறைவான மறு விநாடி தம்மைப் பற்றிப் புன்னையா வகையருக்கள் செய்யும் தப்புப் பிரசாரம் நினைவுவரும். பகை வென்றுவிடும். தர்மராஜு அந்த அளவு தன் கட்சியைத் தலையில் போட்டுக்கொண்டு திரிவது அவருக்குப் பிடிக்கவில்லை. ஆனல் வெங்கன்னவும் ரங்கனும் அவரோடு, இந்தத் தகராறுகள் தொடங்கிய காலத்திலிருந்து மேலும் இழைந்து கொண்டிருந்தார்கள். முக்கியமாகத் தேர்தல் பிரசாரத்துக்குத் தர்மராஜுவும் லிங்கையாவும் நன்ருகப் பயன்படுவார்கள் என்பது அவர்கள் நம்பிக்கை. அவரால் வேண்டாம் என்று சொல்ல முடியவில்லை.

தேர்தல் மகாத் தத்துவத்தைத் தர்மராஜு உண்மையில் ரத்தினச் சுருக்கமாக வடித்துவிட்டார். ராமையா தம் சார்பான ஆட்களை யெல்லாம் சேர்த்து ஒரு கூட்டம் போடச் சொன்ன போது தர்மராஜு சொன்ஞர்:

''அத்தான்! நம்ம ஆளுக எப்பவும் நம்ம பக்கந்தான். பிரசாரம் பண்ணி அவர்களை நம்ம பக்கத்திலே சேத்துக்கணுங்கற அவசியம்

இல்லை. இப்படியும் அப்படியும் இல்லாமெ நடுவுலெ இருக்கிற வங்களையும் நம்ம பக்கத்துக்கு முதல்லே இழுத்துப் போடணும். அதுக்கப்பறம் எதிர்ப்பக்கத்து ஆசாமிங்க மத்தியிலே கலகங்களை வளர்த்து, அதிருப்தியை உண்டாக்கி, ஏதோ ஒருவிதமான ஆசையைக் காட்டி, நம்ம பக்கத்துக்குத் திருப்பிடணும். புறப்படு, முதல்லே கணுச்சாரியைச் சரிக்கட்டுவோம்.''

''கணுச்சாரி நம்ம ஆளுதானா?'' என்று கேட்டான் ரங்கன்.

''இல்லேன்னு தெரியறவரெக்கும் நம்ம ஆளு மாதிரிதான் பேசணும் அவர் கிட்டே. இல்லேன்னா நம்ம ஆளாப் பண்ணிக் கணும். அவர் நம்ம ஆளு ஆயிட்டா, ஆயிரம் வோட்டாவது நமக்கு விழுந்துட்டுதுன்னு அர்த்தம். வா அத்தான்! யோசனை பண்ணாதே'' என்றார் தர்மராஜு. ரங்கன் அவரை வரச்சொல்லிச் சொல்லி அனுப்பலாம் என்றான்.

''பாரு ரங்கா! அவரெ நம்ம வீட்டுக்கு வரச் சொன்னா வராம இருக்கமாட்டார். வருவார். வந்துண்டே என்ன நினைப்பார்? 'பெரிய பண்ணையார் ஆனதனாலே வீட்டுக்கு வரச் சொன்னார். என்னைப் பயமுறுத்தவோ ஐஸ் வெக்கறதுக்கோ கூப்பிட்றார். எதுக்கு இந்த வம்புன்னு நினைச்சிக்குவார். நாமே போறோம்னு வெச்சிக்கோ, 'அப்பாடா! ஊருக்குப் பெரியவர் என்கிட்டே வந்தார்! என்ன மரியாதெ, என்ன அடக்கம், அவங்க என்ன கேட்டாலும் முடியாதுன்னு சொன்னா நன்னா யிருக்காது' என்று நினெச்சிக்குவார். இது நம்மோட அக்கறையே தவிர, அவர் அக்கறை இல்லே இல்லியா?''

கணுச்சாரி கோவிலில் இருந்தார். அம்மனுக்குப் பின்னால் கர்ப்பக்கிருகச் செங்கற்கள் சில சரிந்திருந்தன. அவற்றைச் சரியாகப் பொருத்திக் கொண்டிருந்தார். கோவிலுக்கு வண்ணங்கள் பூசிய பெரியவர்கள் முன் பக்கம் கவனித் தார்களே தவிர, கோவிலுக்குப் பின் பகுதியைக் பார்க்க வில்லை. ராமையா, தர்மராஜு வகையறா அவரைத் தேடிக் கொண்டு வந்தபோது, மல்லி மண்ணைப் பிசைந்து கொடுத்துக்கொண் டிருந்தாள். கணுச்சாரி சேற்றைப் பூசி, செங்கற்களை ஒட்டிக்கொண் டிருந்தார். கொஞ்ச தூரத்தில் ராஜு நின்றிருந்தான். அவர்கள் எல்லாரும் எதற்கு வந்திருக்

கிறுர்கள் என்பது அவருக்குத் தெரியும். ஆனல் இந்தப் பிரசாரத்துக்கு ராமையாவும் கிளம்பி விடுவாரென்று அவர் நினைக்கவில்லை.

''அதன்ஞய்யா! அப்போ எப்பவோ அம்மனேட நகைங்களுக்காகத் திருடன் போட்ட கன்னமில்லே அது? இவ்வளவு நாளா எங்க அத்தான் கிட்டே ஒரு வார்த்தை சொல்லலியே?'' என்ருர் தர்மராஜு.

''ஒரு தடவை சரி பண்ணிஞருங்க. கொளுத்துக்கார மேஸ்திரி போட்ட ஒட்டுத்தான் மறுபடியும் சாஞ்சிப் போயிட்டுதே'' என்ருர் கணச்சாரி.

''உன்கிட்டே தனியாப் பேசனும். கொஞ்சம் உங்க வீட்டு வரைக்கும் போயிட்டு வரலாம் வா!'' என்ருர் வெங்கன்ஞ, ராஜுவை முறைத்துப் பார்த்துக்கொண்டே.

''வேலெ முடிஞ்சதும் உங்க வீட்டுக்கே வர்றேன்'' என்ருர் கணச்சாரி.

''நாங்க போறேம்! ஆவட்டும், என்ன பேசனுமோ அதை இங்கேயே பேசிக்குங்க. மல்லீ, வா!'' என்று சொல்லிக் கொண்டே நகர்ந்தான் ராஜு. மல்லி மண்ணும் கையுமாகவே அவனைப் பின்தொடர்ந்தாள்.

''கையைக் கழுவிக்கோம்மா'' என்ருர் கணச்சாரி.

''ஏரிதான் இருக்குதே'' என்ருள் மல்லி. அவர்கள் இருவரும் போகும்வரையில் காத்திருந்து தர்மராஜு சொன்னர்: ''பாத்தியா அத்தான்! நமக்கு முன்னுடியே தொடங்கிட்டாங்க தேர்தல் பிரசாரத்தை!''

கணச்சாரி செய்துகொண் டிருந்த வேலையை ஒரு விநாடி நிறுத்தி, தர்மராஜுவின் பக்கமும் ராமையாவின் பக்கமும் பார்த்தார்.

''ராஜு அந்தப் பேச்சே எடுக்கலே. எனக்கு இதுவரைக்கும் தேர்தல் ஒண்ணு வருதுங்கற ஞாபகமே இல்லே. இதுவரைக்கும் எப்பவும் பேருக்குத் தான் தேர்தலே தவிர, பெரிய பண்ணையார் ரெண்டு பேரும் எப்படிச் சொல்ருங்களோ அப்படியேதானே நடக்கும்'' என்ருர் கணச்சாரி அதில் ஏதோ ஒரு குத்தல் இருந்தாற் போல் பட்டது ராமையாவுக்கு. அவருக்குக் கோபம் வந்தது.

''பெரிய பண்ணையாருங்க ரெண்டு பேரில்லே இந்த ஊர்லே'' என்று சொல்லிவிட்டார் ஆவேசத்தில்.

''பாரு கணச்சாரி, எங்க ராமையாத்தானுக்கு இன்னெருத்தர் சமமா? அவா எல்லாம் எவ்வளவு துஷ்டத்தனம் பண்ணிஞங்க? உனக்குத் தெரியாதா? அம்மன் திருவிழாவை நாசம்

செய்தது அவா. ஊர்லே குதிரையும் குடிசையும் பத்தவெச்சது அவா. அத்தோட ஊரெல்லாம் தம்மோட தர்மத்திலேதான் நடக்கறதாவும், இப்பொ இந்தப் பஞ்சாயத்து அவா கையிலெ வரலேன்னு ஊரு நாசமாய்ப் போயிடும்னும் பிரசாரம் பண்ணிண்டிருக்கரு'' என்றார் தர்மராஜு.

''கணக்கர் ஐயா! யார் தப்போ தவறோ அது அம்மனுக்குத் தெரியும். ஒருத்தர் தப்பைச் சொல்றதுக்கு எனக்கு அருகதை இல்லே. எங்க டீச்சர் ரொம்ப நல்ல வார்த்தை ஒண்ணு சொன்னர், எனக்கு ஒரு நாளு. படிக்கிற காலத்திலே, இன்னொரு பையன் மேலே குத்தம் சொன்னதுக்காகச் சொன்னரு; 'டேய், எதிராளி விரலைக் காட்டி அவன் தப்பைச் சொல்றப்போ எதிராளிப் பக்கம் ஒரு விரல்தான் இருக்கும். மிச்சம் மூணு விரலும் உன் பக்கமே காட்டிக்கிட்டிருக்கும். அந்த மூணு விரலுக்குப் பதில் சொல்லிட்டு, அப்பறம் நீ எதிராளி விஷயத்தை எடுக்கணும்டா'ன்னர். போகப் போகத் தெரிஞ்சிக்கிட்டேன், எனக்குப் புத்தி வந்ததிலேயிருந்து. அம்மன் முன்னடி சொல்றேன், அடுத்தவன் தப்பை நான் சொல்றதில்லே, அடுத்தவன் சொன்னலும் கேக்கறதில்லே.''

இவ்வளவு தெளிவாக, இவ்வளவு தைரியமாகக் கணுச்சாரி இது வரைக்கும் ஒரு நாளும் பேசிக் கேட்டது கிடையாது. ராமையாவுக்கு ஆச்சரியமாக இருந்தது. வெங்கன்னவுக்குக் கோபம் பொங்கி வந்தது.

''அது போவட்டும். உன் வோட்டை எங்களுக்குக் குடுக்கறியா இல்லியா?'' என்று சத்தம் போட்டார்.

''என்னோட வோட்டை யாருக்கும் குடுக்க மாட்டேன், ஐயா! என் பேச்சைக் கேட்டுத் தேர்தலை நிறுத்தி வையுங்க. ஊருக்கு நல்லதில்லே!'' என்றார் ராமையாவைப் பார்த்துக் கணுச்சாரி.

''அவங்க ஆதரவுலே கொழுப்பு ஏறிப் போச்சி, ஆவட்டும்!'' என்றான் ரங்கன்.

''என்னப்பா நீ, சின்னப் பையன் மாதிரி பேசிண்டு? கணுச்சாரி செத்தாலும் அந்தப் பக்கத்துக்குப் போவாரா? உனக்குத் தெரியாது. நீ சும்மா இரு. வா அத்தான்! அப்பறம் சாவகாசமாப் பேசிக்குவோம்'' என்றார் தர்மராஜு.

ராமையாவுக்குக் கணுச்சாரி சொன்னதில் ஆழ்ந்த உலக ஞானமும் தெளிவும் இருப்பதுபோல் பட்டன. ஆனால் சொல்லும் தோரணைதான் மிகவும் திமிர் நிறைந்ததாகத்

தோன்றியது. தம் தயவில் பிழைக்கும் ஒரு சாமானியமானவன் தம்மைவிடப் பெரியவனாகி விட்டாற்போல், தமக்குப் புத்திமதி சொல்வதா? தம் துணைவர்களுடன் விர்ரென்று போய்விட்டார். கஞ்சாரி பெருமூச்சு விட்டார்.

ராமையா பெரிய தெரு சாவடியிலிருந்து வீட்டுக்குள் வரும் போது, தேங்காய், பழம், பூ முதலியவற்றை எடுத்துக்கொண்டு புறப்பட்டுக்கொண் டிருந்தாள் லட்சுமி.

"எங்கே போறே?'' என்று கேட்டார் ராமையா. அவசியம் இல்லாத கேள்விதான்.

''அம்மன் கோயிலுக்கு.''

''தனியே எதுக்குக் கோயிலுக்கு?''

'அம்மன் என்ன பண்ணப் போறாங்க என்னை? மல்லம்மனுக்குப் பார்ட்டி ஒண்ணுமில்லியே?'' என்று கேட்டபடி லட்சுமி போய் விட்டாள். ராமையா அப்படியே நின்றுவிட்டார். அன்று வயலிலிருந்து வெங்கன்னாவும் ரங்கனும் இழுத்துக்கொண்டு வந்த பிறகு, அப்பாவும் மகளும் ஒருவரோடு ஒருவர் பேசிக்கொள்ள வில்லை. லட்சுமியைப் பார்க்கும்போதெல்லாம் அவளை அருகில் அழைத்து அன்பாக எதாவது பேசவேண்டும் என்று தோன்றும் ராமையாவுக்கு. ஆனால் தம்மை அவள் அவமதிக்கிறாள் என்ற சந்தேகம் அவர் மனத்தை இத்தனை நாட்களாகக் குத்திக்கொண் டிருந்தது. அவள் தமக்கு எதிர்ப்படாமல் திரிவதும், அவள் முகத்தில் ஒரு தீவிரம் படர்ந்திருப்பதும் அவருக்கு இந்தச் சந்தேகத்தைக் கொடுத்தன. வீட்டுக்குப் பெரியவர், ஊருக்கும் பெரியவர்தாம். தம்முடைய நல்லது கெட்டதில், தம் விருப்பு களில் தம் குடும்பத்தினர் அனைவருக்கும் அநுதாபம் இருக்க வேண்டும். சாண் பெண் லட்சுமி. அவள் மனத்தில் தமக்கு எதிரான, தம்மை விமர்சிக்கும்படியான அபிப்பிராயங்கள் இருக் கக்கூடாது. இருந்தால் அவரால் சகிக்க முடியாது. ஆனால் அவளை நிறுத்தி வைத்து, 'நீ என்ன நினைச்சிக்கிட்டிருக்கே?' என்று கேட் பதற்கு ஏனோ அவர் மனம் பின்வாங்கிக்கொண் டிருந்தது. ஒரேயடி யாக, பகிரங்கமாக அவள் தம்மை அவமதித்து விட்டால் அவரால் சகிக்கவே முடியாது. ஆகவே அத்தகைய நிலைமையைத் தாமே தேடி வரவழைப்பதற்கு ஒருவகையில் அவருக்குப் பயந்தான்.

தேவையான ஆவேசத்துக்கு ஆட்படாமல், லட்சுமி தமக்கு எதிரில் நின்று, மிக அமைதியாகத் தம்மை அவமதிக்க முடியும் என்பது அவருக்குத் தெரியும். அதனால் லட்சுமி என்றால் அவருக்கு

அன்பு ஆசைகளோடு கூட, ஓரளவு பயமும் உண்டு. தம் இரத்தத்தைப் பகிர்ந்து கொண்டு பிறந்த குழந்தை ஆதலால் தம்மை அவள் ஒருத்தியே தைரியமாக எதிர்க்க முடிகிறது என்ற சிறு கர்வமும் உண்டு. இப்படி விதவிதமான உணர்ச்சிகளுக்கு ஆளான அவருடைய மனசு லட்சுமி விஷயமாக எந்த முடிவுக்கும் வர முடியாமல் இருந்தது. தம்மிடம் மனத்தைத் திறந்து பேசினால் நன்றாக இருக்கும். தன் இதயத்திலுள்ள வேதனையை அவரைப் பகிர்ந்து கொள்ளச் சொன்னால் அவருக்குப் பெரிய சுமை இறங்கியதுபோல் இருக்கும். ஆனால் லட்சுமி தன் வேதனையைத் தானே தனிமையில் அநுபவித்துக் கொண்டிருக்கிறாள். அந்த வேதனையைச் சுமக்கக் கூடிய சக்தி அவ்வளவு சின்ன வயசிலேயே அவளுக்கு அமைந்துவிட்ட தென்றால், அதற்குக் காரணம் தன் மகள் என்பதே! ராமையா பெருமூச்சு விட்டார்.

'அம்மனுக்குப் பார்ட்டி இல்லே இல்லியா?' என்ற லட்சுமியின் வார்த்தைகள் அவருடைய மனத்தில் மிக மென்மையான இடத்தில் எங்கேயோ குத்தின. 'கணுச்சாரிக்குப் பார்ட்டி இல்லை' என்பது அதில் தொனித்தது. அது நிஜம் என்று அவர் அந்தராத்மாவுக்கே தெரியும். இருந்தாலும் கணுச்சாரி சொன்ன வார்த்தைகளைக் கடந்து அது அவர் மனத்தில் பொத்துக்கொண்டது. தமக்காகப் பிரசாரத்துக்கு வந்த தர்மராஜுவை உத்தேசித்தே கணுச்சாரி அந்த வார்த்தைகளைச் சொன்னார் என்பது அவருக்குப் புரியாமல் இல்லை. ஆனால் தமக்காகப் போனபோது தர்மராஜுவைச் சொன்னாலும் தம்மைச் சொல்வதுபோல்தான். கணுச்சாரி விஷயம் என்னவோ தெரிந்துகொள்ள வேண்டும்.

ரங்கனும் வெங்கன்னாவும் ஹைதராபாத் சென்று, நாலாயிரத்துக்கு ஒரு பழைய காரை வாங்கி வந்தார்கள். பஞ்சாயத்துத் தேர்தல் பிரசாரத்துக்குக் கார் என்று சொன்னபோது ராமையா அசந்து விட்டார். ஆனால் ஏதோ ஞாபகத்தில் அவர் 'ஊம்' என்று சொல்லிவிட்டார். சொன்னாற் போலத்தான் அவருக்கு நினைவு. நாலாயிரமோ ஐயாயிரமோ போட்டால் போதும் என்று ரங்கன் சொன்னான். ஆனால் 'கார்' என்ற சொல்லைத் தெளிவாகக் கேட்டதாக ராமையாவுக்கு நினைவில்லை. இந்தச் சர்ச்சையில் ஆழ்ந்திருந்தபோது தர்மராஜுவும் லிங்கையாவும் வந்தார்கள்.

''என்னத்தான்! இதுக்கா இவ்வளவு ராமாயணம்? வேண்டாம்னு வித்துத் தள்ளிட்டாப் போவுது. ஒரு வழியா வாங்கிணே மில்லே; நாலு நாளு இருக்கட்டும்'' என்றார் தர்மராஜு.

ஆனால் நாலு நாட்கள் காரில் திரிந்ததுமே ராமையாவுக்குத் தேர்தல் வேகம் தொற்றிக் கொண்டது. கார் தேவையென்று தோன்றியது. அதை ஊகித்த தர்மராஜு, ''பஞ்சாயத்துத் தேர்தலுக்குக் கார் எதுக்கு அத்தான்? வித்துடு'' என்று சொல்லப் போக, ''எப்படியும் வாங்கிட்டோ மில்லே. தேர்தல் முடிஞ்சப் பறம் வித்துடலாம்'' என்றார் ராமையா.

புன்னையா எதிர்க் கட்சியினரின் பிரசாரத்தைப் பார்த்து, தாமும் ஏதாவது செய்யவில்லை என்றால் தம் கட்சி பலவீனமாகி விடும் என்று பத்துப் புதுச் சைக்கிள்கள் வாங்கி, அவற்றில் அட்டையில் வண்ண வண்ண விளம்பரங்களை மாட்டி, ஸ்கூல் பிள்ளைகளைத் தெருவழியாக அனுப்பினார். ராஜு ஒருவன்தான் வீட்டை விட்டு வெளியே கால் வைக்கவில்லை. இந்தப் பிரசாரம் வேண்டாம் என்றும் சொல்லவில்லை. சுப்பையா கிராமப் பள்ளி ஆசிரியர்களையும் உடன் சேர்த்துக் கொண்டார். அவர்களுக்குச் சம்பளம் உயர்த்துவதாக வாக்களித்தார். மாணவர்களை அரசியலில் இறக்கிச் சுப்பையாவின் கூட்டத்தினர் அவர்கள் படிப்பைப் பாழாக்குவதாக ராமையாவின் கூட்டத்தினர் தந்தைமார்களை எச்சரித்தார்கள்.

ஆனால் சுப்பையாவும் புன்னையாவும், வெங்கடேசு மேலேயும், மற்ற வேலையாட்கள் மேலேயும் தாங்கள் இதுவரைக்கும் போட்ட கிரிமினல் கேஸ்களை வாபஸ் வாங்கிக் கொண்டார்கள். அவர்களுக்கு இதுவரையில் ராமையா எவ்வளவு உதவி பண்ணியிருந்தாலும், தலைமுறை தலைமுறையாக அவர்கள் சுப்பையாவின் ஆட்கள். அதோடு, ராமையாவுக்கு ஊரில் எவ்வளவு செல்வாக்கு இருந்தாலும், பட்டணத்துக் கோர்ட்டில் அவர் பேச்சுக்கு எவ்வளவு மதிப்பு இருக்குமோ என்பது அவர்களுக்குச் சந்தேகந்தான். அதனால் கேஸ்களை வாபஸ் வாங்கிக் கொண்டதுமே அவர்கள் எல்லாரும் சுப்பையாவின் பக்கம் திரும்பி விட்டனர். அத்துடன் டிராக்டர் பழுதாகி விட்டதால், அவர்கள் மறுபடியும் சாகுபடியைத் தொடங்கியதுமே வேலையில் சேரலாம் என்று பதாலு மூலமாக வாக்களித்தார் சுப்பையா. அவர்களை மறுபடியும் தம் பக்கத்துக்குத் திருப்புவதற்காக ஒரு நாள் நிறைய கள்ளை ஊற்றி, அவர்களில் முக்கியமான மூன்று பேரை ராமையாவுக்குத்

தெரியாமல் காரில் பட்டணம் வரை அழைத்துச் சென்று வந்தார்கள் தர்மராஜுவும் ரங்கனும்.

ஆனால் பட்டணத்திலிருந்து திரும்பி ஊருக்குள் வரும்போது குடித்திருந்த வெங்கடேசும், பென்டையாவும் காரில் கலாட்டா செய்யத் தொடங்கிவிட்டனர். டிரைவரிடம் வம்புக்குப் போனார்கள். கார் அவன் வசமிருந்து தப்பிவிட்டது. அந்தச் சமயம் தங்கப்பா ஒரு பள்ளி மாணவர் கூட்டத்துக்குத் தலைமை தாங்கி, பெரிய தெரு வழியாகக் கோஷம் போட்டுக்கொண்டு வந்து கொண்டிருந்தான். நிதானம் தப்பி ஓட்டிய கார், பையன்கள் ஊர்வலத்தின் நடுவில் உழுதுகொண்டே போயிற்று. அவர்கள் ஓரத்தில், திண்ணைகள் மேலே ஏறப் போக, காரும் ஒரு திண்ணையில், ஏறப் போய் நின்றுவிட்டது. உயிருக்கு ஆபத்து ஏற்படவில்லை என்றாலும், கார் அவ்வளவாகக் கெட்டுப் போகவில்லை என்றாலும், இந்த நிகழ்ச்சி தேர்தல் பிரசாரத்தில் மிக முக்கியமான இடத்தைப் பெற்றது. பரஸ்பரம் கேசுகள், விசாரணை, டாக்டர் சர்டிபிகேட்கள், போலீஸ் ரோந்துகள்! இவற்றால் கிராமத்துச் சூழ்நிலை மும்முரமாகி விட்டது. அம்மன் திருவிழாவுக்குப் பிறகு கொஞ்சம் அமைதியடைந்த கிராமத்து நிலைமை மறுபடியும் ஆபத்து நிறைந்ததாக உருவாயிற்று.

அடிபட்ட கங்கப்பாவுக்குக் கட்டுகள் கட்டி, கட்டுகள் மேல் சாயத்தால் இரத்தக் கறைகள் பூசி, அலங்காரம் செய்த இரட்டை மாட்டு வண்டியில் ஏற்றி, புன்னையா நடுத்தெருவில் ஊர்வலம் நடத்திக் கொண்டே பிரசாரம் செய்யலானார், கார் விபத்து நடந்த மறுநாள்.

''அவங்க மட்டும் ஜெயிச்சா, உங்க எல்லாருக்கும் இதுதான் கதி'' என்று கங்கப்பாவை உதாரணமாகக் காட்டினார். தெருவெல்லாம் ஜனம் திரண்டுவிட்டது. எதிரில் வந்தது ராமையாவின் கார். ரேடியேட்டர் குறையைச் சரிப்படுத்துவதற்கு நேரம் இல்லாமல் போய்விட்டது. இன்ஜினை மட்டும் சரிசெய்து பட்டணத்திலிருந்து கொண்டு வந்தார் தர்மராஜு. காரில் டிரைவர் பக்கத்தில் தர்மராஜு இருந்தார். பின் சீட்டில் மூன்று புதிய முகங்கள் இருந்தன. வண்டியும் காரும் ஒன்றுக்கொன்று எதிர்ப்பட்டன. காரின் பின்னால் சேர்ந்தார்கள் ராமையாவின் ஆட்கள். வண்டிக்கு இருபக்கத்திலும் காவலுக்கு நின்றனர் சுப்பையாவின் ஆட்கள். மற்றவர்கள் பயந்துகொண்டே இரண்டு பக்கத்துத் திண்ணைகள் மீதும் நின்று கொண்டனர். வண்டி முன்னால் பாணத்தடியைத் தாங்கிக் கொண்டு நின்றான் பதாலு.

''ஓட்டுடா, ஒதுங்கிப் போகலேன்னு அவுங்கதான் சாவாங்க!'' என்றார் தர்மராஜு. டிரைவர் தயங்கிக் கொண்டிருந்தான். அவன் மேல் ஏற்கனவே ஒரு கேஸ் இருந்தது. வண்டியின் பக்கத்தில் இருந்தவர்கள் தடிகளைத் தூக்கிக் கொண்டு தயாராக நின்றார்கள், கார் நகர்ந்தால் பச்சடி செய்வதற்கு.

போலீஸ்காரர்கள் குறுக்கே வந்தார்கள். இன்ஸ்பெக்டர் இந்தத் தடவை கலாட்டா நடந்தால் எல்லாரையும் கைது செய்யவேண்டி வருமென்றும், 144-ஆவது செக்ஷன் பிரயோகிக்க வேண்டி வருமென்றும் எச்சரித்தார்.

''பாருங்க சார், ஊர்லெ ஜனம் பத்தாம உதவிக்கு வெளி யூர்லேயிருந்து பிடிச்சிக்கிட்டு வர்றாங்க ஆளுங்களை'' என்றார் புன்னையா, காரின் பின் ஸீட்டில் இருந்த பெரிய மனிதர்களைக் காட்டிக்கொண்டே.

''நீங்களே சாட்சி சார், அவன் மேலே 'டேமேஜ்' கேஸ் போடப்போறேன். எங்க ராமையா அத்தான், மகளைப் பெண் பார்க்கப் வர்றவங்களை அழைச்சிண்டு வந்தா, அந்தப் பெரிய மனுஷாளை இப்படி அவமானப்படுத்தறு?'' என்றார் தர்மராஜு.

இன்ஸ்பெக்டர் போலீசை வரிசையாக நிறுத்தி, வண்டியும் காரும் ஒன்றை ஒன்று தாண்டிப் போவதற்கு ஏற்பாடு செய்தார். முற்றுகை தீர்ந்தது.

''அப்பப்பா! பெரிய மனுஷாளை நம்ம கார்லே ஏத்திண் டேன். காரு போனா இன்னொரு காரு வாங்கிக்கலாம். இவா ளுக்கு ஏதாவது ஆபத்து வந்தா? உசிரைக் கையிலே பிடிச்சிண் டிருந்தேன்னு வெச்சிக்கோ, நம்ம வீடு வந்து சேர்றவரைக்கும். அத்தான்! இனிமே இவாளை எப்படி மரியாதெயோட ஊர்லே யிருந்து வெளியே அனுப்பறதோ அது உன்னோட பொறுப்பு. என்னாலே இனிமே சுமக்க முடியாது, இந்தச் சுமையை. என்ன ஜனம்! என்ன ஜனம்! வண்டியைக் காருக்குக் குறுக்கே நிறுத்திட்டாங்கையா. அந்தப் பதாலுப் பயத் தடியைத் தூக் கிண்டு முன்னாலே நின்னுட்டான். இன்ஸ்பெக்டரையா சமயத் துக்கு வந்ததனாலெ ஆபத்தில்லாமெ போயிட்டுது'' என்று சொல்லி அங்கலாய்த்தார் தர்மராஜு.

வந்த பெரிய மனிதர்கள் யாரோ? ராமையாவுக்குப் புரிய வில்லை. மரியாதைக் குறைவு வராதபடி, ''இவங்க யாருன்னு சொன்னே?'' என்று கேட்டார்.

''நல்லாருக்கு அத்தான்! எல்லாம் முடிஞ்சப்பறம் ராம னுக்குச் சீதை இன்னு வேணும்னு கேட்டாளும் உன்னை மாதிரி ஒருத்தன். பல்லிபாடு குர்ரால பாசவையா இவரு?''

குர்ரால பாசவையா யாரோ, அவரைப் பற்றித் தர்மராஜு தம்மிடம் என்ன சொன்னுரோ? ராமையாவுக்கு ஒன்றும் நினை வில்லை. ஆனல் அவர்கள் வந்தது லட்சுமியைப் பார்ப்பதற்காக என்பது மட்டும் அர்த்தமாயிற்று. வெறுப்பு வெள்ளமாகப் பெருகியது அவர் மனத்தில். அந்தக் குடும்பத்தோடு சம்பந்தம் கெட்டாமாதிரிதான்! இத்தனைப் போராட்டங்கள் நடந்தபிறகு மனம் ஒத்துப்போவது இயலாது. லட்சுமி அந்த வீட்டு மருமக ளாக ஒரு நாளும் ஆக முடியாது. இவையெல்லாம் ராமை யாவின் மனத்தில் தெளிவாகப் பட்டது. ஆனல் வேறு சம்பந்தம் லட்சுமிக்குப் பார்க்க வேண்டுமென்று அவர் மானசீகமாக முடிவு செய்யவில்லை. ஆகவே தர்மராஜு மேலேயும், வந்தவர்கள் மேலேயும் கோபம் அளவுக்கு மீறிப் பெருகியது.

ஆனல் வந்த பெரிய மனிதர்களை அவமரியாதை செய்யவில்லை ராமையா. அவர்கள் பெரிய தெரு சாவடியில் தங்குவதற்கு ஏற்பாடு செய்தார். பொங்கி வந்த கோபத்தை எல்லாம் அடக்கிக்கொண்டு, அவர்களுக்கு வேண்டிய எல்லாச் சௌகரியங் களையும் கவனித்தார். வீட்டுக்குள் வந்ததும் அவர் கோபம் கரை புரண்டது. தர்மராஜு, தம் மனைவி எல்லார் மேலேயும் எரிந்து விழுந்தார். சூராலுவுக்கு இந்தச் சம்பந்தத்தில் விருப்பம் இல்லை. எப்போதாவது இந்தப் பகைகள் தீர்ந்துவிடுமென்றும், எல்லா வகையிலும் வசதியான உள்ளூர்ச் சம்பந்தம் நிறைவேறு மென்றும் அவளுடைய பெண் இதயத்தில் அசம்பாவிதமான ஆசை ஒன்றிருந்தது. கணவன் கோபத்தைப் பெருக்கவில்லை என்றாலும், ராமையா தன் மேல் எரிந்து விழுந்தபோதுகூட உள்ளுக்குள் சந்தோஷப்பட்டாள்.

''நீதானே அவங்களை அழைச்சிட்டு வரச் சொன்னே? இப்பொ இப்படிச் சொன்னு நமக்கு இன்னு மரியாதெ இருக்கும்?'' என்றான் ரங்கன். ராமையா எவ்வளவு கோபமாக இருந்தாலும் அவருக்குப் பிடிக்காததைச் சொல்வதற்கு அவன் ஒருவனுக்குத் தான் தைரியம் இருந்தது. வெங்கன்னு வாய் திறக்க மாட்டார்.

தர்மராஜு தம் பாணியில் ராமையாவைச் சமாதானப்படுத்த முயன்றார். கடைசியில் ஓர் உத்தியைக் கையாண்டார்.

''அத்தான்! இப்போ பெண்ணைக் காட்ட மாட்டேன்னு நம்ம மரியாதைக்கே குறைவு. காட்டுவோம். அவுங்களைச் சாயந்திரம் அழெச்சிண்டு போயி பல்லிபாடுலே விட்டுட்டு வந்துடுவோம். அதுக்கப்பறம் மெதுவா யோசனை பண்ணிண்டு, சம்பந்தம் விருப்பம் இல்லேன்னு சொல்லி அனுப்பிச்சிடுவோம். வர்ற திட்டெல்லாம் தாங்கிக்கறதுக்கு நான்தான் இருக்கேனே'' என்றார்.

ஆனால் பெண்ணைக் கல்யாண வீட்டாருக்குக் காட்டுவதென்றால் பாதி சம்பந்தத்துக்கு ஒத்துக்கொண்டாற்போலத்தான். அதிலும் பையன் வீட்டாரிடம் 'உங்க சம்பந்தம் எங்களுக்குப் பிடிக்கவில்லே' என்று சொல்வது எப்படி? அவர்கள் பெண்ணைப் பார்த்து முடிந்ததும் தங்கள் சம்மதத்தைச் சொல்லிவிட்டால்...? பையன் எல்லா விதத்திலும் பொருத்தமானவனாக இருந்தால் சம்பந்தம் வேண்டாமென்று சொல்வதற்கு எந்தச் சாக்கைச் சொல்ல முடியும்? ஆகவே முதலில் லட்சுமியை அவர்களுக்குக் காட்டுவதற்கே அவர் மனம் ஒப்பவில்லை.

இந்த வாக்குவாதத்தை யெல்லாம் தனக்கொன்றும் சம்பந்தம் இல்லாதது போலவே கேட்டுக் கொண்டிருந்தாள் லட்சுமி. அவள் மனம் அன்று வயல் வரப்பில் ராஜுவிடம் பேசியபொழுது ஓரளவு உடைந்துவிட்டது. ராஜு தங்கள் இரண்டு பேரிடையே உள்ள பிணைப்பை, இந்தப் பகைகளுக்கும் வைராக்கியங்களுக்கும் எட்டாத ஓர் எல்லையில் பத்திரமாகப் பாதுகாப்பான் என்றும், சுற்றிலுமுள்ள சூழ்நிலை அதை மாசுபடுத்தாதபடி காப்பாற்றுவான் என்றும் ஆசைப்பட்டாள். ஆனால் ராஜுகூட மற்ற ஆண்களைப் போலவே பேசினான். ரங்கனும் தன் அண்ணனும் எதிராளிகளை விமர்சித்தது போலவே, ராஜுவும் தன் சொந்தக்காரர்களை விமர்சித்தான். அதனால் அவள் மனம் உடைந்துவிட்டது. அலட்சியம் ஆட்கொண்டது. இனி என்ன நடந்தாலும் தாங்கிக் கொள்வதற்கு அவள் மானசீகமாக முடிவு செய்து கொண்டாள். தந்தை படும் வேதனை அவளுக்குப் புரிந்தது. கடைசியில் எப்படியும் முடிவு செய்ய முடியாமல் அவராகவே கேட்டார்.

''நீ என்ன சொல்றேம்மா?''

'உன் இஷ்டம் அப்பா' என்று அவள் சொல்லி இருந்தால் ராமையா என்ன செய்திருப்பாரோ! அவள் நீண்ட நேரம் மௌனமாக இருந்துவிட்டுக் கடைசியில் சொன்னாள் :

''வரச்சொன்னே இல்லியா? அவங்களிடம் காட்டாமெ எப்படி அனுப்புவே?''

''பெண்ணுக்கு விருப்பந்தான்'' என்ருன் ரங்கன்.

அந்த விஷமாக ராமையாவுக்குச் சந்தேகங்கள் இருந்தாலும் அவளுடைய அரைச் சம்மதத்தைச் சாக்காக வைத்துக்கொண்டு, இந்த இக்கட்டிலிருந்து வெளியேறுவதே நல்லதென்று பட்டது அவருக்கு. தம் மனத்தில் ஒன்றுக்கொன்று முரணுன எண் ணங்கள் போராடிக் கொண்டிருந்தாலும், அவருக்குத் தம் கௌரவத்தின்மீதுள்ள பற்று வேறு எதன்மீதும் இல்லே. பெண் பார்க்க வந்தவர்களே, முக்கியமாகத் தம் அழைப்பின் பேரில் வந்தவர்களேப் பெண்ணேக் காட்டாமல் அனுப்பிவிடுவது அவர் கௌரவத்துக்குச் சரியான மரண அடியாகும். லட்சுமி சொன்ன வார்த்தைகளில் ஒருவிதமான குத்தல் இருப்பதுபோல் அவருக்குத் தோன்றிளுலும், அவருடைய அகம்பாவம் அந்த ஊகத்தை ஏறி மிதித்து விட்டது. லட்சுமி என்ளுவாளுலும் தம் குழந்தை, தம் கௌரவத்துக்குக் குறை வர விடமாட்டாள். அவளுக்கு எவ்வளவு வேதனேயாக இருந்தாலும் சரி, இந்தச் சம்பந்தத்தைத் தாம் நிச்சயித்தாலும் சந்தோஷமாக ஏற்றுக் கொள்வாள்.

ராமையா மகளே ஒருமுறை பார்த்தார். அவள் முகம் சலனம் இல்லாமல் இருந்தது. எந்த ஒரு மாறுதலும் இல்லே. தந்தை தன்னேப் பார்த்தபோது தன் பார்வையை இறக்கவில்லே. அவள் கண்களில் தமக்கு விளங்காத ஆழம் எதுவோ தென்பட்டது. ராமையாவை எங்கோ வேதனேப்படுத்தியது அந்தப் பார்வை. அந்த வேதனே கோபமாக, ஓர் உறுதியாக மாறியது.

''மத்தியானம் மூணு மணிக்குப் பார்க்கட்டும், பெண்ணே. நல்ல புடவை கட்டி ஜடை போட்டுடுங்க'' என்று மனேவியையும் மரு மகளேயும் பார்த்துச் சொல்லிவிட்டுப் போய்விட்டார். லட்சுமி மெள்ளப் படியேறிப் போளுள் தன் அறைக்குள். பால்கனிக்கு அவள் பின்ளுலேயே சென்று தன்மடியில் உட்காரவைத்து ஆறுதல் சொல்ல வேண்டுமென்று மிகவும் விரும்பிளுள் சூராலு. ஆளுல் மகள் அமைதியாகப் படியேறிப் போனதால், அவள் பின்ளுல் போவதற்குத் தைரியம் போதவில்லே தாய்க்கு.

ராஜு ஏரிக்கரையில் உட்கார்ந்திருந்தான். வயலில் டிராக்டரில் எரிந்துபோன கம்பிகளை மாற்றி, கெட்டுப் போன யந்திரப் பகுதிகளைச் சரிப்படுத்திக்கொண்டிருந்தான் மெக்கானிக்.

வெயிலுக்கு வயல் வெடித்திருந்தது. வெடித்த களிமண் இரும்பு போல இறுகிப் போயிருந்தது. வெடிப்புகளுக்குள்ளே களிமண்ணின் இருட்டு ஆத்மா மெள்ள மெள்ள எட்டிப் பார்த்துக் கொண்டிருந்தது. நட்ட நடுப்பகல் வெயிலில்கூடக் களிமண்ணின் ஆத்மா இருண்டே இருக்கும். பிளக்க முடியாத இருட்டு; மனிதனின் பார்வையும் மனமும் பிளக்க முடியாத இருட்டு. களிமண்ணின் வெடிப்புகளுக்குள்ளே அரை நினைவோடு பார்த்துக் கொண்டே உட்கார்ந்திருந்தான் ராஜு. வெடிப்பு விட்ட நிலத்தில் உலர்ந்துபோன நெல் காம்புகளிலிருந்து தப்பியபடி ஊர்ந்து வந்துகொண்டிருந்தது ஒரு நீர்ப்பாம்பு. அதன் அடிவயிற்றில் வெண்மையான மென்பகுதி கூரான களிமண் ஊசிகளில் உராய்ந்து கொண்டிருந்தது. ஆனால் பாம்புக்கு அந்த வலி தெரிந்தாற் போல் இல்லை. மென்மையான களிமண் ஊசிகளின்மேல் ஊர்ந்தது பாம்பு. ஊரும் முனைப்பில், அமைதியாகப் பார்த்துக்கொண்டிருந்த ராஜுவைக் கவனிக்கவில்லை பாம்பு. அருகில் வந்த பிறகு பார்த்தது. கண்களால் அல்ல. முழு உடலாலும் பார்த்தது; நின்றுவிட்டது. ஒரு விநாடி ஸ்தம்பித்து விட்டது. சட்டென்று ஒரு பக்கமாகத் திரும்பி ஊர்ந்தது. கரையேறி ஏதோ அவசர வேலை இருப்பது போல் அந்தப் பக்கம் ஏரிக்குள் நழுவிப் போய் விட்டது. தண்ணீரில் நழுவிக்கொண்டிருந்ததால் நிலத்தின் மேல் ஊர்வது போலவே இருந்தது ராஜுவுக்கு. தண்ணீருக்கும் நிலத்துக்கும் நீர்ப்பாம்புக்கு வித்தியாசம் இல்லை.

துர்—டுப்—துர்—ர்-ர் என்று சத்தம் போடத் தொடங்கியது டிராக்டர். ராஜு அதன் பக்கம் பார்த்தான். சரிப்படுத்திய டிராக்டரை மெக்கானிக் கொஞ்சதூரம் ஓட்டினன். ஸ்விட்சைப் போட்டதுமே கத்தி போன்ற டிராக்டர் தகடுகள் இறுகிப் போன களிமண்ணைப் புரட்டிப் போட்டன; மிக எளிதாகப் புரட்டிப் போட்டன. கருங் களிமண்ணின் இருட்டாத்மா இன்னும் ஆழத்துக்கு ஆழ்ந்து போய்விட்டது. நிலம் பணிந்து போய்விட்டது. டிராக்டருக்கு அடிமையாகிக் கையாலாகாமல் டிராக்டர் சால்களில் மல்லாந்து விழுந்துகொண்டிருந்தது.

பாம்புக்கு நிலமென்றால் மிகவும் பிடிக்கும், நெருக்கங்கூட. டிராக்டருக்கு நிலம் கீழ்ப்படியும். மனிதனுக்கு? நிலத்தை நெருக்கமாக்கிக் கொள்ளும் அறிவு, கீழ்ப்படுத்திக் கொள்ளும்

சக்தி மனிதனுக்குப் போய்விட்டதா? கருங்களிமண்ணைப் போல் இறுகிப் போன மனிதனின் அந்தராத்மாவைப் பிளந்து மென்மையாக்கும் அறிவு, சக்தி சிருஷ்டியில் எங்கே இருக்கிறது?

ராஜு வீட்டில் நுழையும்போது பெரிய மாநாடு நடந்துகொண்டிருந்தது, கூடத்தில். தெற்குப் பக்கத்து அறைக் கதவுக்குப் பின்னால் நின்றுகொண்டு அவனுடைய அண்ணி சுந்தரம்மா எல்லாவற்றையும் கேட்டுக்கொண்டிருந்தாள். சுப்பையா பெரிய சாய்வு நாற்காலியில் முன்னால் தள்ளி உட்கார்ந்திருந்தார். நெற்றிச் சுருக்கங்களும் துடித்துக்கொண்டிருந்த நாசித் துவாரங்களும் அவருக்கு உள்ளே எரிந்துகொண்டிருந்த எரிமலையின் அறிகுறிகள். புன்னையா படபடப்போடு, இருப்புக் கொள்ளாமல் நடமாடிக் கொண்டிருந்தார். கங்கப்பா தூண்போல, மோவாய்க்குக் கீழே பாணத்தடியை முட்டுக் கொடுத்து நின்றிருந்தான். மேற்குப் பக்கத்து அறை வாயிற்படியில் திகிலோடு குந்தியிருந்தாள், சேஷம்மா. பதாலு நுழைவாசலை ஒட்டி நின்றிருந்தான். வடக்கு வராந்தாவில் கன்றுக்குட்டிகளுக்குத் தவிடு பிசைந்து கொண்டு, தனக்கும் இதற்கும் சம்பந்தமே இல்லாததுபோல் கேட்டுக்கொண்டிருந்தாள் மல்லி. புன்னையா, பாகிஸ்தான் விஷயமாக அரசாங்கத்தைப் பிய்த்து உதறும் ஜனசங்கத் தலைவர்போல் குரலை உயர்த்தி வாதித்துக் கொண்டிருந்தார்.

''அவங்க அப்படிப் பட்டவங்கன்னு தெரியாதா என்ன? நீ இப்படி வலையிலே மாட்டிக்கிட்டு உக்காரப் போயிதான் அவங்களுக்கு அப்படிக் கொழுப்பேறிப் போச்சி. முதல்லெ, ஆரம்பத்திலேயிருந்தே 'அத்தான்! அத்தான்'னு அவர் என்ன செஞ்சாலும் தாளம் போட்டுக்கிட்டிருந்தே. நம்பளைவிடப் பெரிய பண்ணையாருன்னு, இல்லே நம்பளைவிடப் பெரிய மனுஷனுன்னு? ஊரிலெ அவர் ஆடினது ஆட்டம்; பாடினது பாட்டுன்னு ஆயிப் போச்சி, உன் அடக்கத்தினலே.''

''என்ன செய்யச் சொல்றேடா? அந்தக் காருக்குக் கீழே போய் விழச் சொல்றியா? வந்தவங்களைக் குத்திக் கொல்லச் சொல்றியா?'' என்று கேட்டார் சுப்பையா, மகன் குரல் அளவுக்குத் தம் குரலை உயர்த்தி.

''வந்தவங்களோட நமக்கு என்ன வேலை? இந்தச் சம்பந்தம் கெட்டுப் போச்சின்னு அம்மன் திருநாள்ளியே தெரிஞ்சி போச்சில்லே! இதுக்குள்ளே ராஜுக்கு ஒரு நல்ல சம்பந்தம் பாத்துக் கல்யாணம் பண்ணியிருந்தா, நம்ம கை ஓங்கியிருக்கு மில்லே. நமக்கு முன்னால் அவங்க பொண்ணுக்கு வேற இடம் பாத்துப்

பண்ணிட்டா நம்ம மரியாதெ என்னவறது? ஊர்லெ தலையைத் தூக்கிட்டு நடக்க முடியுமா?''

ராஜுவுக்கு விஷயம் புரிந்தது. இருந்தாலும் விஷயம் என்ன வென்று கேட்டான்.

''லச்சிமிக்கு வேறெ இடம் பாக்கறாங்களாம்'' என்றான் கங்கப்பா.

''பாக்கறது என்னடா, தாம்பூலங்கூட மாத்திக்கிட்டப்பறம்? தர்மராஜு சொல்லிக்கிட்டிருக்கான், ஏரிகரையிலெ பஞ்சா யத்துக் கல்லு மேலே உக்காந்துகிட்டு'' என்றார் புன்னையா.

''பண்ணிக்கிட்டா பண்ணிக்கிட்டுப் போவட்டும். நமக்கு என்ன வந்தது ?'' என்றான் ராஜு.

''வெக்கமில்லேடா அதைச் சொல்றதுக்கு? அந்தப் பொண்ணெ உனக்குக் குடுக்கறதுக்கு ஒத்துக்கிட்டு, அம்மனுக்கு ஆட்டைப் பலி குடுத்து, நம்ம கிட்டெ தாம்பூலம் மாத்திக்கிட்டு, நமக்குத் துணி எல்லாம் எடுத்துக் குடுத்து எல்லாம் பண்ணிட்டு நம்மகிட்டெ ஒரு வார்த்தே சொல்லாமெ இன்னொரு சம்பந்தம் பண்ணிக்கிறாரு அந்தப் பெரிய மனுஷன்!''

''டேய் சின்னவனே! என்னானாலும் சரி, அந்தப் பொண்ணுக்கு முன்னாடி உன் கல்யாணம் முடிஞ்சிடணும்'' என்றார் சுப்பையா நாற்காலியிலிருந்து எழுந்து கொண்டே.

''அதுதான் சரி'' என்றார் புன்னையா.

''அவனுக்கின்ன குறைச்சல்னு வேறெ சம்பந்தம் பார்க்கிறார் ராமையண்ணா? நான் போய் நிக்க வெச்சி கேக்கறேன்'' என்றாள் சேஷம்மா.

''நீ போயி ஒண்ணும் கேக்க வேணாம். விடியறதுக்குள்ளே சம் பந்தம் பேசி முடிச்சிட வேண்டியதுதான்'' என்றார் புன்னையா. கதவு மறைவிலிருந்து கொஞ்சம் வாயிற்படிக்கு வந்து சொன்னாள் சுந்து.

''வேறெ தேடறது எதுக்கு? எங்க சித்தி பொண்ணைப் பண்ணிக்கச் சொல்லி எப்பவோ கேட்டாங்கில்லே. ருக்கு தங்க விக்கிரகம். ஒரே பொண்ணு, நூறு ஏக்கரா நஞ்சை. காக்கா கிட்டே சொல்லி அனுப்பிச்சா போதும். கண்ணுலெ ஒத்துக்கினு பொண்ணைக் குடுப்பாங்க.''

''ஏண்டா, அந்தப் பொண்ணைப் பாத்திருக்கறே இல்லே, என்ன சொல்றே?'' என்று கேட்டார் சுப்பையா.

''பொண்ணு என்ன லட்சணமா இருப்பா!'' என்றாள் சேஷம்மா.

''இருநூறு தோலா நகைங்க சின்னப்பவே போட்டிருக்கறுங்க!'' என்ருள் சுந்து.

''ஏண்டா, இடிச்சி வெச்ச புளி மாதிரி அப்படிப் பாத்துக் கிட்டிருக்கறே? ஊம்னு சொல்லேன்''' என்ருர் புன்னேயா.

''நூறு ஏக்கரா நஞ்சை, இருநூறு தோலா தங்கமில்லேன்ஞ நாம பிச்சை எடுத்துதானே பொழைக்கணும்?'' என்ருன் ராஜு அருவருப்போடு.

''வரதட்சணேக்காக யார் அழுதாங்கடா? நல்ல சம்பந்தமா இருக்குதுன்னு சொன்ஞ, உங்க அண்ணி'' என்ருர் புன்னேயா.

''சொத்தோட வர்ற பொண்ணு எனக்கு வேஞும். வரதட்சணே கொடுக்கற சம்பந்தம் எனக்கு வேணவே வேணும்'' என்ருன் ராஜு.

''சின்னவருக்கு லச்சிமி மேலெ ஆசை இன்னும் போகலே'' என்ருள் சுந்து.

''எல்லா ஆசையும் போயிட்டுது. இப்போ ஒண்ணுமில்லே, எனக்கு இப்போ கல்யாணத்திலெ விருப்பம் இல்லே, அவ்வளவு தான்'' என்ருன் ராஜு பிடிவாதமாக.

''ஏன் விருப்பம் இல்லேடா?'' என்று கேட்டார் புன்னேயா.

''டேய் சின்னவனே! நம்ம வீட்டுக்கு முன்ஞடி அவங்க வீட்லே கல்யாணம் முடிஞ்சிட்டா ஊர்லே நம்ம மானம் போவாது?'' என்ருர் சுப்பையா.

''அதுக்குண்ணு எனக்கு விருப்பம் இல்லேன்ஞலும் கல்யாணம் பண்ணி யாகணுமா?'' என்ருன் ராஜு.

''ஏண்டா, கல்யாணம் பண்ணிக்காம சன்யாசம் வாங்கிக்கப் போறியா?'' என்ருள் சேஷம்மா.

''அப்படி யாரு சொன்னது? எனக்கு விருப்பம் வர்றப்போ பண்ணிக்கிறேன்.''

''அவ்வளதாஞ! நம்ம குடும்ப கௌரவம், மானம் இதுலே எல்லாம் உனக்கு ஒண்ணும் அக்கறை இல்லியா?'' என்ருர் புன்னேயா.

''டேய், இந்த அசட்டுப் பிடிவாதத்தை யெல்லாம் மூட்டை கட்டி வெச்சிட்டு முடிவாச் சொல்லிடு. வரதட்சணே வேண்டாம். தங்கம் வேண்டாம். உனக்கு விருப்பமான பொண்ணு யாரா இருந்தாலும் சரி, சொல்லிடு. அந்தக் கல்யாணத்துக்கு முன்ஞலே உன் கல்யாணம் நடந்தாகணும், கட்டாயமா!'' என்ருர் சுப்பையா.

ராஜு ஒரு நிமிஷம் பேசவில்லை. பொழுது மறைந்துகொண்டிருந்தது. கூடத்தில் மங்கலான வெளிச்சம் கொஞ்சம் கொஞ்சமாக மெலிந்து கொண்டிருந்தது. மூலைகளில் இருட்டு அதற்குள்ளாகவே கவ்விக்கொண்டிருந்தது. ராஜுவின் மனத்தில் தீர்க்க முடியாத குழப்பம் குடிகொண்டது. தொண்டையில் எங்கோ ஈரம் உலர்ந்து கொண்டிருந்தது. வீட்டின் மேல், ஊரின் மேல், தன் குடும்பத்தார் மேல், எதிராளிகள் மேல் என்று எல்லார் மேலும் அவனுக்கு எரிச்சலாக இருந்தது. அந்தப் பக்கம் தவிடு பிசைவதை மறந்துவிட்டு, இந்தச் சர்ச்சைகளை எல்லாம் கேட்டுக்கொண்டிருந்தாள் மல்லி. ராஜுவுக்கு அந்த மங்கலான வெளிச்சத்தில் தென்பட்டாள் அவள். படைக்கப்பட்ட எல்லாரிலும் அவள் ஒருத்தியே தனக்கு மிகவும் நெருக்கமானவள் என்று தோன்றியது ராஜுவுக்கு. திடுதிப்பென்று சொன்னான் :

''அவங்க வீட்டுக் கல்யாணத்துக்கு முன்னாலே என் கல்யாணம் முடிஞ்சிடணும் உங்களுக்கு, அவ்வளவுதானே? பொண்ணுக்காக எங்கெங்கெயோ தேடறது எதுக்கு? முறைப் பொண்ணு எல்லா லட்சணத்தோடெ வீட்டிலியே இருக்கறா இல்லே? மல்லி...!''

''மல்லியா?'' என்றாள், தன் காதுகளைத் தானே நம்ப முடியாததுபோல் சுந்து.

எல்லாரும் வாயைப் பிளந்துகொண்டு பார்த்தார்கள் ராஜுவை. கங்கப்பாவுக்கு ஒரு விநாடி மூச்சு நின்றுவிட்டது. அது ஆனந்தத்தினாலா, ஆச்சரியத்தினாலா என்று அவனுக்கே தெரியாது.

''உனக்கு ஏதாவது அறிவு இருக்குதாடா?'' என்றார் புன்னையா.

''ஏன் உங்களுக்கு வேண்டியது என் கல்யாணந்தானே'' என்றான் ராஜு. உள்ளத்து உணர்ச்சிகளால் உந்தப்படாமல் வார்த்தை அளவில் வெளியே வந்தது மல்லியின் பெயர். அவன் வாயிலிருந்து வந்துவிட்ட பிறகு அதுவே எல்லா விதத்திலும் சரியானதென்று அவன் மனம் சமாதானம் சொல்லிக் கொண்டது. ராஜுவின் வார்த்தைகளைச் சுப்பையா சீரணித்துக் கொண்டார், கொஞ்ச நேரத்தில்.

''அவன் சொன்னதுலே என்ன தப்பு? மல்லிக்கு என்ன குறைச்சல்?'' என்றார்.

திடீரென்று தவிட்டுத் தட்டு நினைவு வந்தது மல்லிக்கு. அதை எடுத்துக்கொண்டு கண்மண் தெரியாமல் ஓடினாள் மாட்டுக் கொட்டகையை நோக்கி. பசியோடு கத்தியது ஜோடி மாடு. புண்ணாக்குக்காகக் கயிற்றை இழுத்தது காராம்பசு. மல்லி அந்த ஊமை ஜீவன்களிடம் ஊமை பாஷையில் தன் இதயத்திலிருந்த

வேதனையைச் சொல்லிக் கொண்டாள். ராஜு அத்தானின் முடிவு தனக்கு இஷ்டமானதா இல்லையா என்பது அவளுக்குத் தெளிவாகவில்லை. இதயத்தைக் கும்மிருட்டு கவர்ந்து கொண்டது. தனிமை, சுவர்க்கோழி போல ஆரவாரம் செய்தது. சொல்லிக் கொள்வதற்கு யாரும் இல்லை அவளுக்கு. ராஜு அத்தானோடு வாதிப்பதற்கு இயலாத விஷயம். இந்தக் கல்யாணம் நடந்தால் ராஜு அத்தான் தனக்கு எவ்வளவோ நெருக்கமாகிவிடுவார்! ஆனால் நினைக்கமுடியாத அளவு தூரமாகியும்விடுவார். இப்போதே அப்படி ஆகிவிட்டார். கல்யாணம் நடந்தே தீருமென்ற ஆசை-பயம், நடக்கக் கூடாதென்ற தீர்மானம் - அசிரத்தை ஆகிய இந்த இரண்டுக்கும் நடுவில் மல்லியின் மனம் ஊசலாடியது. சுந்து வந்து கூப்பிடும்போது இரவு எவ்வளவு நேரம் ஆயிற்றோ அவளுக்குத் தெரியாது.

பஞ்சாயத்துத் தேர்தலுக்கு இரண்டு நாட்கள் இருந்தன. தேர்தல் சுரம் ஊரைக் கவ்விக் கொண்டது. காரில் கலெக்டர் வந்திறங்கினார். ஊர்ச் சூழ்நிலை அவருக்குக் கவலையைத் தந்தது. தனிப்பட யாரையும் தம்மிடம் வரச்சொல்லிச் சொன்னாலும், யார் வீட்டுக்குத் தாம் போனாலும் அடுத்தவருக்குக் கோபம் வரும். மக்களும், மேல் அதிகாரிகளுங்கூடப் பாரபட்சம் காட்டுவதாக நினைப்பார்கள். ஆனால் இரண்டு கட்சிக்காரர்களையும் எச்சரிப்பது தம் கடமை. தேர்தலில் கலாட்டா, அடிதடி நடந்தால், தமக்கும் போலீஸ்காரர்களுக்குமே கெட்ட பெயர் ஏற்படும். அதனால் பஞ்சாயத்தைக் கூட்டினார் கலெக்டர். அந்தக் கூட்டத்துக்கு, உறுப்பினர்கள் அல்லாத வேறு சில பிரமுகர்களையும், இரண்டு கட்சிக்காரர்களையும் வரவழைத்தார். எல்லாரையும் பார்த்து வேண்டுகோள் உருவத்தில் எச்சரிக்கை செய்தார்.

''அரசியல், பொருளாதார அதிகாரங்களை விரிவுப்படுத்தி, கிராம மக்களுக்கும் பகிர்ந்து கொடுப்பதற்குப் பஞ்சாயத்து ஆட்சியை அரசாங்கத்தினர் தொடங்கினார்கள். உண்மையான மக்களாட்சி நாட்டில் நிலைக்கச் செய்வதற்கு, பஞ்சாயத்துகளை வலுப்படுத்தி, செம்மையாகப் பணியாற்றுமாறு செய்யவேண்டுமென்பது அரசாங்கத்தின் ஆசை. ஆனால் அந்த ஆசையைச் செயல் முறையில் நிறைவேற்றும் பொறுப்பு கிராம மக்களுடையது. செல்

வாக்குள்ள குடும்பங்களிடையே பகைகள் தோன்றி வளருமானல் அரசாங்கத்தின் ஆசைக்கும், கிராம முன்னேற்றத்துக்கும் அது மரண அடி போல ஆகும். தேர்தலை அமைதியாக நடத்த வேண்டிய பொறுப்பு மக்கள் அனைவரையும் சார்ந்தது. ஆனல் குழப்பம் தலைகாட்டும் நிலை உருவாகுமானல், தாம் கடும் நடவடிக்கைகள் எடுக்க வேண்டி வரும்.''

ராமையாவுக்கும் சுப்பையாவுக்குங்கூட இந்த எச்சரிக்கை ஆத்திரத்தைத் தூண்டியது. 'இவன் யாரு கலெக்டர் பய, வாத்தியார், பையன்களைப் பிரம்பை வைத்துக் கொண்டு மிரட்டுவது போல, தங்களைப் போன்ற பெரியவர்களை எச்சரிப்பதற்கு? இதுவரையில் வந்த கலெக்டர் யாரும் இப்படிப் பேசியது கிடையாது. அநுபவம் இல்லாத இளம் அதிகாரிகள் வந்து பெரிய பெரிய நியாயங்களைச் சொல்லுவதா, தங்களுக்கு இதெல்லாம் தெரியாதது மாதிரி? ஊர்ப் பெரியவர்கள் இருவருக்கும் ஆத்திரத்தை உண்டாக்கியது.

''எங்களுக்கு ஒண்ணும் நீங்க சொல்லவேணும். உங்க கடமை என்னவோ நீங்க செய்யுங்க!'' என்று சொல்லி விட்டார் ராமையா. இதைக் கேட்டவுடனே கலெக்டர் நெற்றியில் சுருக்கங்கள் விழுந்தன. என்ன முடிவு செய்வதென்று அவருக்குக் குழப்பம் அதிகமாகி விட்டது.

''நான் அதிகாரியாகப் பேசல்லே. ஊர்ப் பெரியவங்க நீங்க ரெண்டு பேரும் தேர்தல் அமைதியா நடக்கும்னு வாக்குக் கொடுத்திங்கன்ன நடத்தறேன்'' என்ருர்.

''கொடுக்கலேன்ன?'' என்ருர் ராமையா.

''தேர்தலை ஒத்தி வெச்சித்தான் ஆகணும்.''

''உங்க இஷ்டமா ஒத்தி வெக்கறது?'' என்று கேட்டார் சுப்பையா.

''முன்சீப் அவங்க கையிலே இருக்குதில்லியா, பஞ்சாயத்து இப்போ? தேர்தல் நடக்கலேன்ன அவர் கையிலேயே இருக்கும்னு கலெக்டரும் அவரும் கலந்து இந்த முடிவு பண்ணிக்கிட்டாங்க, கலாட்டா சாக்கைச் சொல்லி ஒத்திப் போடணும்னு'' என்ருர் புன்னையா.

''கலெக்டருக்கு நாங்க லஞ்சம் கொடுத்தோம்னு சொல்றியா?'' என்று கத்தினன் ரங்கன்.

''என்னமோ, அது உங்களுக்கும் அவருக்குந்தான் தெரியணும்'' என்ருர் சுப்பையா.

''என்ன ஆனலும் சரி, தேர்தல் நடந்தே ஆகணும்'' என்ருர் ராமையா. ராஜு எழுந்து நின்ருன்.

''கலெக்டர் சார்! நீங்க சொன்னதுதான் சரி, தேர்தல் நடந்தாக் கலாட்டா தப்பாது. யார் ஜெயிச்சாலும் ஊருக்கு மாத்திரம் துளி அளவு நல்லது நடக்காது. தேர்தலை ஒத்திப் போட்டுடுங்க'' என்றான்.

''உனக்கு ஏதாவது அறிவிருக்குதாடா?'' என்றார் புன்னையா.

''எப்படியும் தோத்துப் போயிடுவோம்னு தெரிஞ்சே இந்த யோசனையைச் சொல்றான்'' என்றார் தர்மராஜு.

அதற்குப் பிறகு யார் என்ன சொன்னார்கள் என்பது தெரியவில்லை. எல்லாக் குரல்களும் ஒன்று சேர்ந்துவிட்டன. கலெக்டர் எழுந்து நின்றார். அவர் பக்கத்தில் எஸ். ஐ.யும் நாலு கான்ஸ்டேபிள்களும் நின்றார்கள், கலாட்டா கட்டுமீறி அடிதடியில் இறங்கினால் தடுப்பதற்கு. அந்தக் குழப்பத்தில் ராஜு கலெக்டர் நின்றிருந்த மேடைமேல் குதித்து ஏறினான்.

''நிறுத்துங்க'' என்று கத்தினான். கொஞ்சம் சத்தம் குறைந்தது.

''அவர் என்னவோ சொன்னார்னு வருத்தப்படறதுலே என்ன லாபம்? நாம ஊருக்குப் பெரியவங்கன்னு சொல்லிக்கிட்டா வெக்கக்கேடு. எலும்புத் துண்டுகளுக்காக நாய்கள் சண்டை போடற மாதிரி பஞ்சாயத்துத் தலைவர் பதவிக்காக மண்டைங்களை உடைச்சிக்கிற நிலைக்கு இறங்கி வந்துட்டோம். இந்த மக்களாட்சியைக் காட்டிலும் முள்ளுக் கட்டையை வெச்சுக்கிட்டு நமக்குப் புத்தி சொல்ற வலுவான அதிகாரி ஆள்றதே நல்லது. கலெக்டர் சார், தேர்தலை ஒத்தி வெச்சிடுங்க.''

''நீங்க எப்படியும் ஜெயிக்க மாட்டீங்க. அதனாலே அதிகாரத்தைக் கலெக்டர் கையிலே குடுத்து அவரை நல்லதனம் பண்ணிக்கறதுக்கா இந்த யோசனை?'' என்றார் வெங்கன்னா.

''கலெக்டர் சார்! மறுபடியும் தேர்தல் நடக்கற வரையிலெ அந்த ராமையா பண்ணையாரையே வெச்சி வையுங்க, பிரெசிடென்டா'' என்று சொல்லிவிட்டு ராஜு கூட்டத்திலிருந்து போய்விட்டான். ராஜுவின் தோரணை இரண்டு பக்கத்தவருக்கும் ஆச்சரியத்தைத் தந்தது. தேர்தலுக்காக இருவரும் எவ்வளவோ பணம் செலவு செய்தனர். முக்கியமாகச் சுப்பையாவைச் சார்ந்தவர்கள் செலவு செய்ததெல்லாம் வீணாகிப் போய்விடும், தேர்தலை ஒத்தி வைத்தால். ராஜு இப்படி ஏன் சொன்னானோ, ராமையாவுக்குப் புரியவில்லை. தம் மேல் உள்ள அன்பினால் சொல்லவில்லை என்பது தெளிவு. வெங்கன்னாவும் தர்மராஜுவும் இரண்டு மாறுபட்ட விளக்கங்களைக் கொடுத்தனர்.

''எல்லார் முன்னாலும் அப்படிச் சொன்னானே தவிர, தேர்தலை ஒத்தி வெச்சப்பறம், கலெக்டரைக் கைக்குள்ளே போட்டுக்கிட்டு, பஞ்சாயத்தை ரத்துப் பண்ணிட்டு அவர் பேரைச் சொல்லி ஆட்டம் போடலாம்னு எண்ணம்'' என்றார் வெங்கன்னா.

''கலெக்டர் அவ்வளவு சுலபமா அவர் வலையிலே விழற ஆளு இல்லே. அவன் திட்டம் என்னான்னா, இப்போ தேர்தல் நடந்தா தன் கட்சி தோக்கறது நிச்சயம். எப்படியானாலும் நாமதான் ஜெயிக்கப் போறோம். அதனாலெ அத்தான் ஆட்சியைக் கொஞ்ச காலம் நடக்கவிட்டு, பஞ்சாயத்து வேலை நடக்காதபடி ஒவ்வொரு இடத்திலேயும் குறுக்கே நின்னு, அவர் செல்வாக்கை உடைச்சிட்டு, ஜனங்களைத் தன் பக்கத்துக்கு இழுத்துண்டு, அப்போ தேர்தலை நடத்தணும்னு. அப்பாடா, எங்க நியோகிங்க கெட்டாங்க, போ, அவன் முன்னாடி'' என்றார் தர்மராஜு.

ராமையாவுக்கு இரண்டு விளக்கங்களுமே பிடிக்கவில்லை. அவை உண்மையல்ல என்பது அவருக்குத் தெரியும். ராஜு சொன்ன வார்த்தைகள் உண்மையென்பதும் அவருக்குத் தெரியும். ஆனால் அவன் ஊருக்குப் பெரியவர்கள் எல்லாரையும்விட மேல் நிலைக்குப் போய் எங்கேயோ மேலேயிருந்து இறங்கிய கலெக்டர் மாதிரி பேசியது ராமையாவுக்கு மிகவும் எரிச்சலாக இருந்தது. ஊரில் ஒருவன்; இந்தக் குழப்பங்களில் அவனுக்கும் பெரிய பங்குண்டு. சட்டென்று ஊர் முழுவதையும் கண்டிக்கும் பெரிய மனிதனைப் போல, தன் ஆட்களையும் எதிராளிகளையும் சேர்த்து விளாசியதை ராமையாவால் சகிக்க முடியவில்லை.

இந்தச் சகிக்க முடியாமைக்கும் வெறுப்புக்கும் அடியில் எங்கோ ராஜுவின் மேல், அவருக்கு விருப்பம் இல்லாமலே ஒரு மரியாதை, ராமையாவின் மனத்தில் தலையெடுத்தது. எவ்வளவு முயன்றாலும் அதை அடக்க முடியாமல், எங்கே என்று யோசிக்காமலே பாணந்தடியைக் கையில் எடுத்துக்கொண்டு புறப்பட்டார்.

மல்லி கோவில் பின்னால் பொன்னரளிச் செடிகள் இடையில் உட்கார்ந்திருந்தாள், பென்சிலும் காகிதமும் வைத்துக்கொண்டு. அத்தானுக்குக் கடிதம் எழுதவேண்டும். என்ன எழுத வேண்டும் என்று ஒன்றும் தோன்றவில்லை. இருந்தாலும் கட்டாயம்

எழுதியாக வேண்டும். எழுதவில்லை என்றால் சோறு இறங்காது; தூக்கம் பிடிக்காது. பொன்னரளிப்பூ புதிதாக, மென்மையாக உதிர்ந்தது அவள் மடியில். பொன்னரளிப் பூவின் தேன் என்றால் மல்லிக்கு மிகவும் பிடிக்கும். தண்ணீர் மாதிரி தேன். இனித்தும் இனிக்காத இனிப்பு. எத்தனைப் பொன்னரளிப் பூக்களின் தேனைக் குடித்திருக்கிறாளோ மல்லி, புத்தி தெரிந்த நாளிலிருந்து! பூவின் பின் காம்பை வாயில் வைத்துக் கொண்டாள் பழக்கத்தின் காரணமாக. சுவையாகப் பட்டது நாக்குக்கு. பொன்னரளிப் பூவின் தேனை ஆசை தீர உறிஞ்சினாள். கண்ணை மூடிக் கொண்டாள். குளிர்ச்சியாக மெல்லிய தேன் வாய்க்கால் நாக்கின் மேல் சரிந்தது. நாக்கின் மேல் இன்னொரு கிசுகிசுப்பு. அருவருப்பை உண்டாக்கும் கிசுகிசுப்பு. ஏதோ ஒன்று அசைந்தது நாக்கின் மேல். மல்லி துப்பிவிட்டாள் தேனை. புல்லின் மேல் விழுந்த எச்சலில் பளபளவென்று கறுப்பான மின்னல். நகரும் மின்னல். சின்ன பூச்சி அது. பூவின் காம்பில் தேனுக்காக நுழைந் திருந்தது. அதற்கு மேல் பொன்னரளிப் பூவின் தேனை மனதார உறிஞ்சவில்லை மல்லி. தேனுக்காக நாக்கு ஆசைப்படும் போதெல் லாம் அந்தப் பூச்சி நினைவு வரும் மல்லிக்கு.

'அத்தானுக்கு, பொன்னரளிப் பூவின் தேன் என்றால் எனக்கு எவ்வளவோ ஆசை. ஆனால் அதில் பூச்சி இருக்கும்.'

இதை எழுதிய பிறகு அவளுடைய கொதிப்பு கொஞ்சம் குறைந்தது. இந்தப் பெரிய சத்தியத்தை அத்தானுக்கு ஏன் சொல்லக்கூடாது? சொல்லணும், சொல்லியே ஆகணும். சொல்வதற்கு மல்லிக்கு வார்த்தைகள் வரா. மனத்தின் கொதிப்பை வார்த்தைகளில் கொட்டிவிட அவளால் முடியாது. பொன்னரளிப் பூக்களின் பக்கம் பார்த்தாள், மல்லி. அவற்றில் தேன் இருக்கும். ஒவ்வொரு பூவிலும் தேன் இருக்கும். அதில் பூச்சிகளும் உண்டு. ஆனால் கண்ணுக்குத் தெரியாது, அவ்வளவு தான்.

"மல்லீ!" என்ற அழைப்பைக் கேட்டு அதிர்ச்சியடைந்தாள் மல்லி. திருடிவிட்டாற்போல் படபடப்போடு அத்தான் கடி தத்தை ஜாக்கெட்டுக்குள் செருகிக்கொண்டாள். லட்சுமி கோவில் திருப்பத்தில் நின்று பார்த்துக் கொண்டிருந்தாள். புறாப்போல எழுந்து ஓட்டம் பிடித்தாள் மல்லி. லட்சுமியை அணைத்துக் கொண்டாள். தொண்டை வறண்டுவிட்டது. வார்த்தைகள் வெளிவரவில்லை. மல்லி பேசியபொழுது அந்தக் குரல் யாரு டையது போலவோ அவளுக்கே கேட்டது.

"உனக்கு வேறெ இடம் பாத்தாங்களாமே!''

லட்சுமி தலையாட்டினாள்.

''அத்தான் என்னைப் பண்ணிக்கிறாராம்'' என்றாள் மல்லி.

''உன்னையா?'' என்றாள் லட்சுமி.

அதற்கு மேல் நிற்க முடியவில்லை மல்லியால். கண்ணை மூடிக் கொண்டு ஓட்டம் பிடித்தாள், பழக்கத்தினால் கைகளை விரித்துக் கொண்டு சிறகை விரித்த புறாப்போல. கோவிலுக்கு முன் மண்டபத்தில் உட்கார்ந்திருந்த ராமையா இரண்டு பேரையும் பார்த்தார். அவர்கள் பேசியதையும் கேட்டார். லட்சுமி பின்னால் திரும்பியதுமே அப்பா தென்பட்டார். ஒரு விநாடி நின்றாள். பெண் யாரைச் சந்திக்கப் போகிறாள் என்பதைப் பார்ப்பதற்காகப் பின்னாலேயே வந்தாரா? எந்தத் தயக்கமும் இல்லாமல் தலையெடுத்து அவரை உற்றுப் பார்த்தாள். பார்த்துக்கொண்டே போய்விட்டாள். அந்தப் பார்வையில் ராமையாவின் அந்தராத்மா அல்லித் தண்டு போல் உலர்ந்து போய் விட்டது. வயிறெல்லாம் வெறிச்சோடி விட்டது. தம் மகளுக்கும் தமக்குமிடையே ஒரு பெரிய இடைவெளி ஏற்பட்டு விட்டது போல் தோன்றியது. ஒரு காலத்தில் அந்தக் கோவிலைப் பார்த்துக் கொண்டிருந்தால் வயிறு நிறைந்துவிடும். எவ்வளவு நிம்மதியாக இருக்கும் ஊர், அந்தக் காலத்தில்! கோவிலில் உட்கார்ந்திருந்தால் மனசு எவ்வளவு குளிர்ச்சியாக இருக்கும்! எல்லாவற்றையும் மறந்துவிட்டுக் கோவிலைப் பார்த்துக் கொண்டிருந்தால் இப்போதும் குளிர்ச்சியாகவே இருக்கும் ஒரு விநாடி. அந்தக் குளிர்ச்சியை அநுபவிக்கவே வந்தார் ராமையா. மகள் அங்கே தினம் வருகிறாள் என்று அவருக்குத் தெரியும். இருந்தாலும் அவளைப் பின் தொடர்வது அவருடைய எண்ணம் அல்லவே அல்ல. இதை யெல்லாம் எப்படி மகளிடம் மனம் திறந்து சொல்வது? தம்மால் சொல்லவும் முடியாது. அவளுக்குப் புரியவும் புரியாது. பெருமூச்சு விட்டார் ராமையா. எழுந்திருக்கும்போது கணுச்சாரி அம்மனின் பிரசாதம் கொண்டுவந்து கொடுத்தார். ராமையா பயபக்தியோடு வாங்கிக் கொண்டார். தம் மகள் விஷயத்தைக் கணுச்சாரியிடம் சொல்லவேண்டும் என்று தோன்றியது. சொல்ல முடியாமல் வீட்டுக்குப் புறப் பட்டார் அவர்.

பூத்துக் குலுங்கியது மாமரம். பட்டாணிப் பருப்பளவு பிஞ்சுகள், அங்கங்கே மஞ்சள் சாம்பல் நிறப் பூக்கொத்துக் களிடையே காட்சியளித்தன. பூக்களிலும் கிளைகளிலும் சிவப்

பெறும்புகளின் புற்று. ராமி கோடாலியைக் கொண்டு அடி மரத்தை வெட்டிக் கொண்டிருந்தாள், குறும்பாகச் சிரித்துக் கொண்டே. கங்கப்பாவின் வயிறெல்லாம் வெறிச்சோடிவிட்ட தால் பேச்சு வெளியே வரவில்லை. 'ராமீ, ராமீ' என்றது அவன் மனம். அந்த வார்த்தை உள்ளெல்லாம் எதிரொலித்தது. ஆனால் வெளியே வரவில்லை. மோவாய்க்குக் கீழே பாணத்தடியை முட்டுக் கொடுத்து நின்றபடி கண்களாலேயே கெஞ்சிக் கொண் டிருந்தான் ராமியை. கடைசியில் உள்ளே இருந்த ஆத்திரம் கரை புரண்டு வெளியேறும் சமயத்தில் பின்னாலிருந்து முதுகைத் தட்டினான் ராஜு. ''அத்தான்'' என்று சொல்வதற்குப் பதிலாக ''ராமீ'' என்றான் ராஜுவைப் பார்த்துக்கொண்டே. ராஜுவால் சிரிப்பை அடக்க முடியவில்லை. ராமியும் கொல்லெனச் சிரித் தாள். ராஜு இரண்டு பேரையும் பார்த்துவிட்டு அங்கிருந்து நகர்ந்தான்.

ஏனோ இன்று அவனுள்ளே உற்சாகம் துரித நடை போட்டது. இத்தகைய காட்சி அம்மன் திருநாளுக்குப் பிறகு ஒரு நாள்கூட அவன் கண்ணில் படவில்லை. ஏரிகரையில் நெட்டிப் பூக்கள் உதிர்ந்து கொண்டிருந்தன. தொட்டால் பறந்து கொண் டிருந்தன. முற்றினாற்போல நெட்டிகூடக் கொஞ்சம் சிவப்பேறி யிருந்தது. காலால் அவற்றைக் கோபம் தீரும்வரை உதைத்துக் கொண்டே ஏரிகரைத் திருப்பத்தில் திரும்பினான் ராஜு. நின்று விட்டான். தண்ணீர் ஓரமாக மல்லி உட்கார்ந்திருந்தாள். அவளுடைய முதுகு ஏதோ ஆவேசக் கொந்தளிப்பில் அசைந்து கொண்டிருந்தது. தன்னைப் பார்த்துவிட்டாள் என்று நினைத் தான் ராஜு. தன்னைப் பார்த்ததால் அவளுக்கு வெட்கமும், சந்தோஷமும் ஏற்படும் என்று எண்ணினான்.

அவளைக் கல்யாணம் செய்து கொள்வதாகச் சொன்ன மறு விநாடியிலிருந்து இதுவரையில் மல்லி அவன் கண்ணில் படவில்லை. ஆசையோடு பின்னால் போனான். குனிந்து அவள் தோள்கள் மேல் கையை வைத்தான். அந்த எதிர்பாராத ஸ்பரிசத்தினால் திடுக்கிட்டு விட்டாள் மல்லி. துள்ளி எழுந்து திரும்பிப் பார்த் தாள். இருவரும் ஸ்தம்பித்து நின்றுவிட்டார்கள். அவளுடைய வாழ்க்கையில் அத்தான் இப்படிப் பின்னால் வந்து மெதுவாகத் தொட்டது இதுவே முதல் தடவை. அத்தான் அப்படிச் செய்வாரென்றோ, செய்ய முடியுமென்றோ அவள் ஒரு நாளும் நினைத்ததில்லை. அந்த ஸ்பரிசம் அவளுக்கு ஆச்சரியத்தையும் பிரமையையும் உண்டாக்கியது. மல்லியின் சிரிக்கும் முகம்

தென்படும் என்று ராஜு எண்ணினன். மல்லியின் கன்னங்களில் கண்ணீர் வழிந்தது. ஆயிரம் நிகில் மேகங்கள் போல் சூழ்ந்து கொண்டன. அவள் கண்களிலும் முகத்திலும் நெற்றியிலும் சுருக்கங்கள் விழுந்தன. மல்லியை எப்போதும் அப்படிப் பார்த்த தில்லை ராஜு.

''மல்லீ! என்ன? என்ன ஆயிட்டுது?'' என்று கேட்டான். திக்பிரமையிலிருந்து தேறினள். முகத்தைத் தாழ்த்தினள்.

''அத்தான்! உன் கால்லெ விழுந்து கும்புடறேன், என் கழுத்திலெ மட்டும் தாலி கட்டாதே'' என்று சொல்லி விட்டாள். அதற்குமேல் தொண்டை அடைத்துக் கொண்டது. கண்ணீரால் கண் குருடாகிவிட்டது. ஏரிகரையில் கையை நீட்டிக்கொண்டு பறந்தாள், கண்மண் தெரியாமல். சிறகு ஒடிந்த புருப்போலப் பழக்கமான பாதையிலேயே தடுமாறிச் சமாளித்துக் கொண்டு தோட்டத்தின் அடர்ந்த மரங்களிடையே மாயமாகிவிட்டாள். ராஜுவுக்கு ஒன்றும் புரியவில்லை. தான் பண்ணிக்கொள்கிறேன் என்றல் எவ்வளவோ சந்தோஷப்படவேண்டிய மல்லி, ஏன் இப்படிக் கண்ணீர் விடவேண்டும்? ஏதோ குடி முழுகிவிட்டது போல அப்படி ஏன் ஓட்டம் பிடிக்க வேண்டும்? பதில் தெரியாமல் பொன்னரளிச் செடியில் சாய்ந்தான் ராஜு.

மல்லி கண்ணை மூடிக்கொண்டு வந்து ராமியின் கைகளில் விழுந்தாள்.

''என்ன மல்லம்மா? என்னச்சு?'' என்றுள் ராமி.

''தங்கச்சி'' என்று மட்டும் சொல்ல முடிந்தது கங்கப்பாவால். மல்லி அதிர்ச்சியிலிருந்து சற்று மீண்டாள்.

''அண்ணு! எனக்கு இந்தக் கல்யாணம் வேண்டாம்'' என்றுள்.

''உனக்கு ஏதாவது மூளை இருக்குதா?'' என்றுன் கங்கப்பா.

''மூளை இருக்குதா சின்னப் பண்ணையாருக்கு? மனசெல்லாம் லச்சுமி அம்மா மேலே! கல்யாணம் என்னமோ மல்லம்மாவோ டவா? கல்யாணமான மறுநாளிருந்து தானும் சுகப்படமாட்டார், மல்லம்மாவையும் சுகப்பட வுடமாட்டார். ஆறு மூணுலும் லச்சிமி அம்மாவெ மறந்துட முடியுமா அவராலே?'' என்றுள் ராமி, மல்லியை அணைத்துக்கொண்டே. கங்கப்பா வாயைத் திறந்து கொண்டு பித்துப் பிடித்தவன் போல் பார்த்தான்.

''எதிர்வீட்டு மேலே உள்ள பகையை மல்லம்மா மூலமாத் தீத்துக்கறுர், அவங்களெ ஒண்ணும் பண்ண முடியாமெ'' என்று தன் விளக்கத்தை முடித்தாள் ராமி. கங்கப்பாவுக்கு ஒரு பெரிய ரகசியம் எதிர்பாராமல் தெரிந்துவிட்டாற்போல் திக்பிரமை உண்

டாயிற்று. பெரிய அடி எடுத்துவைத்துப் புறப்பட்டான் கங்கப்பா. நடக்கும் களைப்புக்கூட அவனுக்கு ஆவேசத்தில் தெரியவில்லை. ராமியும், மல்லியும் பதற்றத்துடன் அவன் பின்னால் புறப்பட்டனர்.

''சின்னப் பண்ணையாரே! சின்னப் பண்ணையாரே!'' என்று கூப்பிட்டாள் ராமி. மல்லி மட்டும் ஒன்றும் சொல்லவில்லை. பதற்றத்தோடு அண்ணாவின் பின்னால் ஓடினாள். ஆனாலும் கங்கப்பாவின் நடைக்கு ஈடுகட்ட இருவராலும் முடியவில்லை.

ஏதோ நினைவாகச் செடியில் சாய்ந்திருந்த ராஜுவுக்கு, கங்கப்பாவின் குரல் நெற்றியின்மேல் அடிப்பதுபோல் பட்டது. நடுங்கும் உதடுகளோடு பொங்கும் ஆவேசத்தை வார்த்தைகளாக வெடித்தான் கங்கப்பா.

''எங்க தங்கச்சி, வெட்டிக்குக் கிடைச்சாளா உங்க பெரிய வீட்டுத் தகராறுகளைத் தீத்துக்கறதுக்கு? இஷ்டமில்லாத கல்யாணத்தைப் பண்ணிக்கினு அவ வாழ்க்கையைப் பாழாக்கப் பாக்கறியா? தங்கச்சி கழுத்திலே மட்டும் தாலி கட்டினா அதுக்கு ...'' மேலே முடிக்க முடியாமல் நிறுத்திவிட்டான் கங்கப்பா. அவன் கையில் கைத்தடி பயங்கரமாக மேலெழுந்தது.

''அண்ணா'' என்று கத்திக்கொண்டே அவன் கையைப் பிடித்துக் கொண்டாள் ராமி. அவன் கையிலிருந்த தடியைப் பிடுங்கி விட்டாள்.

''கங்கப்பா!'' என்றான் ராஜு ஆச்சரியத்தோடு. கங்கப்பாவின் ஆவேசமெல்லாம் துக்கமாக மாறிவிட்டது. அவ்வளவு பருமனான ஆள் கைக்குழந்தை மாதிரி அழுவதைப் பார்த்து ராஜுவின் மனம் திக்கென்றது.

''ஆம்பளெயா இருந்தா ராமையா மாமா வீட்டுக்குப் போய்க் கேளு, தாம்பூலம் துணி எல்லாம் மாத்திக்கிட்டப்புறம், பொண்ணுக்கு இன்னொரு சம்பந்தம் எப்படிப் பண்ணிக்கிறேய்யான்னு? அந்தப் பக்கத்துச் சூரியன் இந்தப் பக்கம் உதிச்சாலும் சரி, லச்சுமி அம்மாவெ எனக்குத்தான் கொடுக்கனும்னு சொல்லு, தைரியம் இருந்தா.''

அழுகை பெருமூச்சுகளுக் கிடையிலிருந்து வந்த இந்த வார்த்தைகள் கங்கப்பாவின் வாயிலிருந்து வந்ததாகத் தோன்றவில்லை ராஜுவுக்கு. அந்த விநாடியில் கங்கப்பா, கங்கப்பாவாகத் தோன்றவில்லை. தான் அறிந்த கங்கப்பா அல்ல இவன்.

''இவ்வளவு நல்ல யோசனையை நம்ம வீட்லே யாரும் சொல்லலேடா கங்கப்பா'' என்றான் ராஜு. உடனே வேகமாகப் புறப்பட்டான்.

''பண்ணையாரே எங்கே போறீங்க?'' என்றாள் ராமி பதற்றத் தோடு.

''வேணும் அத்தான், அவங்க வீட்டுக்குப் போவாதே'' என்றாள் மல்லி.

''ஒண்ணும் பயமில்லே. என் பின்னால் யாரும் வரவேணும். நம்ம வீட்டிலேயிருந்து யாரையும் கூட்டிக்கிட்டு வராதீங்க'' என்று சொல்லிக்கொண்டே விடுவிடுவென்று நடந்து போய்விட்டான் ராஜு.

வேலிக்கு அந்தப் பக்கம் ஓர் ஆசாமி இதையெல்லாம் கேட்டு விட்டு ஓட்டம் பிடிப்பதைப் பார்த்தாள் ராமி. தானும் வேகமாக ஓட்டம் பிடித்தாள். மல்லியும் கங்கப்பாவுங்கூட வேகமாகப் புறப் பட்டனர்.

சின்னத் தெரு வழியாக, பின்னால் திரும்பிப் பார்க்காமல் நடந்துகொண் டிருந்தான் ராஜு. இந்தப் பக்கமும் அந்தப் பக்கமும் இருந்த உயரமான ஆட்கள் வீடுகளிலிருந்து திண்ணை களுக்கு வந்தனர். வழியில் இண்டு பக்கமும் பானுத்தடிகளைக் கையில் தாங்கிக்கொண்டு ராமையாவின் ஆட்கள் காத்து நின்றார்கள். ராஜு யாரையும் பார்க்காமல் தன்னந் தனியாக நடந்து கொண்டிருந்தான். ராமையாவின் ஆட்களுக்குத் தடி களைத் தூக்க வேண்டுமா வேண்டாமா என்பது புரியவில்லை. தயாராக மட்டும் நின்றார்கள். சின்னத் தெருச் சாவடியின் படி யேறினான் ராஜு. ராமையாவின் ஆட்கள் படிக்கு முன்னால் தெருவில் குழுமிவிட்டனர். ராஜு வாயிற்படியை அடைந்தபோது உள்ளேயிருந்து ரங்கனும் வெங்கன்னவும் வந்தார்கள். வாயிற் படியில் குறுக்கே நின்றார்கள். தூரத்தில் பெரிய வீட்டுப் பால் கனிக்குச் சரேலென்று வந்தாள் லட்சுமி.

''மாமாவோடப் பேசணும்'' என்றான் ராஜு.

''உங்க மாமா இங்கே யாரும் இல்லே'' என்றான் ரங்கன். அவன் சொன்னதைக் கேட்காத மாதிரியே, பொங்கும் கோபத்தை அடக்கிக்கொண்டு, ராஜு வெங்கன்னவிடம் சொன்னான்.

''வெங்கன்ன! உங்க தங்கச்சிக்கு வேறே சம்பந்தம் பாக்கிறீங் கன்னு கேள்விப்பட்டேன். நாம எப்பவோ தாம்பூலம் மாத்திக் கிட்டோம். இது உங்களுக்கும் எங்களுக்கும் நல்லதில்லே.''

''டேய் பொட்டப் பயலே, உனக்கு எப்படிக் குடுப்போம்டா எங்க தங்கச்சியை?'' என்றான் ரங்கன். மறுபடியும் கோபத்தை அடக்கிக்கொண்டு ராஜூ வெங்கன்னாவிடம் சொன்னான்.

''நம்ம ரெண்டு வீடும் ஒண்ணு சேர்ந்தா முன்மாதிரி நாம நல்லா இருப்போம்; ஊரும் நல்லா இருக்கும். அந்த விஷயத்தைச் சொல்றதுக்குத்தான் வந்தேன்.''

''எங்களுக்கு ஒரு குறையும் இல்லே. ஊருக்கும் குறையில்லே. உங்களுக்கு ஏதாவது கஷ்டம் இருந்தாக்கா, நீங்க பாத்துக்க வேண்டியதுதான். எங்க வீட்டுக்கு வரவேண்டியதில்லே'' என்றார் வெங்கன்னா.

''லிங்க மடுவுலே போய் உறங்குங்கோ, கஷ்டமெல்லாம் கரையேறிப் போயிடும்'' என்றான் ரங்கன்.

''வெங்கன்னா! வேலே வெட்டி இல்லாமே, ஒருத்தர் வீட்லே விழுந்து தின்னுக்கிட்டிருக்கற இந்த மாதிரி பெருச்சாளிங்கதான் ஊரை இந்த நிலேக்குக் கொண்டு வந்தது'' என்றான் ராஜூ.

''என்னடா சொன்னே?'' என்று சொல்லிக்கொண்டே கைநீட்டி ராஜூவின் கன்னத்தில் ஓங்கி அடித்தான் ரங்கன். லட்சுமி பால்கனியின் முன்னால் குதிக்கப் போவதுபோல் துள்ளி விழுந்தாள். ராஜூ படியில் கீழே விழப் போய்ச் சமாளித்துக் கொண்டான். தெரு முனையில் பதாலு, சுங்கப்பா, மற்றும் சுப்பையாவின் ஆட்கள் யாவரும் தடிகளைத் தூக்கியபடி முன்னால அடியெடுத்து வைத்தனர். ராமையாவின் ஆட்களும் தடிகளைத் தூக்கிக் கொண்டு தயாரானார்கள்.

''நில்லுங்க'' என்று கத்தினான் ராஜூ. அங்கங்கே இருந்தவர்கள் அப்படி அப்படியே நின்றுவிட்டார்கள். மெதுவாக ரங்கனைத் திரும்பிப் பார்த்தான். ''சமாதானம் பேச வந்தேன். அதனாலே பிழைச்சிக்கிட்டே. இல்லேன்னா உன்னே இங்கேயே கொண்ணு புதைச்சிட்டிருப்பேன்'' என்றான். அப்போதுதான் பெரிய தெருச் சாவடியிலிருந்து வந்த ராமையா இதைக் கேட்டார்.

''வீட்டுக்கு வந்து பயமுறுத்திறியா?'' என்றார்.

''நீங்களாவது நியாயத்துக்குக் கட்டுப்படுவீங்கன்னு வந்தேன். ஆவட்டும். பயமுறுத்துவதற்கு வந்தேனா என்பதை உங்க பையன் கிட்டே கேட்டுக்கங்க'' என்று சொல்லிவிட்டு ராஜூ படியிறங்கத் தொடங்கினான். ராமையாவுக்கு நிலேமை புரிந்தது. போய்க் கொண்டிருந்த ராஜூவைக் கூப்பிட வேண்டுமென்று தோன்றியது. ஓர் அடி முன்னே எடுத்து வைத்தார்,

"அவன் கொழுப்பை அடக்குங்கடா" என்றான் ரங்கன். படிக்குக் கீழே ஆட்கள் தடிகளைத் தயாராகத் தூக்கிப் பிடித்தனர். பதாலுவும் கங்கப்பாவும் இரண்டடி முன்னால் எடுத்து வைத்தனர். ராஜு ஆத்திரத்தோடு பின்னால் திரும்பினான்.

"அவங்களைக் கிளப்பிவிடறியே, பாவம்! நீ இறங்கி வா. ரெண்டுலே ஒண்ணு பாத்துடுவோம்" என்றான் ராஜு. ரங்கன் கோபமாக முன்னால் குதிக்கப் போனான். ஆனால் ராமையா பிடித்துக் கொண்டார்.

"அப்படிப்பட்ட ஈனப்பூச்சிகளை வீட்லே சேத்தாக்கா உங்க வீட்டுக்கே மோசம்! என் பேச்சைக் கேட்டு ஊரை விட்டே அனுப்பிச்சிடுங்க. உங்களாலெ முடியலேன்னா நானே அனுப்பிச்சிடறேன்" என்றான் ராஜு. சொல்லிவிட்டு, பின்னால் திரும்பிப் பார்க்காமல் படி இறங்கினான். கீழே இருந்த ஆட்கள் என்ன செய்ய வேண்டும் என்று புரியாமல் வழி விட்டார்கள். ஏனோ தடிகளை ஓங்க முடியாமல் போய்விட்டார்கள். ராஜு விடுவிடுவென்று நடந்து போகலானான். கைக்கெட்டிய நல்ல சந்தர்ப்பத்தைக் கை நழுவ விட்டுவிட்டதாகப் பட்டது ராமையாவுக்கு. அந்த விநாடி ராஜு எல்லாரைக் காட்டிலும் உயரமாகப் பெரிய மலைபோல அவர் கண்களுக்குத் தென்பட்டான். பெருமூச்சு விட்டபடி பின்னால் திரும்பிப் பார்த்தபோது பால்கனியில் லட்சுமி தென்பட்டாள். அவளுடைய பார்வை பிச்சுவா மாதிரி அவர் இதயத்தில் குத்திவிட்டது. மேலும் சந்தேகம் கோபமாக மாறியது. ராஜுவின்மேல், ரங்கன் மேல், லட்சுமியின் மேல், எல்லார் மேலேயும் கோபம்.

"போங்க, என் கண் முன்னால் யாரும் நிக்காதீங்க. தூரமாப் போங்க" என்று கத்தினார். வெங்கன்னாவுக்கும் ரங்கனுக்கும் அந்தக் கோபத்துக்குக் காரணம் புரியவில்லை. ஆனால் அவர் தோரணை விந்தையாகப் பயமூட்டியது. இருவரும் நழுவிவிட்டனர். லட்சுமி மட்டும் ஆடாமல் அசையாமல் அப்படியே பால்கனியில் நின்றிருந்தாள். ராமையா வாயிலிருந்த சுருட்டைத் தரையில் வீசிவிட்டுச் சரசரவென்று பெரிய தெருச் சாவடிக்குள் சென்றுவிட்டார்.

"அத்தான் கொஞ்சம் தளர்ந்துண்டு வர்றார் வெங்கன்னா" என்றார் தர்மராஜு. மாலைத் தகராறுக்கப்பறம் தங்கள் கூட்டத்தைச் சின்னத் தெருச் சாவடியிலிருந்து மங்கம்மாவின் வீட்டுக்கு மாற்றிவிட்டார் தர்மராஜு. ராமையா தம் திட்டங்களை மனப்பூர்வமாக ஒப்புக்கொள்ள மாட்டார் என்றும், தாம் என்ன முடிவு செய்தாலும் வேண்டாம் என்று சொல்வார் என்றும் வெங்கன்னாவுக்கும்

ரங்கனுக்கும் சந்தேகம் வந்துவிட்டது. ராமையா ஒரேயடியாக மறுத்துவிட்ட பிறகு, அந்தக் காரியத்தை நிறைவேற்றுவது முடியாது. அவருக்குத் தெரியாமல் முடிவு செய்துகொண்டு, அவற்றை நடைமுறையில் கொண்டுவந்து விட்டால், அதன்பிறகு அவற்றை எப்படியும் ஆதரிக்காமல் ராமையாவால் இருக்க முடியாது. அதனால் தர்மராஜு, தமக்குச் சுதந்தரம் இருக்கு மென்று, காரியாலயத்தை மங்கம்மாவின் வீட்டுக்கு மாற்றி விட்டார். அதற்கு இன்னொரு முக்கியக் காரணமும் உண்டு.

லிங்கையா கொஞ்ச நாட்களாக அதிக நேரம் மங்கம்மா வீட்டில் கழிப்பதாக அவருக்குச் சந்தேகம் வந்தது. அம்மன் திரு நாளிலிருந்து இரவும் பகலும் தர்மராஜுவுக்குத் தலைக்குமேலே வேலை இருந்தது. இரவிலும் நிசியிலும் ராமையா தன்னை வரச் சொல்லி ஆள் அனுப்பி வந்தார். ஒவ்வோர் இரவும் தாம் மங்கம்மா வீட்டில் கழிப்பதாக ராமையா நினைக்கக்கூடாது. ராமையாவுக்கு இந்த விஷயம் தெரியாததல்ல. மாமிசம் தின் கிறேன் என்பதற்காக எலும்புகளைக் கழுத்தில் மாட்டிக் கொண்டு திரியவேண்டிய அவசியம் இல்லை அல்லவா? அத்துடன் மூளைக்குச் சரியான வேலை கிடைத்தால், தர்மராஜுவுக்கு மற்றச் சுகபோகங் களில் மனம் போகாது. ஆனால் லிங்கராஜு, பொழுது போன பிறகு வீட்டுக்கு வருவது, மங்கி கழுத்தில் ஒன்றிரண்டு புது நகைகள் முளைப்பது—இரண்டுக்கும் சம்பந்தம் இருக்குமென்ற சந்தேகம் தர்மராஜுவுக்கு ஏற்பட்டது.

பஞ்சாயத்துத் தேர்தலை ஒத்திப் போட்ட நாளிலிருந்து ராமையா அவருக்குச் சொல்லி அனுப்பவே இல்லை. ஊரில் தகராறுகள் குறைந்து கொண்டிருந்தன. காரசாரமான சூழ்நிலை என்னவோ அப்படியேதான் இருந்தது. ஆனால் பட்டணமும் கேசுகளும் டாக்டர் சர்டிபிகேட்களும் அரிதாகிக் கொண்டிருந்தன. மாலை நடந்த தகராறு ராமையா மூலமாக அமைதியாகப் போய் விட்டது. இல்லையென்றால் தலைக்கு மேலே தர்மராஜுவுக்கு வேலை வந்திருக்கும். இப்படி வீட்டு விவகாரங்களும் ஊர் விவகாரங்களும் அவர் கையிலிருந்து நழுவிப் போவதை அவரால் சகிக்க முடிய வில்லை. காரியாலயத்தை மங்கி வீட்டுக்கு மாற்றிவிட்டால் வெங் கன்னவும் ரங்கனும் தம் வார்த்தைக்குக் கட்டுப்படும் நிலையில் இருப்பார்கள். ராமையா அருகில் இருக்கிறார் என்ற தயக்கம் இருக்காது அவர்களுக்கு. செய்ய வேண்டுமென்று நினைத்த வேலை களைத் தைரியமாக நிறைவேற்றி விடலாம். முன்பின் பார்க்க

மாட்டார்கள். லிங்கையா, தாம் இருக்கும் வரையில் மங்கிக்குத் தூரமாக இருந்தே தீருவான்.

லிங்கையாவை நியாயமானவனாக மாற்றவேண்டும் என்பதல்ல, தர்மராஜுவின் தவிப்பு. தாம் கஷ்டப்பட்டுச் சம்பாதிப்பதை நிலைக்க வைக்கும் அறிவாற்றலையாவது அவனுக்குக் கற்றுக் கொடுக்கவேண்டும். லிங்கையாவுக்குத் தம் சாமர்த்தியம் எப்படியும் வராது. தாம் வழங்கும் ஆலோசனைகளையும், சொல்லும் அறிவுரைகளையும் தினம் கேட்டுக் கொண்டிருந்தால் கொஞ்சத்துக்குக் கொஞ்சமாவது வழிக்கு வருவான் என்பது தர்மராஜுவின் நம்பிக்கை.

பயில்வான்களைப் போன்ற நான்கு பறையர்களை வரவழைத்தார் தர்மராஜு. அவ்வளவு பகிரங்கமாக ரங்கனைப் பழித்ததற்கு ராஜுவுக்குச் சரியான பாடம் கற்றுத் தர வேண்டும். அது அன்றிரவு நிகழ்ச்சி நிரல்.

கிராமத்து வயல்களில் சம்பாப் பயிர் அறுவடைக்குத் தயாராக இருந்தது. ராஜு குடிசைக்கு வெளியே மேட்டில் உட்கார்ந்திருந்தான். இரவு. கரும்பட்டு போல அங்கங்கே மர இலைகள்மேல் மின்னிக்கொண்டிருந்தது. இடது பக்கம் கரைமேல் பனமரங்கள் 'ஞொய்' என்று சத்தம் போட்டுக் கொண்டிருந்தன. வானத்திலே வெளிச்சம் நீலமாக இருந்தது. சிறிய மேகத் துண்டுகள் அங்கங்கே தொங்கிக்கொண்டிருந்தன. அசைவில்லாத காற்றில், ராஜுவுக்கு உலகமெல்லாம் அமைதியாகத் தென்பட்டது. மனத்தில் கூடச் சுமை இறங்கிவிட்டது. பல நாட்களுக்குப் பிறகு அன்று மாலை லட்சுமியைப் பார்த்தான் ராமையா வீட்டுக்குப் போனது எவ்வளவு வீரமான செயல் என்றாலும், ஆபத்தாக இருக்கவில்லை. ரங்கன் கன்னத்தில் அடித்ததும், அவன் ஆத்திரப் படவில்லை. ராமையாவுக்குப் புரியாமல் போகாது. பிடிவாதத்தால் அந்த விநாடியில் என்ன சொன்னாலும், போகப் போக அவரும் யோசித்துப் பார்ப்பார். தான் மிகவும் பெருந்தன்மையோடு நடந்து கொண்டதாக உணர்வார். ஏதோ நல்லதுக்குத்தான் தனக்கு இந்த எண்ணம் வந்தது. பெரிய சாதனையைச் சாதித்து விட்டதாகத் திருப்தி யடைந்தான் ராஜு. பதாலு வயல் வரப்பின்

மேல் ரோந்து சுற்றி வந்தான். கல்யாண பம்பில் டிராக்டர் எரிந்த நாளிலிருந்து முறை போட்டுக் கொண்டு ரோந்து சுற்றி வந்தார்கள் சுப்பையாவின் ஆட்கள்.

''நீங்க வீட்டுக்குப் போங்கையா, இந்த ராத்திரி இனிமே ஒண்ணும் பரவாயில்லே'' என்றான் பதாலு.

''நீ குடிசைலே படுத்துக்கோ. தூக்கம் வர்றப்போ போறேன். ஆவட்டும்!'' என்றான் ராஜு. பதாலு குடிசைக்குள் போனான். ராஜு எழுந்து வயல் வரப்பு நெடுக நடந்தான். வீட்டுக்குப்போக எண்ணம் வரவில்லை. லிங்க மடுவின் கரைக்கு வந்தான். கரைமேல் உட்கார்ந்து சுருட்டு பற்றவைத்தான். ஆழத்தில் தணணீர்க் கரையில் வண்ணான் பாறைகள் ஈரமாகப் பளிச்சிட்டன. பெரிய மலைப்பாம்பு போல் பளபளப்போடு ஊர்ந்து கொண்டிருந்தது ஆறு. வானமும் நட்சத்திரங்களும் கொஞ்சம் அசைந்து கொண்டும், இருந்த இடத்திலேயே இருந்துகொண்டும் இருந்தன, அந்த நீரோட்டத்தில்.

வேலிக்கு அந்தப் பக்கம் நான்கைந்து உருவங்கள் பதுங்கி நடந்தன. வேலியைக் கொஞ்சம் விலக்கி இந்தப் பக்கம் வந்தன.

''குடிசையிலெ படுத்திருப்பான் போல இருக்குது'' என்றது ஒரு குரல்.

''நீங்க இங்கேயே இருங்க. அவனை நான் பாக்கறேன் ஒரு கை'' என்றான் ரங்கன்.

''நீ போக வேணும்யா'' என்றான் வெங்கடேசு.

''அந்தப் பொணம் தூங்கிக்கிட்டிருப்பான். என்னை என்ன பண்ணப் போறான்? என்னைப் புதைக்கறானும்'' என்று சொல்லிக் கொண்டே முன்னேறினான் ரங்கன். மற்ற மூன்று பேரும் தொடர்ந்தார்கள்.

''வேணும், நீங்க இங்கேயே இருங்க. சத்தம் கேட்டா முழிச்சுக்குவான். தேவையானா அப்போ வாங்க நீங்க'' என்றான் ரங்கன். மூவரும் நின்றுவிட்டனர்.

குடிசைக் கதவு, தயக்கத்தோடு திருட்டுத்தனமாகத் திறந்து கொள்வது பதாலுவுக்குச் சந்தேகத்தை உண்டாக்கியது. திறந்து கொண்டே கதவுக்குப் பின்னால் மங்கலான வெளிச்சத்துக்கும் குறுக்கே ஓர் உருவம் நிறைந்திருந்தது. உருவம் நகர்ந்து உள்ளே வந்தது. அவன் யாரென்று பதாலுவுக்கு அடையாளம் தெரியவில்லை. அசையாமல் அப்படியே படுத்திருந்தான் பதாலு, வந்த திருடனைப் பிடிப்பதற்காக. தான் அசைந்தால் திருடன் ஓடி விடு

வான். வந்த உருவம் மெதுவாக இருண்ட மூலையை நோக்கி நகர்ந்தது. பதாலு பார்த்துக் கொண்டிருந்தான். கடப்பாரை லேசாகச் சத்தமிட்டது. தடித்த இரும்பின் ஓசை லேசாகக் கேட்டது. தயாராகப் படுத்திருந்தான் பதாலு. திருடன் கடப்பாரையைக் கனமாக இறக்கிய நொடியில், சர்ரென்று பக்கத்தில் புரண்டு நகர்ந்துவிட்டான் பதாலு. கடப்பாரை அந்த வேகத்தில் மெழுகிய மண் தரையின் ஆழத்தில் புதைந்து விட்டது. திருடன் சமாளித்துக் கொள்வதற்குள் பதாலு தாக்கினான். திருடன் திடுக்கிட்டான்.

"நீயா!" என்றான் ரங்கன், பதாலுவை அடையாளம் கண்டு கொண்டு. பதாலுவும் அடையாளம் தெரிந்து கொண்டான் ரங்கனை.

''கொலை பண்றதுக்கு வந்தியா?'' என்றான் பதாலு. பயம், நடுக்கம், எதிரிகள் ராஜ்யத்தில் அகப்பட்டுக் கொண்டோமே என்ற பதைப்பு ஆகியவை ரங்கனுக்கு முரட்டுப் பலத்தைக் கொடுத்தன. 'இங்கே இருந்து ஓடவேண்டும்; வேலிக்கு அந்தப் பக்கம் போயாக வேண்டும். இப்போது கத்தினால் லாபம் இல்லை. வயலில் எவ்வளவு பேர் ராஜுவின் ஆட்கள் ரோந்து திரிகிறார்களோ? அவர்கள் எல்லாம் வந்து கையையும் காலையும் முறித்துக் கட்டிவிடுவார்கள். நடுத்தெருவில் நடத்திக் கூட்டிப் போவார்கள். அந்த அவமானத்தைத் தாங்கிக் கொள்வதைவிடச் செத்துப் போவது மேல்.' ரங்கன் பித்துப் பிடித்தவன் போல் அடிக்கலானான். அந்த வேகத்தில் பதாலு தடுமாறிப் போனான். ரங்கன் அப்படியே கதவை நோக்கிக் குதித்தான். தரையில் புதைந்திருந்த கடப்பாரை அவன் கால்களில் சிக்கிக் கொண்டது. அதே வேகத்தில் குடிசையின் இன்னொரு மூலையில் போய் விழுந்தான். லேசாக 'ஆ' என்ற சத்தம் மட்டும் கேட்டது பதாலுவுக்கு. போய் அவனைப் பிடித்துக் கொள்ளலாம் என்று நினைத்தபோது, குடிசைக்கு வெளியே இன்னும் மூன்று உருவங்கள் தென்பட்டன. கதவுக்கு மேலே கூரையில் செருகியிருந்த பாணாத்தடியை இழுத்துக் கொண்டு அவர்கள் மேல் விழுந்தான் பதாலு. முதலில் தடுமாறிப் போனாலும் அவர்கள் சமாளித்துக் கொண்டார்கள். அடிதடி ஆரம்பித்தது. பதாலுவின் தடி முறிந்துவிட்டது. தோள்மேல் இரண்டு மூன்று அடிகள் விழுந்தன. கைகளாலேயே அடிகளைத் தடுத்துக் கொண்டிருந்தான். ஒருவன் குடிசைக்குள் சென்று தீக்குச்சியைக் கிழித்துப் பார்த்தான். ரங்கன் அசையாமல் விழுந்து கிடந்தான். அவன் தலை கலப்பைக்

கொழுவின்மேல் கிடந்தது. கீழே மண் தரையில் கொஞ்சம் ரத்தம் கட்டியிருந்தது. பின்னால் திரும்பினான், "யார் நீ?" என்ற குரல் கேட்டு. கையில் தீக்குச்சி அணைந்துவிட்டது. இருந்தாலும் அவன் குறுக்கேயிருந்து நகர்ந்ததுமே அசையாமல் விழுந்து கிடந்த ரங்கனைத் தீக்குச்சி வெளிச்சத்தில் ராஜு பார்த்தான். அவசரமாக முன்னேக்கி வந்தான். ஜாக்கிரதையாக இருட்டில் தப்பித்துக் கொண்டு ஓடிவிட்டான் ஆசாமி. ராஜு மீண்டும் தீக்குச்சியைக் கிழித்துப் பார்த்தான். ரங்கனின் கண்கள் விந்தையாகப் பார்த்துக் கொண்டிருந்தன. அமைதியாக, நாடியைத் தொட்டுப் பார்த்தான் ராஜு. எங்கேயும் துடிப்பு இருப்பதாகத் தோன்றவில்லை. உடம்பு மட்டும் கொஞ்சம் சூடாகவே இருந்தது. வெளியே வந்தான் ராஜு. தன்னை அடித்தவர்களைக் கொஞ்ச தூரம் துரத்திக் கொண்டு போய் விட்டுவிட்டுப் பதாலு மேல்மூச்சு வாங்க வந்தான்.

"ஐயா! நீங்க வீட்டுக்குப் போகலியா?" என்று கேட்டான் பதாலு.

"இல்லே, மடுவு பக்கத்திலே உட்கார்ந்திருந்தேன். என்னமோ சத்தம் கேட்டது. என்னான்னு பார்க்கலாம்னு வந்தேன், உள்ளே ரங்கன்." என்றான் ராஜு.

"என்னைக் கொல்றதுக்கு வந்தான்."

"உன்னே இல்லே, என்னை."

"உள்ளே என்ன செய்றான் இன்னும்?"

"அசையாமே விழுந்து கெடக்கிறான். உசிர் இருக்கற மாதிரி தெரியலே."

"ஆ! செத்துட்டானா?"

"அப்படித்தான் இருக்குது பார்த்தா. கலப்பைக் கொழு மேலே விழுந்து கெடக்குது தலை. ரத்தம் சிந்தியிருக்குது."

"இப்போ என்ன பண்றதுயா?"

"அதான் யோசிக்கறேன். அவங்க வீட்டுக்குச் சொல்லி அனுப்பணும்."

"அவங்க வீட்லே சொன்னா சொன்னவன் உசிரோடு வெளியே வரமாட்டான்" என்றான் பதாலு.

"நிஜந்தான். நானே போய்ச் சொல்றேன்" என்றான் ராஜு.

"வேணும்யா. என் உசிரு போனாலும் உங்களைப் போகவுட மாட்டேன்" என்றான் பதாலு.

"ஒருவேளை கொஞ்சம் உசிரு இருக்குதோ என்னமோ பாவம். எதுக்கும் நல்லது. நீ போயி போலீஸ் இன்ஸ்பெக்டர் கிட்டே

சொல்லி, பட்டணத்திலேயிருந்து டாக்டரை வரவழைக்கச் சொல்லு.''

''பொணம், நம்ம குடிசைலே இருந்தா ஆபத்தில்லையா ஐயா? தூக்கினு போயி அவங்க தோட்டத்திலே போட்டுடறேன்'' என்றான் பதாலு.

''சேசே, நாம அந்த மாதிரி பைத்தியக்கார வேலை ஒண்ணும் செய்யக்கூடாது. நீ போ.''

''நீங்க தனியா இருப்பீங்களா இங்கே?''

''ஒண்ணும் பயமில்லே, நீ போயிட்டு வா.''

''அப்பா!'' என்றான் காலெடுத்து வைத்ததும் பதாலு.

''என்ன?'' என்று கேட்டான் ராஜு.

''முட்டி மேலே பட்டிடுச்சி அடி. இன்னொரு மூணு பேரு வந்தாங்க, அவன் பின்னாலே. நான் குறுக்கே போனேன். கைத்தடி உடைஞ்சிப் போச்சி. ஓடிப்பூட்டாங்க என் மவனுங்க.''

''உக்காரு பார்க்கறேன்'' என்றான் ராஜு.

''ஐயா சாமி, என் காலை நீங்க தொடக்கூடாது'' என்றான் பதாலு.

''உன் தாலி அறுந்தது, உக்காருடா!'' வலுக்கட்டாயமாக உட்கார வைத்து, பிடித்து அழுத்திப் பார்த்தான் ராஜு. துடித்து விட்டான் பதாலு.

''எலும்புலே பட்டிருக்கறாப்போல இருக்குது அடி'' என்றான் ராஜு.

குடிசைக் கூரையிலே கட்டித் தொங்கவிட்டிருந்தது விளக்கெண்ணெய் புட்டி. வண்டி அச்சில் ஊற்றுவதற்காகக் கொண்டு வந்த விளக்கெண்ணெய். ராஜு அதைத் தடவி நீவத் தொடங்கினான் பதாலுவின் காலை.

வெங்கன்னா அழுகையில், பயமும் துக்கமும் ஆத்திரமும் கலந்திருந்தன.

''அவனை முதல்லே அத்தப் பக்கமே போகாதடான்னு சொன்னேன். சொல்லாமக் கொள்ளாமப் போயிட்டான். அவங்களைக் கொல்லாம அவன் ஏன் போனானோ குடிசைக்குள்ளே. அந்தப் பதாலே முட்டிக்கு முட்டி பேத்து உக்கார வெக்கலேன்னா...? அப்பாவுக்கு உண்மை தெரிஞ்சிட்டா, உன்னையும் என்னையும் நிக்கவெச்சி வெட்டிப் போட்டுடுவாரு, ரங்கா! ரங்கா!'' மங்கம்மாவும் லிங்கையாவும் தர்மராஜுவும் அவரைப் பிடித்துக் கொண்டார்கள். வெங்கடேசு முதலில் ராமையா வீட்டுக்குப்

போய் ரகசியமாக வெங்கன்னுவை எழுப்பி அழைத்து வந்தான். கங்கம்மாவின் வீட்டுக்கு வந்த பிறகு, சாவு விஷயத்தைச் சாவ காசமாகச் சொன்னார் தர்மராஜு. இடிந்து போய் விட்டார் வெங்கன்னு. தொடக்க ஆவேசம் குறைந்த பிறகு, தர்மராஜு மெள்ள மெள்ளத் தம் ஆலோசனையைச் சொன்னார்.

''நீ எவ்வளவு அழுதாலும் செத்துப் போனவன் திரும்பி வர மாட்டான்'' என்றார்.

''அதில்லே. அவங்கக் குடிசைலே போயிட்டான். சண்டை போடறதுக்குன்னு போனான்னு சொல்லுவாங்க அவங்க. 'உங்களுக்குத் தெரியாம எப்படிப் போனா'ன்னு கேப்பார் அப்பா.''

''அதுக்கெல்லாம் பெரிய திட்டம் போட்டுட்டேன். ராஜுப் பய இருக்கான், இப்போ பொணத்துக் கிட்டே. சுப்புலுவை அனுப்பிச்சேன், இன்ஸ்பெக்டரைக் கூட்டிண்டு வரச் சொல்லி. மெதுவாகப் போலீசைக் குடிசைக்கு அழைச்சிண்டு போவாங்க, நம்ம ஆளுங்க. ரங்கனை ராஜு கொல்றப்போ பாத்தோம்னு நம்ம ஆளுங்க சொல்லுவாங்க. ராஜுப் பய வெளியே வர்றதுக்கு அவங்க தாத்தாவாலெகூட முடியாது'' என்றார் தர்மராஜு.

பதாலு கால்வலி கொஞ்சம் குறைந்ததும் ஊருக்குப் புறப் பட்டான், பண்ணையாருக்குச் செய்தி சொல்வதற்கு. லிங்க மடு அருகில் வரும்போது இரண்டு உருவங்கள் பூனைபோல் அடி எடுத்து வைத்துப் பின் தொடர்ந்தன. தன் கைத்தடியோ உடைந்து விட்டது. என்ன செய்வது என்று தோன்றாமல் பதாலு ஒரு விநாடி தயங்கினான். எதிராளிகள் பத்துப் பேராக வந்து குடிசை மேல் விழுந்தால் சின்னப் பண்ணையார் தனியாக அகப்பட்டுக் கொள்வார். ஆனால் பெரிய பண்ணையாருக்குச் செய்தி எட்டியே ஆக வேண்டும். சில நிமிஷங்களில் குடிசைக்கருகில் ஆட்களைச் சேர்க்க வேண்டும்.

ஆற்றில் குறுக்கே பாய்ந்தான் பதாலு. இடது பக்கமாக, ஊருக்குக் கொஞ்சம் தூரத்தில் சேரி இருந்தது. வீட்டுக்குப் போய்த் தடியை எடுத்துக்கொண்டு புறப்பட்டால் நல்லது. தன் பின்னால் யாரோ மடுவில் இறங்கினார்கள். பதாலு முடிந்த அளவு வேகமாக அடுத்த கரையைச் சேர்ந்தான். தன் வீட்டைப் பார்த்து ஓட்டம் பிடித்தான். பின்னால் ஓடி வருவோரின் காலடிச் சத்தம் கேட்டது.

கதவைத் தட்டினான், திறந்து கொண்டது. அந்த நடுராத்திரியில் கதவு திறந்திருப்பதும், புல்லி விழித்திருப்பதும் அவனுக்கு ஆச்சரியமாக இருந்தன. ஆனால் வெளியே அவசரமான வேலை இருந்தது. பாணைத்தடியை எடுத்துக்கொண்டு கதவைப் போட்டுக் கொள்ளச் சொன்னான் மனைவியை. அவள் பேசவில்லை.

''அப்பா!'' என்று வாயிலுக்கு வந்தாள் ராமி.

அப்போது உற்றுப் பார்த்தான் பதாலு, இரண்டு பேர் முகங்களையும். என்னமோ நடந்துவிட்டது என்பது புரிந்தது அவனுக்கு.

''என்னடி?'' என்று கேட்டான்.

''நீ எங்கேயும் போகாதெடா'' என்றாள் புல்லி மெலிந்த குரலில்.

''புடத்தடெ தூக்கிக்கினு போயிட்டாங்க'' என்றாள் ராமி.

''புடத்தடெயா!'' என்றான் பதாலு.

''அவன் உசிருக் கொண்ணும் ஆபத்தில்லே, நாங்க சொல்றபடி நீ கேட்டா'' என்று சொல்லிக் கொண்டே போத்துக்காடும், பென்டையாவும் மூலை இருட்டிலிருந்து வெளிச்சத்துக்கு வந்தார்கள்.

''திருட்டு மவனுங்களா?'' என்று சொல்லிக் கொண்டே தடியைத் தூக்கினான் பதாலு. புல்லி வந்து தடியைப் பிடித்துக் கொண்டாள்.

''வேணும்டா. நீ தடியெ ஓங்கினீன்னா என்னைக் கொண்ணுத் தின்ன மாதிரிதான்'' என்றாள்.

''அப்பா! நீ எதிர்த்தா புடத்தடெ கொண்ணுடுவாங்களாம்'' என்றாள் ராமி, துக்கத்தைத் தொண்டையில் அடக்கி வைத்து.

பதாலு இடி விழுந்தாற்போலானான். போத்துக்காடு சிரித்துக் கொண்டே முன்னால் வந்தான்.

''நாங்க சொல்றபடி கேட்டீன்னா அவனும் நீயும் நல்லா யிருப்பீங்க. இல்லேன்னா ரங்கனை உங்க பண்ணையாரு கொண்ண மாதிரி, புடத்தடெ நாங்க கொண்ணுடுவோம்.''

''என்னடா சொன்னே? எங்க பண்ணையாரு அந்த இடத்திலியே இல்லியே! என்னைக் கொல்றதுக்கு வந்து அவரு செத்துப் போனாரு'' என்றான் பதாலு.

''அந்த விஷயத்தைப் போலீசு கண்டுபிடிக்கும். நீ எங்க கூட வா'' என்றான் வெங்கடேசு.

''எங்கே?''

''அதெல்லாம் ஒண்ணும் நீ கேக்கக்கூடாது. அப்படி ரொம்ப நாளு இருக்க வேண்டியதில்லே. உங்க சின்ன பண்ணையாரு மேலே கொலைக் கேசு ருஜு ஆகிறவரைக்குந்தான்'' என்றான் வாயிற்படிக்கு வந்த அப்பன்னா.

''களுதெ மவனுங்களா! இதெல்லாம் உங்க கணக்கன் ஏற்பாடா? என் உசிரு போனலும் எங்கய்யா மேலே கேசு வரவிடுவேஞ? போயி நிஜத்தை எல்லாம் இன்ஸ்பெக்டரையாகிட்டெ இப்பவே சொல்லிடறேன் '' என்று சொல்லிக்கொண்டே நகர்ந்தான் பதாலு. புல்லி காலைப் பிடித்துக் கொண்டாள்.

''வேணும்டா. புடத்தடெ கொண்ணுடுவாங்கடா, நீ போயி நிஜத்தைச் சொன்னீஞ. என் வயத்திலெ மண்ணெ வாரிப் போடறியா? என் மேலே ஆணை, நீ போவாதே'' என்று சொல்லிக் கொண்டே வாயிலும் வயிற்றிலும் அடித்துக் கொண்டாள் புல்லி. பதாலு அப்படியே நின்றுவிட்டான். 'தான் போகலேன்ஞ, வெளியே எஜமானுக்கு அநியாயம் நடக்கும். போலீசு வந்து பாக்கறப்போ அவரும் அந்தப் பொணமும் இருப்பாங்க. அவர் மேலே கேசு பலமாயிடும். தான் பிடிவாதமாப் போனல் தன் வயித்திலே பொறந்த குழந்தையைத் தாட்சண்யமில்லாமக் கொண்ணுடுவாங்க இந்தக் கசாப்புக்காரங்க.''

இந்த இக்கட்டான நிலையில் இருந்த பதாலுவை ஆளுக்கொரு கையாகப் பிடித்து, கூட்டிக் கொண்டு போனர்கள் அவர்கள். ''உங்க ரெண்டு பேர்லே யாராவது நிஜத்தை வெளியே சொன்னீங்கன்ஞ, பதாலு புடத்தடு ரெண்டு பேரும் தக்க மாட்டாங்க உங்களுக்கு'' என்று எச்சரித்துவிட்டுப் போய்விட்டார்கள். புல்லி குய்யோ முறையோ என்று அழுதாள். ராமி அம்மாவை மெதுவாகக் அழைத்துக் கொண்டு போய்க் கட்டிலில் படுக்க வைத்தாள்.

பதாலு போய் இரண்டு மூன்று மணியாயிற்று. ஒரு பக்கம் பொழுது விடிந்துகொண் டிருந்தது. வெள்ளி முளைத்துவிட்டது. 'பதாலு என்ன ஆனன்? தன் ஆட்கள் ஒருத்தரும் ஏன் வரலே? இந்தப் பொணத்தை இங்கேயே தனியா விட்டுட்டதனலே ஆபத்து ஒண்ணும் வந்துடாது' என்று நினைத்தான் ராஜு. வீட்டுக்குப் போய் அப்பாவிடமும் அண்ணவிடமும் நடந்த விஷயத்தை முதலில் சொல்ல வேண்டும். போலீசுக்குச் சொல்லி அனுப்ப வேண்டும். ராஜு ஊரை நோக்கிப் புறப்பட்டான்.

ஆற்றைக் கடந்ததும் ஒரு தடவை பதாலு வீட்டுக்குப் போய் அவன் என்ன ஆனன் என்று தெரிந்து கொண்டால் நல்லது என்று எண்ணினன் ராஜு.

பதாலு வீட்டுக் கதவைத் தட்டினுன். ராமி கதவைத் திறந்து அவனைப் பார்த்ததும் அதிர்ந்துபோய் விட்டாள். புல்லி எழுந்து வந்தாள். காடா விளக்கு வெளிச்சத்தில் அவள் பல நாள் சீக்கில் விழுந்து எழுந்தவள் போல் தென்பட்டாள்.

''பதாலு இல்லியா?'' என்று கேட்டான் ராஜு.

''உள்ளே வாங்கையா, யாராவது பாத்துட்டா...'' என்று படபடப்போடு, ஏறத்தாழக் கையைப் பிடித்துக்கொண்டு உள்ளே இழுத்துச் சென்றுள் ராமி. உடனே கதவை மூடினுள். ராஜுவுக்கு இதெல்லாம் தலைகால் புரியாமல் ஆச்சரியமாக இருந்தது.

''ஏன்? என்ன நடந்தது?'' என்று கேட்டான் பதற்றத்தோடு.

ஓவென்று அழுதுகொண்டே பொத்தென்று விழுந்துவிட்டாள் புல்லி. அம்மாவை ஒரு கையில் பிடித்துக்கொண்டு அணைத்த படியே, ராமி சொன்னுள்: ''அவனையும் புடத்தடெயும் பிடிச்சிக்கினு போயிட்டாங்க.''

''யாரு?''

ராமி நடந்ததை எல்லாம் சொன்னுள். ராஜு தன் வசம் இழந்தான்.

''என்ன ஆனுலும் சரி. நான் வந்து போலீசுகிட்டே சொல்லிட் றேன் நடந்ததை எல்லாம்'' என்றுள் ராமி.

''ராமி'' என்று சொல்லிக்கொண்டே அழுதாள் புல்லி.

''வேணும் ராமீ'' என்றுன் ராஜு.

''உங்க உப்பைத் திண்ணு, உங்க உசிருக்கு ஆபத்து வர்றப்போ எப்படிச் சும்மா இருப்பேன்?'' என்றுள் ராமி.

''இன்னும் என் மேலே கேசு ஒண்ணும் வரல்லியே. வர்றப்பொ பாத்துக்கலாம். நீ மாத்திரம் யார்கிட்டேயும் இந்தப் பேச்சை எடுக்காதே. அவங்க கசாப்புக்காரங்க; சொன்னதைச் செய்துடு வாங்க'' என்றுன் ராஜு.

இன்ஸ்பெக்டர் மற்றும் போலீஸ்காரர்களோடு குடிசை யருகில் வெங்கடேசு வந்தான். எங்கேயும் ஒரு சந்தடியும் இல்லை. கதவைத் திறந்து பாட்டரி லைட்டைப் போட்டுப் பார்த்தார் இன்ஸ்பெக்டர். ரங்கன் பிணம் குடிசையில் தனியாகக் கிடந்தது.

''பராரியா ஓடிட்டான்!'' என்றுன் வெங்கடேசு. இன்ஸ் பெக்டர் குடிசை முழுவதும் சோதனை போட்டார். வயல்களை எல்லாம் பார்த்தார். ராஜுவை எங்குமே காணவில்லை.

ராஜு புல்லிக்கும் ராமிக்கும் தைரியம் சொல்லிவிட்டு, ஊருக்குள் போனுன். சின்னத் தெரு முனை திரும்பி வீட்டருகில்

போய்க்கொண் டிருந்தான் மெதுவாக. இன்னும் அந்திக் கருக்கல் இருந்தது. வீட்டு முன்னல் போலீஸ் இருந்தது. ஒரு விநாடி நின்று ஆலோசித்தான் ராஜு, உள்ளே போவதா வேண்டாமா என்று. இதற்குள் திண்ணைக்குக் கீழே நிழலிலிருந்து புருப் போல வந்தாள் மல்லி.

''வா! வா!'' என்ருள் மல்லி.

சந்துக்குள் வந்த பிறகு சொன்னுள்; 'அவன் மேல் அரஸ்ட் வாரன்டோடு வந்தார்கள் போலீஸ்காரர்கள். தென்பட்டால் கைது செய்து கூட்டிக்கொண்டு போய்விடுவார்கள்' என்று.

''நான் சொல்லவே இல்லியே'' என்ருன் ராஜு.

''அவங்க நம்ப வேண்டாம். உன் மேலே கேசு பலமா இருக்குதாம்'' என்ருள் மல்லி. கையைப் பிடித்துக்கொண்டு சந்துகள் வழியாகக் கூட்டிக்கொண்டு போனுள்.

கணுச்சாரி அப்போதுதான் குளித்து முடித்து, ஏரியிலிருந்து கரையேறினுர். மல்லி அவருடைய கைகள் இரண்டையும் பதற்றத்தோடு பிடித்துக் கொண்டாள். அவருக்கு ஆச்சரியமாக இருந்தது. கோவில் மதிலுக்குள்ளே அழைத்துப் போய்க் கதவை மூடினுள். கோவில் பின்பக்கம் நோக்கி நடந்துகொண்டே பின்னுல் வரச் சொல்லிக் கணுச்சாரிக்குச் சைகை செய்தாள். பொன்னரளிச் செடிகளின் மறைவிலிருந்து வெளியே வந்தான் ராஜு. கணுச்சாரிக்கு ஒன்றும் புரியவில்லை. நடந்ததை யெல்லாம் மல்லி சுருக்கமாகச் சொன்னுள்.

''சித்தப்பா, உங்க மேலே யாருக்கும் சந்தேகம் வராது. அத்தானை நீங்கதான் ஒளிச்சி வெக்கணும். இல்லேன்னு அநியாய மாப் போயிடும். அவரைப் பிடிச்சிக்கிட்டுப் போய்க் கேசு போட்டுடுவாங்க.'' மல்லியின் குரல் நடுங்கியது. கணுச்சாரி இக்கட்டில் மாட்டிக் கொண்டார்.

''கொஞ்ச நாளுதான். அந்தப் பதாலுவையும், புடத்தடையையும் எங்கே ஒளிச்சிருக்காங்களோ, கண்டுபிடிச்சு விடுவிக்கற வரைக்குந்தான்'' என்று கெஞ்சிக் கேட்டுக் கொண்டாள் மல்லி.

''நான் எங்கே ஒளிச்சி வைக்கமுடியும்?'' என்று கேட்டார் கணுச்சாரி.

''அம்மன் விக்ரகம் பெரிசு. அவங்க பின்னுல் ஒளிச்சிட்டா யாரும் தேடமாட்டாங்க'' என்ருள் மல்லி. கணுச்சாரி ஒரு முடிவுக்கு வந்தார்.

''சரி, வாய்யா!'' என்ருர்.

''சித்தப்பா'' என்று சொல்லிக்கொண்டே கணுச்சாரியின் ஈர உடம்பை நன்றியோடு அணைத்துக்கொண்டாள்.

''அம்மா!'' என்றார் கணுச்சாரி.

ராஜுவைக் கோவிலில் வைத்துப் பூட்டிவிட்டார். மல்லியும் கணுச்சாரியும் சேர்ந்து, விக்கிரகத்தின் பின்னாலிருந்த செங்கற்கள் இரண்டு மூன்றை நகர்த்திவிட்டனர். விழுந்துவிட்ட செங் கற்களைக் கணுச்சாரியே மண்ணால் ஒட்டி வைத்திருந்தார். திருடன் எப்போதோ போட்ட கன்னம் அது. இன்று உள்ளே யிருக்கும் ராஜுவுக்குச் சோற்று மூட்டையை எட்டிக் கொடுப் பதற்கு அது உபயோகப்பட்டது. கணுச்சாரி விதியின் விளை யாட்டை எண்ணிச் சிரித்துக்கொண்டார்.

மல்லி புழக்கடை வழியாக வீட்டுக்குள் நுழைந்தபோது, வீடெல்லாம் அல்லோல கல்லோலமாக இருந்தது. சேஷம்மா அழுதுகொண்டிருந்தாள். சுப்பையா கூண்டில் சிக்கிய சிங்கம் போலத் திரிந்து கொண்டிருந்தார். இன்ஸ்பெக்டர் சொன்னார்:

''ஐயா! உங்க பையன் வயல்லெ, குடிசைலே ரங்கன் பொணம் பக்கத்திலே உக்காந்திருந்தப்போ பாத்தவங்க இருக்காங்க.''

''எங்க பையன் முதல்லெ வயல் பக்கமே போகலே. ராத்திரி யெல்லாம் வீட்டிலியே இருந்தான்'' என்றார் சுப்பையா கோபமாக.

''அப்படியானா கூப்பிடுங்க'' என்றார் இன்ஸ்பெக்டர் சிரித்துக் கொண்டே.

''நாங்க காட்ட மாட்டோம். எங்க வீட்டைச் சோதனை போட விடமாட்டோம்'' என்றார் புன்னையா பிடிவாதமாக. மல்லி கூடத்துக்கு வந்தாள்.

''தேடிக்கட்டும் அத்தான்! வீட்லே ஒளிச்சி வெச்சிருக்கறோம்னு அவங்க ஏன் சந்தேகப்படணும்?'' என்றாள்.

ராஜு வீட்டில் இல்லை என்பதை அந்த வார்த்தைகளிலிருந்து இன்ஸ்பெக்டர் புரிந்து கொண்டார். ஏதோ கடமைக்காக அறைகளை எல்லாம் தேடினார்கள் கான்ஸ்டேபிள்கள். இன்ஸ் பெக்டர் எழுந்துகொண்டே சொன்னார்:

''ஐயா! அவர் தாமாகவே வந்து சரணயிட்டா விசாரணையிலே அவருக்குக் கொஞ்சம் சௌகரியமா இருக்கும். இல்லேன்னா

ஓடிட்டதனாலே கேசு இன்னும் பலமாயிடும். நேத்து மத்தியானம் ராமையாவோட வீட்டுக்கு உங்க மகன் போனது, ரங்கனைக் கொன்று புதைச்சுப்பிடுவேன்னு பத்துப் பேர் முன்னால் சொன்னது, நேத்து ராத்திரி அவன் பொணம் பக்கத்திலே தனியா இருந்தது, இவை எல்லாத்தையும் பார்த்தா, ரங்கனை அவர்தாம் கொண்ணிருப்பார்னு சொல்றதுக்குப் பலமான ஆதாரம் இருக்குது.''

இன்ஸ்பெக்டர் போய்விட்டார். சுப்பையாவுக்கு இதெல்லாம் ஒரே குழப்பமாக இருந்தது. வயலுக்குப் போன ராஜூ என்ன ஆனான்? ரங்கனின் பிணம் அந்தக் குடிசையிலே எப்படி வந்தது? இந்தக் கேள்விகளுக்குச் சரியான பதில் ஒன்றும் அவருக்குக் கிடைக்கவில்லை. இரவு ரங்கன் வயலுக்குப் போயிருப்பான் என்றும், அங்கே அடிதடி நடந்திருக்கும் என்றும், அதில் தற்செயலாக ரங்கன் செத்திருப்பான் என்றும், ராஜூ பயந்து எங்கேயோ ஓடிவிட்டான் என்றும் அவருடைய அந்தராத்மாவில்—அவர் மனம் ஒப்புக்கொள்ளாத ஒரு சந்தேகம் தோன்றியது.

சூராலுவுக்கு ஆறுதல் சொல்ல யாராலும் முடியவில்லை. தர்மராஜூ, லிங்கையா, வெங்கன்னா மூவரும் பட்டணம் சென்று பிரேதப் பரிசோதனை ஆனபிறகு ரங்கன் பிணத்தைக் காரில் வீட்டுக்குக் கொண்டு வந்தார்கள்.

மத்தியான்னம் மூன்று மணி ஆகிவிட்டது. அன்று வீட்டில் யாரும் பச்சைத் தண்ணீரைக்கூடத் தொடவில்லை. அம்மாவின் பக்கத்தில் லட்சுமி உட்கார்ந்திருந்தாள், அவ்வளவுதான். அவளுள்ளே ஏதோ அறுந்து விட்டது. இடி விழுந்த மரம் போல இருந்தாள் அவள். மனைவியைச் சும்மா இருக்கச் சொல்லி, ராமையா சத்தம் போட்டுக்கொண் டிருந்தார். அது கோபம் அல்ல. ராமையாவின் துக்கம் கண்ணீராக என்றும் வெளியானதில்லை. அவருடைய கத்தலுக்குப் பின்னால், அவ்வப்போது உடைந்த குரலில் அவருடைய இதயம் ரங்கனுக்காக ஏங்கிக் கொண்டிருந்தது.

பிணத்தைத் தகனம் செய்யக் கொண்டு போகும்போது, சூராலுவைப் பத்துப் பேர் பிடித்துக்கொள்ள வேண்டி வந்தது. தான்

என்ன பேசுகிறோம் என்று அவளுக்கே தெரியவில்லை. ராஜுவை யும், அவன் குடும்பத்தையும், ஊரையும், இந்தக் காட்சிகளையும் உரத்த குரலில் வாய்க்கு வந்தபடி சபித்துக் கொட்டினாள். தர்மராஜுவும் லிங்கையாவும் கிரியைகள் விஷயத்தில் அக்கறை எடுத்துக் கொள்ளாமல் இருந்தால் அன்று தகனமே நடந்திருக்காது.

சுடுகாட்டிலிருந்து எல்லாரும் வீட்டுக்குத் திரும்புவதற்கு இரவு ஒன்பதாகிவிட்டது. சுடுகாட்டுக்குப் போனதிலிருந்து ராமையா வின் ஆவேசம் கனமான மௌனமாக மாறிவிட்டது. அவர் ஒரு வார்த்தையும் பேசவில்லை. அவர் கத்தினால் தர்மராஜுவால் புரிந்துகொள்ள முடியும். உதறிவிட்டுப் போய்விடுவார். ராமையாவின் மௌனம் அவருக்குக் கலக்கத்தைக் கொடுத்தது. அதன் பின்னால் தமக்குத் தென்படாத எரிமலை வெடிப்பதற்குத் தயாராக இருப்பதாக அவருக்குச் சந்தேகம் தட்டியது. ராமை யாவின் மௌனம் அவருக்குப் புதிய அநுபவம். அதனால் தாம் தீட்டிய திட்டத்தை உடனே நிறைவேற்ற வேண்டும். அந்தத் திட்டத்தில் முக்கியமானது ராஜுவைக் கைதாக்குவது. ராஜு போலீசுக்கு அகப்படாமல் தப்பித் திரிவது அவருடைய திட்டத் துக்குப் பெரிய தோல்வி. இடைவெளி விட்டால் உண்மை வெளிப் பட்டுவிடும். அதனால் இடைவெளிக்கு வாய்ப்பில்லாமல் விவ காரத்தை விரட்டிக்கொண்டு போகவேண்டும்.

ராமையா பெரிய தெருச் சாவடியில் போய் ஓய்வெடுக்கத் தொடங்கியதும், வெங்கன்னாவைக் காரில் ஏற்றிக்கொண்டு தர்ம ராஜு புறப்பட்டார். பதாலுவை முதலில் பயமுறுத்தி அவனைத் தன் வழிக்குக் கொண்டுவர வேண்டும். பதாலு சாதாரணமாகப் பயப்படும் ஆசாமி அல்ல. ஆகவே புல்லியைக் குறுக்கே வைத்துக்கொண்டு அவன் பல்லைப் பிடுங்கிவிடவேண்டும்.

சேரிக்குக் கொஞ்சம் தூரத்தில் காரை நிறுத்தினார். கிட்டையனை மட்டும் பதாலு குடிசைக்கு அனுப்பினார். கிட்டையா போகும்போது, புல்லி மட்டும் வீட்டில் இருந்தாள். ராமி இல்லாமற் போனது தன் திட்டத்துக்கு அநுகூலமானதே என்று எண்ணினார் தர்மராஜு. புடத்தடுவைக் காட்டுவதாக ஆசை காட்டி அவளைக் காரில் ஏற்றினார்.

லிங்கையாவுக்குக் கொஞ்ச நாட்களாக மங்கம்மாவோடு தனிமையில் காலம் தள்ளச் சுத்தமாகச் சந்தர்ப்பம் கிடைப்பதே இல்லே. தர்மராஜு இப்போது தம் காரியாலயத்தைப் பகிரங்கமாக மங்கம்மாவின் வீட்டுக்கே மாற்றி விட்டார். லிங்கையா, அப்பாவின் மேல், ஊரின் மேல், உலகத்தின் மேல் எல்லாம் மிக மிகக் கோபமாக இருந்தான்.

பிணத்தைத் தகனம் செய்து முடித்த பிறகு தர்மராஜு வெங்கன்னவோடு ஆலோசனேகள் நடத்தியதையும், காரில் இரண்டு பேரும் புறப்பட்டதையும் பார்த்தான் லிங்கையா. இதை விட மங்கியோடு தனிமையில் அநுபவிக்க நல்ல சந்தர்ப்பம் கிடைக்காதென்று நினேத்தான். ஏதோ பெரிய வேலேயாகப் போய்க்கொண் டிருந்தார்கள் அப்பாவும் வெங்கன்னவும். அநேகமாக இரவு திரும்பி வரமாட்டார்கள். பத்து மணிக்கெல்லாம் மங்கம்மாவின் வீட்டை அடைந்துவிட்டான் லிங்கையா.

மாலே நேரத்தில் சோற்றை ஓர் இலேயில் மூட்டை கட்டி, கோவில் அருகில் கொண்டு போனுள் மல்லி. இருட்டில் கோவிலுக்குப் பின்னல் சென்று செங்கற்களே நகர்த்தி மூட்டையை உள்ளே கொடுத்தாள்.

சோற்றைத் தின்று கொண்டே மெதுவாகச் சொன்னுன் ராஜு. குரல் கோவிலேத் தாண்டி வெளியே கேட்காத அளவு மெதுவாகக் கூறினுன்.

''பதாலுவை எங்கே ஒளிச்சி வெச்சிருக்கருங்களோ? இன்னக்கி ராத்ரியே கண்டுபிடிக்கணும். ராமியையும் கங்கப்பாவையும் வரச் சொன்னியா?''

''புளியந் தோப்புலெ இருக்கருங்க, தாழம் புதர் மறப்பிலே அத்தான்! என்ன செய்யணுமோ சொல்லு. நீ மட்டும் வெளியே வராதே'' என்ருள் மல்லி கொஞ்சும் குரலில்.

''நான் வரலேன்னு யார் கண்டுபிடிக்கறது? கங்கப்பாவாலே இந்த வேலே முடியாது. அண்ணவிடமும், அப்பாவிடமும் நான் எங்கே இருக்கறேன்னு சொல்லாதே. அவசரப்பட்டு எல்லாத்தையும் குட்டிச்சுவராக்கிடுவாங்க.''

''அப்படியே ஆவட்டும்'' என்ருள் மல்லி, பெருமூச்சு விட்டுக் கொண்டு. அந்தப் பெருமூச்சில் தவிப்புடன் கூடப் பலமும் இருந்தது.

இரவு பன்னிரண்டாகிவிட்டது. லிங்கையாவை ஒரு பக்கம் தூண்டி விட்டுக்கொண்டும் இன்னொரு பக்கம் நெருங்க விடாமலும் செய்துகொண் டிருந்தாள் மங்கி. லிங்கையாவுக்கு ஆறடி தூரத்திலிருந்த சொர்க்கம், எட்டினல் தூரமாக விலகிப் போய்க்கொண் டிருந்தது. மங்கிக்கு இவ்வளவு நல்ல சந்தர்ப்பம் கிடைக்காது, வெறி பிடித்த லிங்கையாவிடமிருந்து பணம் பிடுங்குவதற்கு. தர்மராஜு நெய்க் கிண்ணத்தை உரியின் மேல் காட்டியே லொட்டை போடச் சொல்வானே தவிர, தாராள மாகக் கையில் ஊற்றமாட்டான். லிங்கையாவுக்கு வெறியேற்றி அன்றிரவு ஒரு நூறுவது கரக்க வேண்டுமென்று முடிவு செய்து கொண்டாள் மங்கி. ஆனல் லிங்கையா, பணம் தருவதாகச் சத்தியம் செய்தானே தவிர, அன்றிரவு வீட்டுக்குப் போய்ப் பணம் கொண்டுவருவதற்கு மட்டும் ஒப்புக் கொள்ளவில்லை. முதலில் அவன் ஆசை நிறைவேற வேண்டும். அதோடு மங்கியின் சாகசங்கள் அவன் நரம்புகளை நன்றாக முறுக்கிவிட்டன. அவன் உடல் ஜுரம் வந்தாற்போல் சூடாகிவிட்டது. அலாக்காக மங்கியைத் தூக்கிக் கட்டிலின்மேல் போட்டான். அப்போது கதவு தட்டும் சத்தம் கேட்டது. அப்பா திரும்பி வந்துவிட்டார் என்று நினைத்தான் லிங்கையா. அவன் உடல் சில்லிட்டுவிட்டது. மூலையிலிருந்த எள் கழுவும் பெரிய கூடைக்குள் கட்டிலிலிருந்து குதித்தான். அவிழ்ந்துவிட்ட கொசுவத்தைச் சரி செய்து கொண்டே மங்கி கதவைத் திறந்தாள்.

ராமி, பத்துப் பைசா மங்கி கையில் வைத்து எண்ணெய் கேட்டாள். அம்மாவுக்கு ஏதோ வயிற்றுவலி வந்ததென்றும், எண்ணெய் தேய்த்து ஒத்தடம் கொடுக்கும்படி அடுத்த வீட்டு நூக்காலம்மா சொன்னுள் என்றும் சொன்னுள். எண்ணெயை அரையாழாக்கில் அளந்தாள் மங்கம்மா. அதற்கப்புறம் என்ன நடந்ததோ மங்கிக்கு நீண்ட நேரம் வரை தெரியவில்லை. அரை யாழாக்கு எண்ணெயும் கண்களில் நிறைந்துவிட்டது. ராமியைப் பிடிக்கப் போனுள் மங்கி. எண்ணெய்க் கைகளுக்குப் பிடி கிடைக்கவில்லை. கத்துவதற்குத் திறந்த வாய் நிறைய எண் ணெயை ஊற்றி, பச்சைப் பிண்ணுக்கைத் திணித்து விட்டாள் ராமி. இரண்டு கைகளையும் பின்னுல் இழுத்துச் செக்குமரத்துக்குப் பின்னுல் வளைத்து அசையாதபடி பிடித்துக் கொண்டாள்.

ராஜு வீட்டுக்குள் நுழைந்து கதவை மூடினுன். பரணிலும் கட்டில் கீழேயும் தேடினுன். எள் கழுவும் கூடையில் ஏதோ விசித்

திரமான சத்தம் கேட்டது. பழைய துணி மூட்டையை எடுப்பது போல வெளியே இழுத்துப் போட்டான் லிங்கையாவை. லிங்கையாவுக்கு மூச்சு நின்று விட்டது.

"பதாலெ எங்கே ஒளிச்சாங்கடா?" என்று மென்மையான குரலில் கேட்டான் ராஜு. தனக்குத் தெரியாது என்பது போலத் தலையாட்டினான் லிங்கையா.

"புடத்தடெ?"

மறுபடியும் அதே தலையாட்டம். லாபம் இல்லையென்று ராஜு அவனைக் கட்டிலில் தும்புக் கயிற்றால் கட்டிப் போட்டு, வாயில் துணியை வைத்து அடைத்துவிட்டு இந்தப் பக்கம் வந்தான். உள்ளே எங்கேயும் இல்லை யென்று சைகை மூலம் ராமிக்குச் சொல்லிவிட்டு, இருட்டுக்குள் நழுவிவிட்டான் ராஜு. தன் பிடியை விட்டுவிட்டு ராமியும் ஓட்டமாக ஓடிவிட்டாள். நடந்த அவமானத்தாலும், பெருகிவிட்ட இதயத் துடிப்பினாலும் மங்கிக்குச் சொல்ல முடியாத கோபம் வந்தது. கொஞ்சம் கண் திறந்ததும் கதவை விறைப்பாகத் தள்ளிவிட்டு, கட்டில் மேலிருந்த லிங்கையாவின் மேல் தன் ஆத்திரத்தையெல்லாம் காட்டினாள். கட்டை அவிழ்த்துவிட்டு அவனை வெளியே போகச் சொன்னாள். இனிமேல் தன் வீட்டில் அவனுக்கோ, தர்மராஜுவுக்கோ, அவர்கள் ஆலோசனைகளுக்கோ இடம் இல்லை யென்று சொன்னாள். லிங்கையாவுக்கு ஒரு பக்கம் நடுக்கம் குறையவில்லை. இன்னொரு பக்கம் பூகம்பம் போல் வந்து விழுந்தாள் மங்கி. இந்த அல்லோல கல்லோலத்தில் அவன் தொண்டையைத் தாண்டி வெளியே வந்தது அழுகை ஒன்றுதான். இந்த ரசமான கட்டத்தில் வந்து காரிலிருந்து இறங்கினார் தர்மராஜு.

அவர் மிகவும் வெறுப்பில் இருந்தார். போட்ட திட்டம் நினைத்தபடி நிறைவேறவில்லை. புல்லியை இவ்வளவு பெட்ரோல் செலவழித்து நூறு மைல் அழைத்துப் போய்த் திரும்பி வந்ததெல்லாம் வீணாகிவிட்டது. பொல்லாரத்தில் ரங்கன் அப்பா நிலத்தில் தண்ணீர்ப் பம்புக்காகக் கட்டிய ஷெட் ஒன்று உண்டு. அதில் கைதியாக இருந்தான் பதாலு. புல்லியை அவன் எதிரில் மிரட்டினால், பதாலுவின் பிடிவாதம் கரைந்துவிடும் என்றும், தாம் சொல்வதுபோல் கேட்டு, ஒரு வாக்குமூலத்தில் கைநாட்டுப் போட்டு விடுவான் என்றும் நம்பினார் தர்மராஜு. ராஜு, ரங்கனை அடித்துக்கொண்டிருந்தபோது தான் பார்த்ததாக வாக்குமூலம். புல்லி அழுதாளே தவிர, அந்தத் தப்பான வேலையைச் செய்யச் சொல்லி அவளால் கூடச் சொல்ல முடிய

வில்லே. பதாலு, தன் குடும்பமெல்லாம் நாசமாகப் போனாலும் சரி, தன் பண்ணேயாருக்கு அநியாயம் செய்ய முடியாதென்று திடமாகச் சொல்லிவிட்டான். புல்லியைக் காரில் ஏற்றிக் கொண்டு திரும்பும்போது பதாலு இருக்கும் இடத்தை வெளியே சொன்னால் உடனே புடத்தடு, பதாலு இரண்டு பேரும் உயிருடன் இருக்க மாட்டார்கள் என்றும் மிரட்டி, வீட்டருகே கொண்டு விட்டு விட்டார்.

அந்த ஆத்திரத்தில் வந்த தர்மராஜுவுக்கு மங்கி தன் மகனை அடிக்கும் காட்சியைப் பார்த்ததும் தலைகால் தெரியாத கோபம் வந்துவிட்டது. மங்கியைப் பளார் பளாரென்று கன்னத்தில் அறைந்தார். மங்கி கீழே விழுந்து விட்டாள். ஓவென்று ஓல மிடத் தொடங்கினாள்.

"உங்க சண்டையும் நீங்களும் நாசமாப் போவ! என் வீட்டுக்கே வந்துட்டுது கொள்ளிக்கட்டெ. அந்தப் பறப்பொண்ணு வந்து என் கண்ணுலே எண்ணயெ ஊத்திட்டு...சீ, கஸ்மாலம் பிடிச்ச பொளப்பு. உன்னாலெதான் இப்படி யெல்லாம் என் பொளப்பு எளக்காரமாப் போச்சி."

தர்மராஜுவின் கோபம் அப்படியே நீண்ட நேரம் இருக்காது. எல்லா ஆத்திரங்களும் லௌகீகத்துக்குக் கட்டுப்பட்டே இருக்கும். மங்கியிடம் கெஞ்சியபடி இச்சகமாகப் பேசினார். வெங்கன்னாவிடம் செலவுக்கு வாங்கிக்கொண்ட ஐந்நூறில் ஒரு நூறை அவள் கையில் வைத்தார். அதுவும் இதுவும் பேசி நடந்த கதையை எல்லாம் வெளியில் வரவழைத்தார்.

'ராஜு எங்கெயோ கிட்டேதான் இருக்கிறான் போல இருக்குது. அவங்க பதாலு இருக்கிற இடத்தைக் கண்டுபிடிக்கப் பலமா முயற்சி பண்ணிக்கிட் டிருக்கறாங்க. எங்கே ஒளிஞ்சிருப்பான் ராஜு?' தீவிரமாக யோசிக்கலானார் தர்மராஜு.

புளியந்தோப்பில் கங்கப்பா, மல்லி, ராஜு, ராமி யாவரும் அடுத்துச் செய்ய வேண்டியது என்ன என்ற சர்ச்சையில் ஈடுபட் டிருந்தனர். ராஜு வெளியே இருந்தால் ஆபத்து. அவன் கோவிலிலேயே ஒளிந்திருந்தால், சாமர்த்தியமாக வேலை செய்யக் கூடிய ஆண் பிள்ளைகள் யாரும் வெளியே இல்லை. கங்கப்பா சாமர்த்தியமாக வேலை செய்வான். ஆனால், காரியத்தை நிறை

வேற்றக் கூடிய தனித் திறமை அவனிடம் இல்லை. புன்னையாவைக் களத்தில் இறக்கினால் ஆத்திரப்பட்டு எல்லாவற்றையும் கெடுத்து விடுவார். இரண்டு உயிர்களுக்கு ஆபத்து வரும், அவர் களத்தில் இறங்கினால். புடத்தடுவையும் பதாலுவையும் தாட்சண்யம் இல்லாமல் அந்த ஆட்கள் கொன்று விடுவார்கள்.

எவ்வளவு யோசித்தாலும் வழி தென்படவில்லை. வெள்ளி முளைத்தது. ராஜுவைக் கோவிலில் போய் ஒளிந்து கொள்ளச் சொல்லி மல்லி அவசரப்படுத்தினாள்.

ராஜு ஏரிகரையில் ஏறப் போகும்போது, அந்தப் பக்கம் ஆலமர நிழலில் சில உருவங்கள் தென்பட்டன. கோவில் பின்னால் இருட்டி லேயே நழுவிக் கோவில் மதிலுக்குள் சுவர் ஏறிக் குதித்தான். கணேச்சாரி முன் மண்டபத்தில் படுத்திருந்தார். தூங்கவில்லை. ராஜுவைக் கவலையோடு எதிர்பார்த்துக் கொண்டிருந்தார். அவசரமாகக் கோவில் கதவைத் திறந்தார். ராஜு உள்ளே போனதுமே கதவைப் பூட்டிவிட்டார். மண்டபத்துக்குள் சென்று படுத்தார். யாரோ வெளிக்கதவைத் தட்டினார்கள். கணேச்சாரி கதவைத் திறந்தார். தர்மராஜுவையும் போலீசையும் பார்த்ததுமே கணேச்சாரி அசந்துபோய் விட்டார். ஆனால் கலக்கத்தைக் காட்டிக் கொள்ளவில்லை. போலீஸ்காரர்கள் கோவில் மதிலுக்குள்ளே எல்லாம் தேடினார்கள்.

"யாரும் இல்லே சார்!" என்றார்கள் இன்ஸ்பெக்டரிடம்.

"கோவிலிலேயும் பாருங்க சார்!" என்றார் தர்மராஜு. கணேச் சாரி உடல் வேர்த்து விட்டது.

"பூட்டைத் திற!" என்றார் இன்ஸ்பெக்டர்.

தாம் தயங்கினால் அவர்களுக்குச் சந்தேகம் இன்னும் வலு வாகும். அம்மனை மனதாரத் தியானித்துக் கொண்டு கணேச்சாரி கோவில் பூட்டைத் திறந்தார். குற்றமற்றவனோடு தம்மையும் போலீஸார் கைது செய்வார்கள். அதற்கு மேல் என்ன நடக்கும்? தாம் செய்தது சரியோ தப்போ அம்மனுக்குத் தெரியும். அம்மன் தம்மை மன்னித்தால் போதும்.

இன்ஸ்பெக்டர் பாட்டரி லைட்டைப் போட்டு, கோவில் உள்ளே எல்லாம் பார்த்தார். எங்கேயும் மனித உருவே தெரியவில்லை. கணேச்சாரிக்கு ஆச்சரியம் மேலிட்டது. தாம் உள்ளே அனுப்பிய ராஜு என்ன ஆனான்?

தர்மராஜு, இன்ஸ்பெக்டர், போலீசார் யாவரும் போய் விட்டனர். கணேச்சாரி கண்ணை மூடிக்கொண்டு அம்மனை மனதாரத் தியானித்தார். மெள்ள மேலிருந்து கீழே நழுவி

வந்தான் ராஜு. அம்மன் விக்கிரகத்துக்குப் பின்னல் விக்கிர கத்துக்கு மேலே கல்லால் கட்டிய ஜல்லடை போன்ற ஓர் அமைப்பு இருந்தது. மேற் பக்கம் அகலம் ஆறு அங்குலத்துக்கு அதிகமாக இருக்காது. ஆள் மேலே ஏற முடிந்தாலும், அங்கே ஒளிந்து கொள்வதற்குப் பிடி கிடைக்காது. கணுச்சாரி ஆச்சரியமாக அவனைப் பார்த்தார். ராஜு அங்கே அழைத்துச் சென்று காட்டினுன். விக்கிரகத்துக்கு இரண்டு பக்கத்திலும் ஐந்தாறு அடி உயரத்தில் இரண்டு கற்கள் முன்னுக்கு நீட்டிக்கொண் டிருந்தன. அவற்றில் சுருக்குக் கயிற்றைப் போல் தொங்கிக் கொண்டிருந்த வடங்கள் தெரிந்தன. கால்களை ஒரு சுருக்கிலும், கைகளை ஒரு சுருக்கிலும் வைத்து உடம்பைக் கற்பலகையில் நெறுக்கி வைத்தால், தென்படுவது கஷ்டந்தான். ராஜு இந்த மாதிரி நெருக்கடி எப்போதாவது வரலாம் என்று பயந்து இந்த ஏற்பாட்டைச் செய்து கொண்டான். ஆனல் போலீஸ் வந்து எல்லாப் பக்கத்திலும் பாட்டரி லைட்டைப் போட்டுப் பார்த்தபோது, அந்த இரகசிய இடங்கூட அவ்வளவு பாதுகாப்பான இடம் அல்ல என்று ராஜுவுக்குத் தோன்றியது.

''நான் இங்கே இருந்தா உங்களுக்கே ஆபத்து. வீட்டுக்குப் போயிடறேன்'' என்றுன் ராஜு.

''வேணும்பா! இந்தக் கண்டம் தப்பினப்பறம், இதைவிட நல்ல இடம் இருக்காது உனக்கு, ஒளிஞ்சிக்கறதுக்கு. இனிமே இங்கே தேடமாட்டாங்க'' என்றுர் கணுச்சாரி.

ராமி வீட்டுக்குப் போனதுமே புல்லி ஓவென்று புலம்பத் தொடங்கினுள். புதிதாக முளைத்து வந்த ஆபத்து என்ன என்று ராமிக்குப் புரியவில்லை. புடத்தடுவுக்கு ஏதாவது ஆபத்து நடந்து விட்டதோ என்று முதலில் பதறினுள். அழுகையை அடக்கிய படியே புல்லி சொன்னுள் :

''அவன்கிட்டே கூட்டிக்கினு போய்க் காட்டினுங்க.''

''யார் கிட்டே?''

''உங்கய்யா கிட்டே. கூண்டுலே போட்ட புலிமாதிரி இருக்கான்.''

''எங்கே இருக்கான்? சொல்லு, சொல்லேன்!'' என்று பதற்றத் தோடு கேட்டாள் ராமி.

''சொன்ன அவனைக் கொன்னுடுவேன்னுங்க'' என்றாள் புல்லி. ''புடத்தடெக்கூட உசிரோட விடமாட்டாங்க.''

''ஒண்ணும் பயமில்லே, சொல்லு! பண்ணையார் அவசரப்படற ஆளில்லே. எப்படி விடுவிக்கணும்னு யோசிப்பாரு. சொல்லேன், ஒருத்தனை மறைச்சிருக்கிற இடம் தெரிஞ்சா ஏதாவது வழி ஆப் புடும். அவன் எனக்கு மட்டும் ஐயா இல்லியா? அவனுக்கு ஏதா வது வந்தா நான் மாத்திரம் பிழைச்சிருப்பேனா? சொல்லேன்'' என்று நெருங்கினாள் ராமி. மெதுவாக, சொல்லக்கூடாதென்று நினைத்துக்கொண்டே சொல்லிவிட்டாள் புல்லி. ராமி ஓட்டம் பிடித்தாள்.

மல்லி, கங்கப்பா, ராமி எல்லாரும் கோவிலின் பின்னால் கன்னத் துக்கருகில் சர்வசாதாரணமாக உட்கார்ந்திருப்பதுபோல் உட் கார்ந்திருந்தனர். உள்ளே இருந்து ராஜு என்ன செய்ய வேண்டும் என்று அவர்களுக்குச் சொல்லிக்கொண் டிருந்தான். பதாலுக்கு எப்படியாவது செய்தி அனுப்பணும். அவனை மறைத்திருக்கிற ஷெட்டை ஆறு பேர், பயில்வான்கள் போன்றவர்கள் காவல் காத்திருந்தனர். தம் ஆட்களில் ஆண்கள் யார் போனாலும் அந்த ரௌடிகள் முதலில் பதாலுவைத் தொலைத்துவிடுவார்கள். அதனால் புல்லி போனால் நல்லது. ஏக்கத்தினால் வந்ததாக அவர்கள் நினைப்பார்கள். பதாலு இருக்கும் இடத்தை ராஜுவின் ஆட்களுக்குச் சொன்னதாகச் சந்தேகப்படமாட்டார்கள். போய்ப் பதற்றத்தினால் கலாட்டாச் செய்வதுபோல் செய்யவேண்டும். புடத்தடு உயிரோடு இருக்கிறானா என்றே தான் சந்தேகப்படுவ தாகவும், அவனைக் கண்ணாரப் பார்த்தாலொழியப் பதாலுவை நம்ப வேண்டாமென்றும் ஆர்ப்பாட்டம் செய்யவேண்டும். அதற்கு மேல் தர்மராஜு என்ன செய்கிறான் என்று பார்க்க வேண்டும். அவ்வளவு தூரம் விவகாரம் தலைக்கு மேலே போய் விட்டது என்று சந்தேகப்படுவது தவறு. இந்தச் சந்தர்ப்பத்தில் இன்னொரு கொலை செய்யத் துணிய மாட்டார்கள். கங்கப்பாவும், ராமியும் போய்விட்டார்கள். மல்லி மட்டும் அங்கேயே உட்கார்ந் திருந்தாள்.

லட்சுமி கோவிலுக்குப் போகவேண்டும் என்று பிடிவாதம் பிடித்தாள். தனியாக அனுப்புவதற்கு ராமையாவுக்கு விருப்பம்

இல்லை. ரங்கன் போன துக்கத்தில் சூராலு படுத்த படுக்கையாகி விட்டாள். மருமகளைத் துணைக்குப் போகச் சொன்னார் ராமையா.

தன் குடும்பத்தாரின் நல்லது கெட்டதை மல்லியிடம் துவாரத்தின் வழியாகக் கேட்டுக் கொண்டிருந்தான் ராஜு. மல்லி வீட்டு விஷயம் எல்லாவற்றையும் சொன்னாள். அந்தப் பக்கம் கோவில் கதவைத் திறந்துகொண்டு உள்ளே வந்தார் கணுச்சாரி. ராஜு அம்மன் விக்கிரகத்தின் பின்னால் ஒளிந்துகொண்டான். லட்சுமியும் அவள் அண்ணியும் உள்ளே வந்தார்கள். லட்சுமியின் முகத்தை ஒரு தடவை நன்றாகப் பார்க்க வேண்டுமென்று ராஜு விரும்பினான். ஆனால் வெங்கன்னாவின் மனைவி தன்னைப் பார்த்து விட்டால் உயிருக்கே ஆபத்து. லட்சுமி, அம்மன் முன் நீண்ட நேரம் சாஷ்டாங்கமாக விழுந்திருந்தாள். கணுச்சாரி பூஜை செய்தார். பூஜை முடியும்வரை அவள் எழுந்திருக்கவில்லை. கணுச்சாரி தேங்காய் மூடியையும் பூவையும், அம்மன் குங்குமத்தையும் சிறிய கூடையில் வைத்து, ''அம்மா!'' என்று கூப்பிட்டார். லட்சுமி மெதுவாகத் தலையெடுத்துத் தேவி முகத்தைப் பார்த்தாள். மெள்ள எழுந்தாள். அவள் முகத்தை அம்மனின் கைகளின் ஊடே பார்த்தான் ராஜு. அந்த முகத்தைப் பார்த்ததுமே இதயத்தில் ஈட்டி பாய்ந்தது போலிருந்தது. கண்ணில் ஈரம் மட்டும் அல்ல, ஒளிகூட இல்லை. மனம் கல்லாகிவிட்டாற்போல் பற்று, ஆவேசம், ஆசை எல்லாம் ஆவியாகப் போய்ச் சதைப் பிண்டம் மட்டும் மிஞ்சினாற்போல் ஒரு தோற்றம்.

''அம்மன் தயவிருந்தா எல்லாம் நல்லாகும்மா! மறுபடியும் நல்ல நாள் வரும்'' என்றார் கணுச்சாரி, கூடையை அவள் கையில் கொடுத்துக் கொண்டே.

''வராது ஐயா, நல்லவங்கன்னு நினைச்சவங்களே, ஆத்திரத்திலே எதிராளிங்களைக் கொலை செஞ்சிக்கிட்டிருந்தா, இந்த ஊருக்கு இனிமேலே நல்ல நாளு எப்படி வரும்?'' என்று கேட்டபடி லட்சுமி, தட்டைக் கையில் வாங்கிக்கொண்டு போய்விட்டாள். வெளியே வந்து லட்சுமியின் இரண்டு கைகளையும் பிடித்துக் கொண்டு, 'நான் அந்தக் கொலையைப் பண்ணலே. என் பேச்சை நம்பு' என்று சொல்ல வேண்டுமென்று ராஜுவுக்குத் தோன்றியது. ஆனால் கணுச்சாரி அவர்களை வெளியே அழைத்துக்கொண்டு போய் விட்டார். ராஜு உள்ளே இருக்கும் விஷயம் யாருக்காவது கொஞ்சம் சந்தேகம் வந்தாலும், குடி முழுகிப் போகுமென்று அவர் பயந்தார்.

ராஜு பதற்றத்தோடு துவாரத்தின் அருகில் ஓடினன். ''மல்லி'' என்று கூப்பிட்டபின், அந்த அழைப்பு யாருக்காவது கேட்டு விடுமோ என்று மல்லியின் மூச்சு திக்கென்று நின்றுவிட்டது. அப்படியும் இப்படியும் பார்த்தாள். கோவில் மதிலுக்குள் யாரும் இல்லை யென்ருலும், வெளியே ஏரிகரையில் ஆட்கள் திரிந்துகொண் டிருந்தார்கள். கன்னத்தில் முதுகைச் சாய்த்து, சர்வசாதாரணமாக உட்கார்ந்திருப்பது போல் அமர்ந்து, தனக் குத் தானே பேசிக்கொள்வதுபோல் சொன்னுள். ''மெள்ளப் பேசு, வெளியே யெல்லாம் ஆள் இருக்குது.''

ராஜு குரலைத் தாழ்த்திச் சொன்ஞன். ''லட்சிமியைப் பாத்துப் பேசணும்.''

''லெச்சுமி அக்காவையா? வேறே கல்யாணம் நிச்சயமா யிட்டுது லச்சிமிக்கு. எதிரிகள் வீட்லே இருக்கரு லச்சிமி. நீ எப்படிப் பாத்துப் பேசறது அவகிட்டே? அப்படியே பேசினுலும் என்ன லாபம்?''

''யாரையாவது கல்யாணம் பண்ணிக்கட்டும். எங்கேயாவது சுகமா இருக்கட்டும். நான் கொலை பண்ணலேன்னு அவளுக்குத் தெரிஞ்சா போதும்'' என்ருன் ராஜு.

''நான் போய்ச் சொல்றேன்'' என்ருள் மல்லி.

''அதில்லே ராத்திரி கோவிலுக்குக் கூப்பிட்டுவா, எப்படி யாவது. அம்மன் முகத்துக்கு முன்னுல் நான் சொல்லணும். அது வரைக்கும் நம்பமாட்டா.''

மல்லி பேசவில்லை.

''மல்லீ! நீ லச்சிமியைக் கூட்டிட்டு வரல்லேன்ன இந்தக் கோவில்லியே நான் செத்துப் போயிடுவேன்!'' என்ருன் ராஜு. மல்லி யோசித்தாள். எப்படி அழைத்து வருவது என்று அவளுக்கு ஒன்றும் புரியவில்லை. இருந்தாலும் 'சரி' என்று கூறி வீட்டுக்குப் புறப்பட்டாள்.

பதாலு, கால் சுட்டுக்கொண்ட பூனை போல ஷெட்டுக்குள் திரிந்துகொண் டிருந்தான். கண்ணுக் கெட்டாத உயரத்தில் ஷெட்டில் சிறிய ஜன்னல் ஒன்றிருந்தது. ஒன்றும் தோன்ருமல் அதில் ஏறிப் பார்த்தான். தூரத்தில் ஆலமரத்தின் கீழே சீட்டாடிக்கொண் டிருந்தனர் காவல்காரர்கள். பெருமூச்சு

விட்டுக்கொண்டே கீழே இறங்கினான். அவனுக்கு இரவு பகல் வித்தியாசம் தெரிவதில்லை. அங்கே பண்ணையார் என்ன ஆனாரோ தெரியாது. புடத்தடு எங்கே இருக்கிறானோ தெரியவில்லை. இரவு உலகமெல்லாம் ஓய்ந்த பிறகு சந்தேகங்கள் விழித்துக்கொண்டு தூக்கம் வருவதில்லை. பகலில் உலகமெல்லாம் விழித்துக்கொண்டிருக்கும்போது சந்தேகங்கள் அடங்கிப் போகும். அதனால் காலையிலே பழையது சாப்பிட்டதுமே அவனுக்குத் தூக்கம் வந்துவிடும். ஆனால் இன்று அந்த நேரத்திலும் தூக்கம் வரவில்லை. புல்லியின் அழுகையை எவ்வளவுதான் மறக்க முயற்சி செய்தாலும், மறதி வரவில்லை. அது காதுகளில் ஒலித்துக்கொண்டே இருந்தது.

மத்தியான்னம் வெயில் சூட்டுக்குக் கொஞ்சம் கண்கள் கனமாயின. புல்லியின் அழுகை, அவன் காதுகளில் கேட்டுக்கொண்டே இருந்தது. எப்படியோ அவனுக்குத் தெரியாமல் களைத்துப் போன மனம் ஓய்வு கேட்டது. கோழித் தூக்கம் பிடித்தது. அதில் ஒரு கனவு. அந்தக் கனவில் பண்ணையார் லிங்க மடுவில் நீந்திக்கொண்டிருக்கிறார். மடுவு சமுத்திரம் அளவுக்குப் பெருகி விட்டது. சமுத்திரத்துக்கு அந்தப் பக்கம் பெரிய காளி லிங்கம். யாரோ ராட்சசர்கள் புடத்தடுவை ஒரு கல் மேல் தலையை வெட்டுவதற்குப் படுக்க வைத்தார்கள். பண்ணையார் நீந்த நீந்த அலைகள் பின்னுக்கு நெட்டித் தள்ளுகின்றன. அவன் ஆகாயத்தில் இருக்கிறான். கீழே குதிப்பதற்கு முயற்சிசெய்கிறான். மேகங்கள் பிடித்துக் கொள்கின்றன. நகர விடவில்லை. புல்லியை யாரோ இரண்டு பேர் பிடித்துக்கொள்கின்றனர். அவள் ஓவென்று ஓலமிடுகிறாள். அந்த ஓலம் சமுத்திரத்தின் சத்தத்தை மறைத்து விடுகிறது.

அரைத் தூக்கத்தின் கடைசியில் புல்லியின் குரல் ஒன்றுதான் கேட்டுக்கொண்டிருந்தது. மற்றக் காட்சிகள் எல்லாம் கரைந்து விட்டன. அந்தக் குரல் கனவா நனவா என்று கொஞ்ச நேரம் புரியவில்லை பதாலுவுக்கு. கண்ணைத் திறந்து பார்த்தான். வெளியே ஆரவாரம் கேட்டது. அதில் புல்லியின் குரல் தெளிவாகக் கேட்டது. ஒரு குதி குதித்தான், தண்ணீர்ப் பம்பு மேட்டின் மேல். ஜன்னல் சந்து வழியாகப் பார்த்தான். புல்லி அழுதுகொண்டே திமிறிக்கொண்டிருந்தாள். ரௌடிகள் அவளைப் பிடித்துக்கொண்டிருந்தனர்.

''இந்தா, கலாட்டா பண்ணினா எலும்பெ ஒடிச்சிடுவேன். ரெண்டு பேரும் நல்லாத்தான் இருக்காங்கன்னுதான் சொல்றமே, அப்புறம் என்னா?'' என்று சொல்லிக்கொண்டிருந்தான் ஒரு ரௌடி.

''எப்படி நம்பறது? கணக்கர் ஆளுங்களெ எப்படி நம்புவேன்? என் கண்ணுலே பாத்தாத்தான் நம்புவேன்.''

''கத்தனீன்னு களுத்தெ நசுக்கிப்புடுவோம். எங்க விஷயம் உனக்குத் தெரியாது'' என்றான் இன்னொரு ரௌடி.

பதாலு ஜன்னலிலிருந்து கத்தினான்: ''டேய் கேப்மாறிப் பசங்களா! அவனெ வுட்றீங்களா இல்லியா?''

அவர்கள் பிடியிலிருந்து விடுவித்துக்கொண்டு ஷெட்டுக்கிட்டெ வந்து விழுந்துவிட்டாள் புல்லி.

''டேய், புடத்தடு தென்படலேன்னு நான் இனிமே புளெக்க மாட்டேன்டா. அவனெ இதுக்குள்ளேயே என்னவோ பண்ணீட்டாங்கன்னு ஊர்லெ சொல்றுங்கடா எல்லாரும். இன்னும் நீ சிறையிலே எதுக்கு இருக்கணும்? நான் உசிரோட எதுக்கு இருக்கணும்? அவனைப் பார்க்கலேன்னு இங்கேயே செத்துப் போறேன்.''

அவள் பண்ணின ஆர்ப்பாட்டத்தில் பதாலுவின் சந்தேகமும் பதைப்பும் அதிகமாயின. அவன் முகம் சிவந்துவிட்டது. உதடுகள் துடித்தன.

''அவன் உடம்பு மேலே எறும்பு கடிச்சிதுன்னு, இவங்க எல்லாரையும் நறுக்கிப் போட்டுட்றேன் துண்டு துண்டா'' என்றான்.

''டேய், பொம்பளெக்கி புத்தி கெட்டுப் போச்சுன்னு உனக்குக் கூடவா போயிடிச்சி? புடத்தடு ஒரு குறையும் இல்லாமெ இருக்கான்டா. நாங்கதான் சொல்றமே.''

''நான் நம்ப மாட்டேன். இப்பவே புடத்தடுவை எங்க ரெண்டு பேருக்கும் காட்டியாகணும். நீங்க முடியாதுன்னு, இந்தக் கூரையைப் பேத்துட்டாவது வெளியே வந்துடுவேன். அதுக்கப்புறம் என்னானாலும் ஆவட்டும்.''

ரௌடிகள் இக்கட்டில் அகப்பட்டுக் கொண்டார்கள். பதாலுவின் தோரணையைப் பார்த்தால் சொல்ற மாதிரியே செய்துடுவான் போல இருந்தது. பட்டப் பகலில் இப்படிக் கலாட்டா நடந்தால் வயலில் ஜனங்கள் கும்பல் சேர்ந்து விடுவார்கள். வம்பாகப் போய்விடும்.

''டேய் மீரா! நீ உடனே போயி ஐயா கிட்டே சொல்லிட்டுவா, இந்தத் தகராறை எல்லாம். பதாலு! ராத்திரி வரைக்கும் பொறுமையா இரு. புடத்தடைக் கூட்டியாந்து காட்றோம். எங்க பேச்சைக் கேக்காமெ நீங்க யாரு கலாட்டா பண்ணாலும் இந்தத் தடவை நிஜமாகவே புடத்தடு உங்களுக்குத் தக்க மாட்டான்.''

இந்த எச்சரிக்கையைக் கேட்டுப் பதாலுவும், புல்லியும் கொஞ்சம் தாழ்ந்து போனார்கள். கணக்கருக்கு இந்த விஷயத்தைச் சொல்வதற்கு மீரா புறப்பட்டான். புல்லி ஷெட்டுப் பக்கத்திலேயே உட்கார்ந்து கொண்டாள். காவல்காரர்கள் மறுபடியும் சீட்டாட்டத்தில் ஈடுபட்டனர்.

ராமையா சாய்வு நாற்காலியில் உட்கார்ந்து ஆலோசனையில் இறங்கியிருந்தார். ரங்கன் கொலை ஏனோ அசந்தர்ப்பமாகத் தோன்றியது. 'ராத்திரி தனியா எதிர்க்க வந்தா, ராஜு ரங்கனை அடிச்சிருக்கலாம். ஆனா வேணும்னே ஒரு மனுஷனைக் கொல்ற ஆளா ராஜு? அது மட்டும் இல்லே, அவங்க குடிசையிலே ஏன் இருந்தது ரங்கனோட பொணம்? முதல்லே ரங்கன் அர்த்த ராத்ரியிலே வயலுக்கு ஏன் போனான்?' தர்மராஜு, வெங்கன்னா சொன்ன கதை: 'வயல் காவலுக்கு ரங்கன் அன்னைக்கி ராத்திரி போனானும். வேலிக்கு இந்தப் பக்கமே ரோந்து சுத்திக்கிட்டிருந்தானும். சட்டுன்னு ராஜு வேலியை ஒதுக்கிட்டு, ரங்கனைத் தன் பக்கத்துக்கு இழுத்துக்கிட்டுப் போய், வாயடைச்சிட்டு, குடிசைக்கு இழுத்துக்கிட்டுப் போய்க் கொண்ணுட்டானும். கூடப்போன வெங்கடேசு, போத்தராஜு இருவரும் தூரத்திலேருந்து பாத்துட்டு ஓடி வர்றதுக்குள்ளே எல்லாம் முடிஞ்சி போச்சாம்.'

தர்மராஜு பின்னால் இல்லேன்னா ராமையா இந்தக் கதையைக் கொஞ்சம் நம்பியே இருப்பார். 'பகை இவ்வளவு தூரம் வளர்ந்திருக்கறப்போ, வார்த்தைங்க முத்தி அடிதடியிலெ முடியலாம். கோபம் அதிகமாகறப்போ அடி எங்கே படுது எங்கே படலேன்னு தெரியாது. ஆனால் தர்மராஜு எதைச் சொன்னாலும் அதில் கொஞ்சம் நிஜம் இருக்கலாமே தவிர, பெரும்பாலும் பொய்தான் இருக்குமென்று ராமையாவுக்கு அநுபவத்திலெ தெரியும். 'ஆனா ராஜு ஏன் தலைமறவாயிடணும்? அவன் ஆளுங்க கூட அங்கே இருந்திருக்கணும். முக்கியமாய்ப் பதாலு என்ன ஆனான்? போலீசு கிட்டே போய், ஒரு வேளை ராஜுவுக்கு இந்தக் கொலையிலெ சம்பந்தம் இல்லேன்னா ஏன் சொல்லலே?'

சின்னத் தெருச் சாவடியில் எழுந்த கூப்பாடுகள் அவர் சிந்தனையைச் சிதறடித்தன. எழுந்து அந்தப் பக்கம் ஓடினார். மல்லியின் இரண்டு கைகளையும் பிடித்துக் கொண்டு வெங்கன்னா, சரசர

வென்று அவளை இழுத்துக்கொண்டே சின்னத் தெரு வாயிற் படியை நோக்கி ஓடினார்.

''டேய், என்னடா அது?'' என்று கத்தினார் ராமையா.

வெங்கண்ணா மல்லியை விட்டுவிட்டுக் களைப்போடும் கோபத்தோடும் சொன்னார்: ''துக்கம் விசாரிக்கறதுக்கு வந்தாளாம். கழிசடை!''

ராமையா பளாரென்று கன்னத்தில் அறைந்தார். வெங்கண்ணா அதிர்ந்து போய்விட்டார். கல்யாணம் ஆனபிறகு அப்பா தன்மேல் ஒரு நாளும் கை வைத்ததில்லை.

''துஷ்டப் பயலே! பெரிய வீட்டுக் குழந்தை மேலே கை வெக்கறதோட இல்லாமெ வாய்க்கு வந்தபடி பேசறியா?'' என்றார் அவர்.

''சித்தியும், லச்சிமி அக்காவும் எப்படி இருக்காங்களோ பாக்கலாம்னு வந்தேன், வந்தது தப்புதான்'' என்றாள் மல்லி. தலையை நிமிர்த்தி ராமையாவைப் பார்த்தாள். அவள் கண்கள் கலங்கியிருந்ததைப் பார்த்து ராமையா திடுக்கிட்டுப் போனார். மல்லியின் மனம் கலங்கம் இல்லாதது என்பது அவருக்குத் தெரியும். லட்சுமி மேல் அவளுக்கு எவ்வளவு அன்பு என்பதும் தெரியும்.

ஆனால் மகன் மேல் கையை வைத்து, தம் மரியாதைக்குக் குறையைத் தேடிக் கொண்டார் ராமையா. மல்லியின் எதிரில் தம் மகனை அவமானப் படுத்திவிட்டார். மல்லி மெல்ல அடி எடுத்து வைத்துப் போய்க்கொண்டிருந்ததால், நிற்கச் சொல்ல அவரால் முடியாமற் போய்விட்டது.

இந்தத் தகராறை எல்லாம் பால்கனியில் நின்று பார்த்துக் கொண்டிருந்தாள் லட்சுமி. போய்க் கொண்டிருந்த மல்லியை, ''மல்லீ'' என்று கூப்பிட்டாள். மல்லி நின்றாள். சர்ரென்று காற்றுப் போல் வந்தாள் லட்சுமி. மல்லியை நெஞ்சார அணைத்துக் கொண்டாள்.

''வா மல்லி'' என்று அவள் தோள்மேல் கையைப் போட்டு, அப்பாவையும் அண்ணனையும் பார்த்துக் கொண்டே உள்ளே சென்றாள். 'இந்த ஆம்பளெங்க எல்லாம் இவ்வளவுதான்' என்று கூறுவது போல் இருந்தது, அவள் தன் தகப்பனாரைப் பார்த்த பார்வை.

மாடியில் பால்கனியில் நீண்ட நேரம் உட்கார்ந்தார்கள் மல்லியும் லட்சுமியும். அவரவர் சிந்தனையில் அவரவர் மூழ்கிப்போய் உட்கார்ந்திருந்தனர். மனத்தில் இருந்த விஷயங்களை யாரும் வெளியே சொல்ல முடியாமல் தவித்தார்கள். ரங்கன் சாவைக்

குறித்து லட்சுமிக்கு ஆறுதல் சொல்ல வேண்டுமென்று மல்லிக்கு எவ்வளவோ ஆவல். மல்லிக்குத் தன் வீட்டில் நடந்த அவமானத்துக்குத் தான் சமாதானம் சொல்ல வேண்டுமென்று லட்சுமிக்கு ஆசை. கடைசியில் லட்சுமி சொன்னாள்:

''எனக்குக் கல்யாணம் நிச்சயம் பண்ணிட்டாங்க, தெரியும் இல்லையா?''

''அத்தான் என்னைப் பண்ணிக்கிறேன்னார்'' என்றாள் மல்லி.

''நல்லதுதானே'' என்று சொல்லிவிட்டாள் லட்சுமி. உடனே நினைவுக்கு வந்தன, ராஜு மேல் கொலைக்குற்றம் இருப்பதும், அவன் தலைமறைவாகப் போய்விட்டதும். இதயத் துடிப்பு நின்று விட்டது. அவனுக்காக அல்ல, மல்லிக்காக.

''என்னைப் பண்ணிக்க வேணும்னு உறுதியாச் சொல்லிட்டேன், இந்தத் தகராறெல்லாம் வர்றதுக்கு முன்னாடியே'' என்றாள் மல்லி. லட்சுமியின் இதயம் காரணம் இல்லாமல் அடித்துக் கொண்டது. எங்கோ அதள பாதாளத்தில், ஆழக் கிணற்று ஆமையைப் போல ஓர் அசட்டு எண்ணம், ராஜு இன்னமும் தன்னைக் கைவிட்டு விடவில்லை என்ற ஆசை. மல்லிக்கு, ராஜு என்றால் எவ்வளவு ஆசை என்பது லட்சுமிக்குத் தெரியும். மல்லி, தனக்கு இந்தக் கல்யாணம் வேண்டாமென்று சொல்லியது லட்சுமிக்காகத்தான். அதுவும் லட்சுமிக்குத் தெரியும். லட்சுமியின் கண்கள் கலங்கின. தனக்கு வேண்டியவர்களுக்காக, சிறிதும் ஆடம்பரம் இல்லாமல் மல்லியால் தியாகம் செய்ய முடியும். ஆனால் அவள் தியாகமெல்லாம் வீண்தான். தனக்கும் ராஜுவுக்கும் இடையிலே இப்போது ஒரு சமுத்திரமே ஏற்பட்டு விட்டது. தனக்கு இன்னொரு சம்பந்தம் நிச்சயமாகி விட்டது. ரங்கன் கொலை பெரிய மலைபோல இருவரையும் பிரித்து விட்டது.

''அக்கா! உனக்கு ஒரு விஷயம் சொல்லணும்னு வந்தேன்'' என்றாள் மல்லி. லட்சுமி ஒன்றும் பேசவில்லை. ''ராத்திரி பத்து மணிக்கு அம்மன் கோவிலுக்கு வா.''

''ராத்திரியா! அம்மன் கோவிலுக்கா?''

''அக்கா! உன் உயிருக்கு நான் பொறுப்பு. எப்படியாவது வரணும்.''

மல்லி புறாப்போல மாடியிலிருந்து கீழுக்குப் பறந்தாள். வந்த வேலையை அவள் முடித்து விட்டாள். லட்சுமிக்கு எத்தனை சந்தேகங்கள் இருந்தாலும் தான் அவ்வளவு உறுதியாகச் சொன்ன பிறகு வராமல் இருக்க மாட்டாள் என்று மல்லிக்குத் தெரியும். அதனால் அவள் மனம் லேசாயிற்று.

படியிறங்கிக் கீழே வந்தாள் மல்லி. லட்சுமி அவளைப் பின் தொடரவில்லை. மாடி மேல் அறை வாயிலில் நின்றிருந்தாள். மல்லி உடனே வெளியே போகவில்லை. தெற்குப் பக்கம் இருந்த பெரிய அறைக்குள் போனாள். உள்ளே சூராலு படுத்திருந்தாள். நூறு நாள் விரதம் இருந்தவள் மாதிரி அவள் இளைத்து விட்டாள். மல்லி, அவள் பக்கத்தில் சென்று உட்கார்ந்தாள். தலைப்பக்கம் உட்கார்ந்திருந்த மருமகள், மல்லியைப் பார்த்ததுமே முகத்தைச் சுளித்துக்கொண்டு எழுந்து போய்விட்டாள்.

"எவ்வளவு மெலிஞ்சிட்டே சித்தி?" என்றாள் மல்லி.

அந்தச் சமயத்தில் மல்லி எதிராளி வீட்டுப் பெண் என்றோ, ரங்கனைக் கொலை செய்த ராஜுவுக்கு மிகவும் வேண்டியவள் என்றோ சூராலுவுக்குத் தோன்றவில்லை. மல்லியின் குரலில் அத்தனை இரக்கமும், அக்கறையும் தொனித்தன. மல்லிக்குப் பகைவர்கள் கிடையா. அதனால் மல்லியை யாரும் பகையாளி என்று நினைக்க முடியாது.

"பத்து நாளு பச்சைக் குழந்தையைப் பக்கத்திலெ போட்டுக்கினு வளர்த்தேன்" என்றாள் சூராலு. பொலபொல வென்று கண்ணீர் விட்டாள். நடுங்கும் அந்தம்மாளின் உடல் மேல் மல்லி கையை வைத்து நீவினாள். லட்சுமி மெள்ள படியிறங்கி வந்தாள். லட்சுமியால் ஆறுதல் அளிக்க முடியவில்லை, அம்மா வுக்கு. அவள் மனத்தில் ராஜு, அப்பா, போய்விட்ட ரங்கன், ஊர் இப்படி எல்லார் மேலுமே கோபம் இருந்தது. மல்லியின் மனத்தில் அத்தகைய எந்த ஆத்திரமும் இல்லை. எவ்வளவு இனிய மனசு மல்லியின் மனசு? செத்துப் போன ரங்கன் மேலும், சாகடித்த ராஜுவின் மேலேயும் அவளால் இரக்கப்பட முடியும். ராஜு எவ்வளவு அட்டூழியம் செய்தாலும், அவர் மேலே ஓர் ஈ உக்கார விடமாட்டாள். ஆனால் அவர் பகைவர்களிடம் அவளுக்குக் கடுகத்தனை விரோதமும் கிடையாது. மெள்ள சூராலுவை நீவிக் கொண்டே சொன்னாள் மல்லி; "அம்மனுக்கு ஊர் மேலே தயவில் லாமப் போயிட்டுது சித்தி. இன்னும் எத்தனை பேரு சாவணுமோ? எத்தனை பேரு பொழப்பு ஆத்துலே போகணுமோ?"

பெருமூச்சு விட்டுக்கொண்டே எழுந்தாள் மல்லி. அவள் எழுந்ததும் லட்சுமி, அம்மாவின் பக்கத்தில் உட்கார்ந்தாள். மல்லி நீவிய இடத்தில் அம்மா மேல் கை வைத்தாள். ஏனோ என்றும் இல்லாத அளவு லேசாய் விட்டது லட்சுமியின் மனசு.

**ரா**மையா காரில் பட்டணம் புறப்பட்டார். ராஜு டிராக்டர் எரிந்த கேஸில் அவரைச் சாட்சியாகப் போட்டிருந்தார் ராஜுவின் வக்கீல். தர்மராஜுவும் வெங்கன்னாவும் வேலை இருப்பதாகச் சொல்லி நின்று விட்டனர்.

பட்டப் பகலில், பகிரங்கமாக மங்கி வீட்டில் தர்மராஜுவும் வெங்கன்னாவும் கூட்டம் போடுவது அதுவே முதல் தடவை. எல்லாருக்கும் தெரிந்த ரகசியந்தான் என்றாலும், கொஞ்சம் ஒளிவு மறைவிருந்தது இதுவரையில். கூட்டம் எப்போதும் இரவில்தான் நடந்து கொண்டிருந்தது. மங்கி வீட்டுக்கு இரவு நேரத்தில் யார் போனாலும் பெரிய தப்பாக நினைக்காது ஊர். பட்டப் பகலில் போனால் மூக்கின் மேல் விரலை வைத்துக் கொள்ளும். ஊரைப் பொறுத்த நியமப் பட்டியலில் அது எழுதி வைக்கப்பட்ட முதல் விதி.

இந்த மிக அவசரக் கூட்டத்துக்கு இரண்டு காரணங்கள்.

பதாலுவும் புல்லியும் அதிகத் தகராறு பண்ணுவதாகவும், அந்த ராத்திரியாவது புடத்தடுவைக் கூட்டிப் போய் அவர்களுக்குக் காட்டினால் ஒழிய அவர்களைச் சும்மா இருக்கவைப்பது கடினமென்றும், அக்கம்பக்கத்து ஆட்கள் கூட்டம் சேர்ந்தால் பதாலுவை ஷெட்டில் ஒளித்து வைப்பது முடியாதென்றும் மீரா வந்து சொன்னான். அத்துடன் மற்ற ரௌடிகள், பதாலு வாயை மூடிக்கொண்டு கிடந்தால் காவல் காப்பார்களே தவிர, போலீஸ் கேஸ் வரும் நிலை வருமானால் ஷெட்டை விட்டுவிட்டு ஓடி விடுவார்கள். அத்துடன் பேசியபடி பணத்தைத் தர்மராஜு அவர்களுக்குக் கொடுக்கவில்லை. முதலில், செய்வதே தகாத வேலை. சமயத்துக்குப் பணம் கையில் விழவில்லையென்றால், பிறகு வரும் என்ற நம்பிக்கையில் வேலை நடக்காது. திருடனைத் தேள் கொட்டியதுபோல் பேசாமல் இருக்க வேண்டியதே தவிர, பெரிய மனிதர்களிடம் போய்ச் சொல்லிக் கொள்வதற்கும் வழியில்லை.

தர்மராஜு அசந்து விட்டார். வெங்கன்னாவிடம் இந்தக் காவல் விஷயத்துக்காகத் தாம் வாங்கிக்கொண்ட தொகையில் பாதியை ஜேபியில் போட்டுக் கொண்டது உண்மைதான். ஆனால் ரௌடிகளுக்குக் கொடுப்பதாக ஒப்புக்கொண்ட தொகையை அணா பைசா உட்பட லிங்கையா கையில் கொடுத்தனுப்பினார். வெங்கன்னா எதிரில் காவல்காரருக்கு எவ்வளவு கிடைத்தது, எவ்வளவு கிடைக்கவில்லை முதலான சர்ச்சைகள் எழுந்தால், தம் திருட்டு வெளிப்பட்டுவிடும். லிங்கையாவையும் மீராவையும்

எதிரில் வைத்துக்கொண்டு, வெங்கன்னு இல்லாதபோது இந்த விஷயத்தைத் தீர்க்க வேண்டும். செய்தி தெரிந்ததும் புறப்பட்ட போது, அவர் வீட்டுக்கு வெங்கன்னு வந்தார். பதாலு தகராறு செய்யும் விஷயம் தெரிந்ததும் தாமும் புறப்பட்டார் மங்கி வீட்டுக்கு.

"நீ எதுக்குப் பட்டப்பகல்லே அங்கே?" என்றுர் தர்மராஜு.

"எதுக்குன்னு, அவன் செய்யற கலாட்டாவிலே விஷயம் தெரிஞ்சுட்டா அப்பா தோலே உரிச்சிடுவார். இன்னேக்கு அப்பா பட்டணம் போயிருக்கருர். அதனுல் போகலாம்" என்றுர் வெங்கன்னு.

காவல்காரருக்குக் கொடுக்க வேண்டிய பணத்தில் தம் கமிஷன் விஷயம் வெங்கன்னு எதிரில் வெளியாகக் கூடாது. தாம் அந்த மாதிரி ஆள் என்று வெங்கன்னுவுக்குத் தெரியாது என்பதல்ல. இந்த விஷயத்தில் மட்டும் தமக்குப் பண ஆசை இல்லேயென்று நம்பினுல் தவிர, வெங்கன்னு மீண்டும் பணம் தரமாட்டார். ஆகவே இந்தப் பேச்சை மீரா அவர் எதிரில் எடுக்கக் கூடாதென்று அம்மனே மனதாரத் தர்மராஜு வேண்டிக் கொண்டார்.

தர்மராஜு முகத்தில் செருப்படி போல் பட்டது, மங்கியின் காதில் ஜொலித்த வெள்ளேக் கல் கம்மல். மங்கி பல நாட்களாக அதற்காக ஆசைப்பட்டுக் கேட்டுக் கொண்டிருந்தாள். 'நாளேக்கி, நாளன்றைக்கு' என்று வாய்தா போட்டுக் கொண்டிருந்தார் தர்மராஜு. கொடுக்க மாட்டேன் என்று சொல்ல மாட்டார், ஆனுல் கொடுக்க மாட்டார். இந்த விஷயம் மங்கிக்குத் தெரியும். அதனுல் வேறொரு விதமாகத் தன் ஆசையைத் தீர்த்துக் கொண்டாள் மங்கி. லிங்கையாவைத் தூண்டிவிட்டு, அருகில் சேர்த்துக் கொஞ்சியும், ஆசை காட்டியும், தூரத்தில் துரத்தியும், கடைசியில் வெள்ளேக் கம்மல் ஜோடியைப் பணயமாக வைத்தாள், அவன் ஆசையைத் தீர்த்துக் கொள்வதற்கு. இருந்தாலும் தர்மராஜுவுக்கு உண்மை தெரிந்தாலும் தப்பு தன் மேல் விழக் கூடாது. ஆகவே வெங்கன்னுவிடம், "பாத்தீங்களா! எங்க கணக்கரையா கொடுத்தாரு" என்று வெங்கன்னுவுக்குக் காட்டினுள் மங்கி. தர்மராஜு முகம் கறுத்து விட்டது. அவசர வேலே இருப்பது போல நழுவி விட்டான் லிங்கையா, அப்பா தன் பக்கம் திரும்பவே. தர்மராஜு முகம் சுளிப்பதை மங்கி பார்த்தாள். கம்மலேக் காட்டிக் கொண்டே, "அப்படிப் பாக்கறீங்களே என்ன? நல்லா இல்லியா? என்னவோ போங்க. இந்த மாதிரி சரக்குலே நல்லது கெட்டது எனக்கு என்ன

தெரியும்? இருந்தாலும் அந்த அப்பாவிப் பையனையா அனுப்பறது இதை வாங்க, பட்டணத்துக்கு?'' என்றாள். மிகச் சாமர்த்தியமான கதையொன்றைப் பின்னிக்கொண்டே.

மீராவுக்குக் கொடுக்கச் சொல்லி லிங்கையாவிடம் கொடுத்த பணத்தில் பாதி என்ன ஆயிற்று என்று தர்மராஜுவுக்குப் புரிந்து விட்டது.

ராமியிடம் உதை வாங்கிய அந்த இரவு மங்கி மிகவும் தொந்தரவு செய்தபோது, தர்மராஜு அவளைச் சமாதானப் படுத்த எத்தனையோ சத்தியங்கள் செய்தார். மங்கியை விட, தற்போதைய நிலையில், மங்கி வீடு அவருக்கு மிகவும் தேவைப் பட்டது. ரங்கன் கொலைக்குப் பிறகு, மங்கி வீட்டைக் காட்டிலும் நல்ல காரியாலயம் அவருக்குத் தென்படவில்லை. முக்கியமான ஆலோசனைகள், முடிவுகள் எதிரிகளுக்கு மட்டும் இல்லாமல், ராமையாவுக்கும் தெரியக் கூடாது. அதனால் மங்கிக்கு எத்தனையோ சத்தியங்கள், வாக்குறுதிகள் எல்லாத் தெய்வங்கள் மேலேயும் அளித்தார், தன் ஒரு மகன் மேல் தவிர. மங்கி மிகவும் புத்திசாலித்தனமாகச் சூழ்நிலையைப் பயன்படுத்திக் கொண்டாள் என்று எண்ணினார் தர்மராஜு. வெங்கன்னா எதிரில் நடந்தது வெளியானால் தம் நிலை தாறுமாறாய்விடும். ஆகவே காவல்காரர் களுக்குச் சேரவேண்டிய தொகையை மீராவிடம் கொடுத்து விட்டார்.

வெங்கன்னா, தர்மராஜு, மீரா மூவரும் நீண்டநேரம் என்ன செய்வதென்று கலந்து பேசினார்கள். ராஜு போலீசுக்கு அகப்பட்டு, கேஸ் விசாரணைக்கு வரும் வரையில் பதாலுவை வெளியே விடக்கூடாது. புடத்தடு மேல் அவனுக்கு எவ்வளவு தான் ஆசையிருந்தாலும், புல்லி எவ்வளவுதான் ஆர்ப்பாட்டம் பண்ணினாலும், எஜமான் மேல் விசுவாசம் எப்போதாவது அவனுள்ளே தலையெடுக்கும். அந்த நிமிஷம் போலீசுக்குப் போய் உண்மையைச் சொல்லிவிட்டால், ராஜு மேல் வழக்கே இல்லாமல் போகலாம். அது ஒன்று மட்டும் ஆபத்து இல்லை. பதாலு சொல்வதை மட்டும் ராமையா நம்பிவிட்டால், நம்புவதற்கு வாய்ப்புகள் இல்லாமல் இல்லை, தர்மராஜு ஊரைவிட்டுப் போய் விட வேண்டியதுதான். ஆகவே பதாலுவைப் பாதுகாப்பாக அங்கேயே வைத்திருக்க வேண்டும். புடத்தடு உயிரோடு இருக் கிறான் என்ற நம்பிக்கை வந்தாலொழிய, பதாலு இனிச் சும்மா இருக்க மாட்டான்.

''பதாலே அங்கேயே கொண்ணுப் புதைச்சுட்டா?'' என்றான் மீரா.

மீராவுக்கு ஓர் உயிரை வாங்குவது மிகவும் சாதாரணமான விஷயம். இதுவரையில் அவன் யாரையும் கொன்றதில்லை. ஆனால் அது அவன் தப்பல்ல. அவன் கையில் மரண அடிகள் வாங்கியவர்களுக்குப் பூமியில் கொடுப்பனை இருந்ததால் பிழைத்துப் போனார்கள். ஆனால் அவனுக்கு ஜெயிலுக்குப் போவதென்றால் மிகவும் வெறுப்பு. ஆகவே அவன் என்ன செய்தாலும் இதுவரையில் ரகசியமாகவே செய்து வந்திருக்கிறான். இரண்டு மூன்று முறை ஜெயிலுக்குப் போய்க் கடுங்காவல் அநுபவித்திருக்கிறான். அதுவும் அவன் தப்பல்ல. அவன் கூட்டாளிகள் பயந்து போய் அவன் இரகசியத்தைப் போலீசுக்குச் சொல்லிவிட்டார்கள். அந்தக் கூட்டாளிகள் மேல், ஜெயிலிலிருந்து வெளியே வந்ததும், பகை தீர்த்துக் கொள்ள வேண்டுமென்று முயற்சி செய்தான். ஆனால் அவர்கள் எல்லாம் ஊர் பேர் தெரியாமல் மாயமாகப் போய்விட்டார்கள். அதற்குப் பிறகு அவன் கூட்டாளிகளைச் சேர்த்துக் கொண்டு தன் காரியங்களை நிறைவேற்றுவது அவ்வளவு நல்லதல்ல என்று முடிவு செய்துகொண்டு, கொஞ்சம் துணிச்சலும் சாமர்த்தியமும் தேவையான வேலைகளைத் தனியாகவே கூலிக்குச் செய்து கொண்டிருந்தான். பதாலுவைக் கொன்றுவிட்டால் தன் வேலை முடிந்துவிடும், வரவேண்டிய தொகை கைக்கு வந்துவிடும். புதிய வேலை ஏதாவது ஏற்றுக் கொள்ளலாம். ஓடிப்போன ராஜு எப்போது கிடைப்பானோ, அவன் மேல் கேஸ் எப்போது போடுவார்களோ? இது நிச்சயமாகத் தெரியாத விஷயம்.

ஆனால் அதற்கு வெங்கன்னாவும் தர்மராஜுவும் ஒப்புக் கொள்ளவில்லை. ஒரு கொலை நடந்து ஒரு வாரங்கூட ஆகவில்லை. இன்னொரு கொலை உடனே நடந்தால், ஒரே அமளி ஆகிவிடும். அதோடு, புல்லியைக் கூட்டிப் போய்ப் பதாலுவைக் காட்டியாய் விட்டது. மறுநாள் அவள் திரும்ப ஷெட்டுகிட்டே வந்ததைப் பார்த்தால், இன்னும் எத்தனை முறையானாலும் வந்துகொண்டே இருப்பாள். பதாலு தென்படவில்லை என்றால் ஆர்ப்பாட்டம் பண்ணுவாள். இதையெல்லாம் யோசித்து, அன்றிரவு இரகசியமாகப் புடத்தடுவைக் கொண்டு போய் இரண்டு பேருக்கும் காட்டுவதே நல்லதென்று தர்மராஜுவும் வெங்கன்னாவும் முடிவு செய்தனர்.

லட்சுமி பால்கனியில் நீண்ட நேரம் உட்கார்ந்திருந்தாள். இருட்டு, பால்கனியில் படர்ந்திருந்த மாலதிக் கொடியின் இலை களின் மேல் மங்கலாக மின்னியது. மல்லி தன்னைக் கோவிலுக்கு வரச் சொன்னாள். தவறாமல் வரச்சொன்னாள். மல்லியின் அழைப் புக்கும் ராஜுவுக்கும் ஏதோ சம்பந்தம் இருக்கிறதென்று லட்சுமி யின் அந்தராத்மாவில் ஒரு சந்தேகம் எழுந்தது. ராஜுவை நினைக்கும்போதெல்லாம் வெளியிருட்டு அவள் சருமத்தின் வழி யாக உடம்புக்குள் பரவுகிறது. சுவர்க்கோழிகள், உள்ளேயும் வெளியேயும், வேறொன்றும் கேட்காதபடி சத்தம் போட்டுக் கொண்டிருந்தன. 'சே, ராஜுவுக்கும் இந்த அழைப்புக்கும் சம்பந்தம் இல்லே. எல்லாம் தெரிஞ்ச மல்லி ராஜுவைப் பாக்கற துக்கு வரச் சொல்வாளா? ராஜு கண்ணில் பட்டால் தான் உயிரோடு இருக்க முடியுமா? முதலில் ராஜு எங்கிருக்கிறானோ? மல்லிக்குத் தெரியுமா? ராத்திரி நேரத்திலே ஊர் அடங்கின பிறகு தான் எப்படி வீட்டை விட்டுப் போக முடியும்? போக முடியாது. போகக் கூடாது. மல்லி வரச் சொன்னாள், தவறாமல் வரச் சொன்னா. போவலேன்னா எப்படி? போகணும். போய்த்தான் ஆகணும். என்ன ஆனாலும் சரி, போகணும். போகக்கூடாது.'

சுவர்க்கோழிகள் சுருதியை அதிகமாக்கி, காதுகளை அடைத்து விட்டன. அருகே எங்கேயோ மாவு மெஷின் மிக வேகமாக வேலை செய்வது போல் சத்தம் கேட்டது. ஏதோ இருட்டுத் திரையில் சின்னக் கிழிசல். சின்னத் தெருச் சாவடி கதவுக்குப் பின்னால் கதவளவு வெளிச்சக் கிழிசல் கொஞ்சம் தெருவும், எதிர்ப் பக்கத்து வீட்டுத் திண்ணைகளும் அந்தக் கிழிசலில் தென் பட்டன. ஏதோ ஓர் உருவம் வெளிப்பக்கம் சென்றது. மறுபடியும் இருட்டு; லட்சுமி பால்கனியில் எழுந்து நின்றாள்.

சின்னத் தெருச் சாவடி ஒட்டி மதிற் சுவர். அந்தப் பக்கம் சின்னத் தெரு. மங்கலான வெளிச்சத்தில் ஓர் உருவம் விடுவிடு வென்று நடந்து கிணற்றுச் சுவர் பின்னால் மறைந்துவிட்டது. அந்த உருவம் ஒரு விநாடியே தெருவில் தென்பட்டது. தன் அண்ணன் வெங்கன்னா உருவம் தெரியாமற் போனாலும் நடையி லிருந்து அடையாளம் தெரிந்து கொண்டாள் லட்சுமி. லட்சுமிக்கு நெஞ்சு அடித்துக் கொண்டது. 'அண்ணா அர்த்த ராத்திரியிலே எங்கே புறப்பட்டார்? மல்லி அழைச்சதுக்கும் அண்ணா போவதற் கும் ஏதோ சம்பந்தம் இருக்குது. ராஜுவுக்கும் மல்லி அழைச்ச துக்கும் சம்பந்தம் இருக்குது. ராஜுவுக்கு ஏதாவது ஆபத்து வரப்

போகிறதோ? கோவிலருகில் ராஜுவுக்கு என்ன வேலை? கோவில் அருகில் தன்னை ஏன் வரச்சொன்னு மல்லி? ராஜுவுக்கு ஆபத்து வரப் போகிறதுன்னு மல்லிக்கு எப்படித் தெரியும்? தன் அண்ணு ராத்திரி வேலையிலே வீட்டைவிட்டுப் போவார்ன்னு மல்லிக்கு எப்படித் தெரியும்? ராஜு—ராஜு—ராஜு!' அவள் மனத்திலும் இருட்டிலும் கோவில் நிறைந்துவிட்டான். 'இந்தக் கணத்திலே ராஜு கோவிலருகில் இருப்பாரா? அண்ணு அங்கேதான் போகிருரா? அன்னைக்கு ராத்திரி ரங்கனும் ராஜுவும் சந்திச் சாங்க. ரங்கன் செத்துப் போயிட்டான். இன்னைக்கி ராத்திரி அண்ணுவும் ராஜுவும் சந்திச்சா...'

விடுவிடுவென்று படியிறங்கிளுள் லட்சுமி. ஒவ்வொரு படியும் பழக்கமானதுதான். அதனுல் எவ்வளவு வேகமாக இறங்கினுலும், கால்கள் தடுமாறவில்லை. லட்சுமி திண்ணைக்கு வந்தாள். காவல் படுக்கும் திண்ணைமேல் போத்துக்காடு இல்லை. அப்பா பட்டணம் போயிருக்கிருர். அவர் கட்டில் காலியாக இருந்தது. கதவைக்கூட மூடாமல் வேகமான காற்றைப் போலப் போய்விட்டாள்.

சின்னத் தெருச் சாவடிக் கதவைத் திறந்து, தெருப் படிகளைத் தாண்டியதும் இருட்டுப் பிசாசுபோல் மிரட்டியது. ஒரு விநாடி மலைத்து நின்றுவிட்டாள். நெஞ்சில் சுவர்க்கோழிகள் ஆரவாரத் தோடு கத்திக் கொண்டிருந்தன. இனம் தெரியாத கவலை கால்களை விரட்டியது. அங்கே ஏதோ ஆபத்து நடந்துவிடப் போகிறது என்ற கவலை. ராஜு கண்ணில் பட்டால், 'தான் பிழைக்க முடியுமா?' என்ற திகில் தடை போட்டது. மனம், 'அவரைப் பார்க்க வேண்டாம். பேசவேண்டாம். அவரைத் திட்டவும் வேண்டாம். பின்னுக்குத் திரும்பு' என்றது. கால்கள் முன்னுக்குக் கொண்டு சென்றன.

கோவிலுக்குப் பின்னல், அதையொட்டி இருக்கும் மேட்டின் சரிவில் ஒரு பெரிய புளியமரம் உண்டு. அடிமரத்தில் சாய்ந்து கொண்டு கும்மென்ற இருட்டில் கங்கப்பாவும் ராமியும் உட்கார்ந் திருந்தார்கள். அவர்கள் இருவரும் கோவிலுக்குக் காவல். ஊரிலிருந்து வரும் வழியைக் கங்கப்பா கவனித்துக் கொண்டிருந் தான். பட்டணத்திலிருந்து வரும் சாலையை ராமி கவனித்துக் கொண்டிருந்தாள். ஒருவர் முதுகை இன்னெருவர் முதுகில் சாய்த்துக் கொண்டு உட்கார்ந்திருந்தனர். கங்கப்பாவுக்கு அந்த இருட்டில் ராமி மேல் சாய்ந்து கொள்வதற்கு எப்போதும் இல்லாத தெம்பு வந்துவிட்டது. அவனுடைய அசட்டுத் தெம்பை

நினைத்து ராமி சிரித்துக் கொண்டாள். கொஞ்சம் முன்னடி குனிந்தாள். கங்கப்பா பின்னடி சாய்ந்திருந்த கனத்தோடு அவள் முதுகு மேல் தடுமாறி விழுந்து விட்டான். மெள்ளக் கீச்சுக் கீச்சென்று சிரித்தாள் ராமி. அந்தச் சிரிப்பு மிகவும் அழகாகப்பட்டது கங்கப்பாக்கு. சரியாக உட்கார்ந்து கொண்டான். ராமியை அலாக்காகத் தூக்கித் தன் மடியில் இழுத்துப் போட்டுக் கொண்டான்.

''ஐயோ! சின்னப் பண்ணையார்க்கு எவ்வளோ தகிரியம்!'' என்றுள், ராமி, உடம்பை வளைத்து எழுந்திருக்காமலே. கங்கப்பாவின் இதயம் தொண்டையில் கார்க் மாதிரி அடைத்துக் கொண்டது. கண்கள் உணர்ச்சித் துடிப்பில் குருடாகிவிட்டன. இளங்குளிரில் வேர்வை உடம்பெல்லாம் வழிந்தது.

''யாரோ வர்றுங்க'' என்றுள் ராமி, சட்டென்று எழுந்து உட்கார்ந்துகொண்டே.

கங்கப்பாவின் உணர்ச்சித் துடிப்பு சில்லிட்டுவிட்டது. ஏரி கரைப் பக்கம் பார்த்தான். நண்ணீரில் பளிச்சிடும் வான வெளிச்சத்தைப் பிளந்துகொண்டு, கால்கள் தடுமாற ஓடிவந்து கொண்டிருந்தது ஊர்ப்பக்கத்திலிருந்து ஓர் உருவம். கங்கப்பா எழுந்திருக்கப் போனுன். ராமி பிடித்துக் கொண்டாள்.

''லச்சம்மா'' என்றுள் ராமி மெள்ள. கங்கப்பா நெஞ்சம் நிம்மதி அடைந்தது.

தன்னை யாரோ துரத்திக் கொண்டு வருவதுபோல் திறந்திருந்த கோவில் வெளி வாயிற்படிக்குள் ஓடினுள் லட்சுமி. திடீரென்று மல்லியின் கைகள் அவளை அணைத்துக் கொண்டன. என்றும் அநுபவித்தறியாத அமைதி எதிர்பாராமல் பரவியது லட்சுமியின் மனத்தில். கொஞ்சம் நடுக்கம் தீர்ந்தபின் சுற்றிலும் பார்த்தாள். பொன்னரளிப் பூக்களின் மேல் மிக அவசர வேலையில் மூழ்கிப் போயிருந்தன பொன் வண்டுகள்.

''எவ்வளவு நல்லாயிருக்கு இங்கே?'' என்றுள் லட்சுமி.

மல்லி அணைப்பை விடுவிக்காமலே கோவில் மதிற்கதவை மூடித் தாளிட்டாள்.

''வா!'' என்றுள் மல்லி அமைதியாக. இரண்டு பேரும் கோவிலுக்குள் போனுர்கள், ஒருவர் கையால் இன்னெருவரைத் தழுவியபடி.

சிறிய அகல் விளக்கொன்று அம்மன் முன்னுல் எரிந்துகொண்டிருந்தது. தேவி பாவம் ஏதும் இல்லாமல் அவர்கள் இருவரையும்

பார்த்தாள். பக்கத்தில் திண்ணை மேல் உட்கார்ந்திருந்த கணுச்சாரி எழுந்தார். கோவில் கதவை மூடினார்.

ராஜு அம்மன் விக்கிரகத்துக்குப் பின்னாலிருந்து வெளியே வந்தான். லட்சுமி அசந்துபோய் விட்டாள். அவன் முகத்தி லிருந்து பார்வையை அவளால் திருப்ப முடியவில்லை. ராஜு அவளையே பார்த்துக்கொண்டு நின்றான். இருவரும் சில யுகங்கள் மரங்கள் போல அசைவற்று ஒருவரை ஒருவர் பார்த்துக் கொண் டிருந்தனர்.

''லட்சுமீ!'' என்றான் ராஜு. லட்சுமி பார்வையைப் பக்கத் தில் திருப்பிக் கொண்டாள், அதற்கு மேல் அவனைப் பார்க்க முடி யாமல். ராஜுவின் முகத்தில் எத்தனையோ வருஷத்துத் திகிலும் வேதனையும் பிரதிபலித்தன. லட்சுமி முதுகில் மெதுவாக நீவியபடி மல்லி நின்றிருந்தாள்.

''ரங்கனை நான் கொல்லலே. எப்படிச் செத்தான்னுகூட எனக்குத் தெரியாது. குடிசையிலே போய்ப் பாக்கறப்போ விழுந்து கிடந்தான்'' என்றான் ராஜு.

லட்சுமி அவனைப் பார்த்தாள். ராஜு என்றும் பொய் சொல்ல மாட்டான் என்பது அவளுக்குத் தெரியும். ராஜு ரங்கனைக் கொல்லவில்லை என்பதும் லட்சுமியின் அந்தராத்மா வுக்குத் தெரியும். லட்சுமியின் பார்வை ராஜுவை முதலில் கலக்கிவிட்டது.

''லட்சுமீ!'' என்றான் ராஜு கெஞ்சும் குரலில்.

ஒருவர் அணைப்புக்குள் ஒருவர் எப்படி வந்தார்களோ இரு வருக்குமே தெரியாது. பக்கத்தில் மல்லி, கணுச்சாரி இருப்பதை கூட இருவரும் மறந்துவிட்டார்கள். ராஜு மார்பில் குடம் கவிழ்ந்தாற்போல் கண்ணீரைக் கொட்டினாள் லட்சுமி. இத்தனை நாட்கள் உறைந்து போயிருந்த உணர்ச்சிகள் எல்லாம் உருகி அவளை அலைக்கழித்துவிட்டன. மனத்தில் இருந்த வேதனைக்கு இத்தனை நாட்களுக்குப் பிறகு விடுதலை கிடைத்தது. ராஜு அவளை அணைத்து வருடியபடியே ஏதேதோ சம்பந்தம் இல்லாததை எல்லாம் சொல்லிக்கொண்டிருந்தான். புளிய மரத்தின் பின்னால் அவள் முகம், நெட்டிப் புதர்கள் பக்கத்தில் ஏரிகரையில் அவள் யாருக்கும் தென்படாமல் உட்காரும் இடம், தன் புது வீடு, வயல்கள் நடுவே வேலி எல்லாம் அவன் மனக் கண்ணில் தெரிந்தன. அவன் வார்த்தைகளில் அர்த்தம் இல்லை, உணர்ச்சிக் கொந்தளிப்பு ஒன்றே இருந்தது.

அணைப்பில் சிக்குண்டிருந்த இருவருக்கும் எதிரிலிருந்த அம்மன் நினைவு ஒருமுறைதான் வந்தது. இருவரும் வெட்கப்பட்டனர். தவறு செய்துவிட்டாற்போல் பயந்து விட்டனர். மனத்துக் குள்ளேயே மன்னிக்கச் சொல்லி வேண்டிக் கொண்டனர். அப்போது அம்மன் கண்கள் இருவருக்கும் பரிவோடு தென் பட்டன.

லட்சுமியைக் கல் திண்ணை மேல் ராஜு உட்கார வைத்தான். நடந்த கதையை எல்லாம் விவரமாகச் சொன்னான். தான் மேலே என்ன செய்ய இருக்கிறான் என்பதையும் விரிவாகச் சொன்னான். நிலைமை லட்சுமிக்குப் புரிந்தது. அந்த இரவு மட்டும் விடிய வில்லை யென்றால், எத்தனை பேர் உயிருக்கோ அபாயம். பதாலு, புல்லி, புடத்தடு, ராஜு, தன் அண்ணன்—எல்லார் உயிர்க்கும் ஆபத்துதான்.

லட்சுமி அம்மன் முன்னால் சாஷ்டாங்கமாக விழுந்தாள். "தாயே! எல்லாரையும் காப்பாத்து" என்று மீண்டும் மீண்டும் மனத்துக்குள் சொல்லிக் கொண்டாள். மெள்ள எழுந்தாள்.

"இனி நான் போவணும்" என்றான் ராஜு.

"ஒரு நிமிஷம்" என்றாள் லட்சுமி. கணுச்சாரியின் இரண்டு கைகளையும் பிடித்துக் கொண்டாள்.

"சித்தப்பா, எங்க ரெண்டு பேருக்கும் அம்மன் முன்னால் கல்யாணம் பண்ணிடு" என்றாள்.

அசந்துவிட்டார் கணுச்சாரி. "அம்மா!" என்றார். மல்லி அமைதியாக அம்மனைப் பார்த்தாள். அவள் நெஞ்சில் எங்கோ மெல்லிய கொடி ஒன்று அறுந்துவிட்டது. அறுந்துவிடும் என்பது அவளுக்குத் தெரியும். அறுந்தே ஆகவேண்டும் என்றும் தெரியும். வேதனையால் கனமான நிம்மதி அவளை ஆட்கொண்டது.

"அவசரப்படாதே. நான் திரும்பி வந்துடுவேன். ஆகட்டும்" என்றான் ராஜு.

"அப்படி இல்லே. இந்த நிமிஷம் போயிட்டா என்னமோ, என்ன ஆகுமோ?" என்றாள் லட்சுமி.

கணுச்சாரிக்கு இது பெரிய பிரச்னையாகப் பட்டது. 'ஊர்ப் பெரிய வங்க ரெண்டு பேரும் தம்மைக் குழிதோண்டிப் புதைச்சிடுவாங்க, இந்த விஷயம் தெரிஞ்சா. லட்சுமிக்கு வேறெ இடம் நிச்சயம் பண்ணிட்டாங்க. ஊரெல்லாம் கொந்தளிப்பில் இருக்குது. தமக்கு மட்டும் இல்லை, ராஜுவுக்கும் லட்சுமிக்குங்கூட ஆபத்து தான்' என்று எண்ணினார்.

''யோசிக்காதே சித்தப்பா, அக்கா சொன்ன மாதிரி பண்ணிடு'' என்றாள் மல்லி.

கணச்சாரி ராஜுவைப் பார்த்தார். ராஜுவுக்கும் இந்த அவசரக் கல்யாணத்தில் விருப்பம் இல்லை.

'' என் பேச்சைக் கேளு லட்சுமி. விடியறத்துக்குள்ளே, அம்மன் தயவிருந்தா, எல்லாம் சரியாப் போயிடும். இதுக்குள்ளே ஏன் அவசரப்படணும்?'' என்றான்.

'' என்னமோ, இந்தச் சந்தர்ப்பம் மறுபடியும் வருமோ, வராதோ? இப்பவே நடந்துடணும்'' என்றாள் லட்சுமி.

''உனக்கு மூளை கெட்டுப் போச்சா லட்சுமி?'' என்றான் ராஜு.

'' இல்லே, இப்போ நடக்கலேன்னா, இனிமே எப்பவும் நடக்காதுன்னு எனக்குத் தோணுது.''

'' நாங்க எந்த மாதிரி வேலைக்குப் போறோம்னு தெரியுமில்லே? ஏதாவது ஆபத்து வந்ததுன்னா, இதுலே எத்தனை பேரு திரும்பி வரப்போறாங்களோ தெரியாது. என் பேச்சைக் கேளு.''

''அதுக்குத்தான் இப்பவே நடந்துடணும்னு சொல்றேன். உங்களுக்கு ஏதாவது நடக்கக் கூடாதது நடந்துட்டுதுன்னா, அதுலே பங்கு எனக்கும் வேணும். அம்மன் முன்னாடி நாம ரெண்டு பேரும் ஒண்ணாயிட்டா, அப்போ எனக்கு உரிமை வந்துடும். உங்களோடு சேர்ந்து சாவறதுக்கும் பொழைக்கறதுக்கும் உரிமை உண்டாகிவிடும். சித்தப்பா, இந்தக் கல்யாணம் உன் கையாலெ நடந்துதுன்னா எனக்கு எவ்வளவோ சந்தோஷமா இருக்கும்'' என்றாள் லட்சுமி.

ராஜுவின் கண்கள் கசிந்தன. அதற்கு மேல் அவனால் தடையொன்றும் சொல்ல முடியவில்லை. கணச்சாரி அம்மனைப் பார்த்தார், தமக்கு ஏதாவது செய்ய வேண்டியதைப்பற்றி அறிவுறுத்துவாளா என்று. அம்மனின் அமைதியான பார்வையில் பாவம் ஒன்றும் அவருக்குப் புரியவில்லை. ஒருமுறை கண்ணை மூடிக் கொண்டு முடிவுக்கு வந்தார்.

''தாலிக் கயிறு எதுவுமில்லையே?'' என்றார்.

''கயிறும் மஞ்சளும் போதும். இதோ நொடியிலே திரிச்சிடறேன்'' என்றாள் மல்லி. கன்னிப் பெண், பெரிய சுமங்கலி ஆய்விட்டாள் அந்தக் கல்யாணத்துக்கு. மந்திரங்கள் தெரியாத புரோகிதர் கணச்சாரி. ஆனால் அம்மனின் சந்நிதானம் எல்லாக் குறைகளையும் நிறைவு செய்துவிட்டது; எல்லாக் குறைபாடுகளுக்கும் பாதுகாப்பு அளித்துவிட்டது.

ராஜு, லட்சுமி கழுத்தில் மஞ்சள் கோத்த தாலிக் கயிற்றைக் கட்டினுன். கணேச்சாரி அம்மனுக்குப் பூஜை செய்தார். அம்மன் முன்னுல் புதிய தம்பதிகள் இருவரும் மண்டியிட்டனர். கணேச்சாரி இருவர் மேலும் அம்மன் பாதங்களிலிருந்து பூக்களையும், அட்சதையும் எடுத்துத் தூவினுர். அவர்கள் பின்னுல் நின்று இரண்டு பேரையும் பார்த்துக்கொண்டிருந்தாள் மல்லி. கணேச்சாரி அவள் பக்கம் பார்த்தார். கண்களில் ஓரிரு சிறுதுளிகள் பளிச்சிட்டன. எவ்வளவோ தூரத்திலிருந்து அந்தத் தம்பதிகளைப் பார்ப்பது போலிருந்தது அந்தப் பார்வை. ராஜுவிடம் மல்லிக்கு எவ்வளவு காதல் என்பது கணேச்சாரிக்குத் தெரியும். ராஜு அவளைக் கல்யாணம் பண்ணிக்கொள்ள முடிவு செய்த போது அவள்தான் வேண்டாமென்று சொல்லிவிட்டாள் என்பதும் தெரியும். இப்போது அவள் கண்களில் பளிச்சிட்ட நீர்த்துளிகளுக்குக் காரணம் வேதனையா, திருப்தியா, சாந்தமா? கணேச்சாரிக்கு ஒன்றும் புலனுகவில்லை. ஒரு நொடிப் பொழுது திடீரென்று அது அம்மனின் பார்வைபோல் தென்பட்டது. கணேச்சாரி அம்மன் பக்கம் பார்த்து வணங்கினுர்.

புதிய தம்பதிகள் இருவரும் கணேச்சாரி கால்களில் விழுந்து வணங்கினுர்கள்.

''நீங்க ரெண்டு பேரும் பதினுறும் பெற்றுச் சௌக்கியமா இருக்கணும்'' என்று ஆசீர்வதித்தார் கணேச்சாரி.

''மல்லீ!'' என்று மகிழ்ச்சியோடு, உணர்ச்சிப் பெருக்கோடு தழுவிக் கொண்டாள் லட்சுமி. மெள்ள விடுவித்துக் கொண்டு, மல்லி ராஜுவிடம் சொன்னுள்:

''அத்தான்! நமக்கு நேரமாயிட்டது.''

''நானும் வர்றேன் உங்களோட'' என்ருள் லட்சுமி.

''நீ வேணும். நீ வந்தா போற காரிய மெல்லாம் கெட்டுப் போயிடும். உங்க அண்ணன் வந்தாலும் வருவார். நீ பக்கத்திலே இருந்தா என் தைரியமெல்லாம் பறந்து போயிடும், உனக்கு ஏதாவது ஆயிடுமோன்னு. நீ வீட்டுக்குப் போ'' என்ருன் ராஜு.

''இன்னைக்கி ராத்திரி என்னுல் வீட்டுக்குப் போக முடியாது. போவட்டும், நீங்க திரும்பி வர்றவரைக்கும் இங்கேயே இருக்கிறேன். என்ன சித்தப்பா?'' என்ருள் லட்சுமி.

எல்லாவகையிலும் அதுவே நல்ல யோசனையாகப் பட்டது கணேச்சாரிக்கும்.

ராஜுவும் மல்லியும் இருட்டுத் திரை மறைவில், புளியமரத் தடிக்குப் போய்ச் சேர்ந்தார்கள். அவர்களை எதிர்பார்த்துக் கொண்டிருந்த ராமியும் கங்கப்பாவும் எழுந்தார்கள். மெள்ள நகர்ந்தனர்.

லட்சுமியைக் கர்ப்பக் கிருகத்தில் கல் திண்ணை மேல் படுத்துக் கொள்ளச் சொல்லி, கணுச்சாரி வெளியே வந்து கதவை மூடினார். மண்டபத்தில் போய்ப் படுத்துக் கொண்டார்.

''கார் இருந்தா எவ்வளவு வசதியாக இருக்கும் இந்த வேலைக்கு?'' என்றார் தர்மராஜு.

''அப்பா பட்டணம் போனாரில்லே'' என்றார் வெங்கன்ன.

இரட்டை மாட்டு வண்டிக்கு முன்னும் பின்னும் மூங்கில் தட்டிகள் கட்டப்பட்டிருந்தன. சுற்றிலும் மாந்தோப்புகள். அந்த இடம் ஊரிலிருந்து ஐந்தாறு மைலில் இருக்கும். போர்க் காலத்தில் அந்தத் தோட்டங்களில் ஒரு சின்னப் படை முகாம் இருந்தது. டிரங்க் ரோடு ஆறு மைல் தூரத்திலிருந்தது; மிலிட்டரிக்காரர்கள் போட்டது. பத்துப் பதினைந்து சின்னச் சின்ன ஷெட்டுகள் தோட்டங்களில் இருந்தன. அந்தக் காலத்திலிருந்து அவை அப்படியே இருந்து விட்டன. அவற்றில் சிலவற்றைக் கோடைக் காலத்தில் மாங்காய் பழுக்கப் போட உபயோகப் படுத்துவதுண்டு. அவற்றில் மட்டுமே கொஞ்சம் சுவர்களும் கூரையும் சரியாக இருந்தன. அவற்றுக்கு அவ்வப்போது மராமத்து நடக்கும். மற்றவை எல்லாம் மெள்ள மெள்ளச் சிதைந்து கொண்டிருந்தன. அவற்றை இடிப்பது கூட அநாவசியமான பணச் செலவு. அதனால் அவற்றைத் தரைமட்டமாக்கும் வேலையைக் காலத்துக்கு விட்டுவிட்டனர். ஒரு மாம்பழப் பருவத்தைத் தவிர, அந்தத் தோட்டங்களில் சந்தடி இருக்காது. அந்த ஷெட்டுகள் ஒன்றில் புடத்தடுவை மறைத்திருந்தார்கள்.

மீராவும் இன்னும் இரண்டு பேரும் புடத்தடு வாயில் துணியைத் திணித்து, ஷெட்டிலிருந்து வண்டி யருகே தூக்கி வந்து வண்டியில் ஏற்றினார்கள். தர்மராஜுவும் மீராவும் இன்னும் இரண்டு பேரும் வண்டியில் ஏறிக்கொண்டார்கள். பென்டையா, பின் தட்டியைக் கட்டிவிட்டான். வண்டி நகரப்போகும் சமயம் போத்துக்காடு ஓடிவந்தான். வெங்கன்ன, வண்டியோட்டியின் பக்கத்தில்

உட்கார்ந்திருந்தவர் கீழே குதித்தார், வரும் ஆசாமி யாரென்று தெரியாமல்.

''ஐயா! கோயில்லே ஏதோ குரலுங்க கேக்குதுங்க'' என்றான் போத்துக்காடு.

''கோயில்லியா?'' என்றார் வெங்கன்னு.

''அம்மன் கோயில்லே. வெளிக் கதவெல்லாம் மூடியிருக்குது. கோயில் பின்னடி புளிய மரத்துக்குக் கீழே கங்கப்பாவும், ராமியும் உக்காந்திருந்தாங்க. இருட்டிலே முதல்லெ அடையாளம் தெரியலே. எழுந்திரிச்சி ஏரிகரை பக்கமா நடந்தப்போ தெரிஞ்சிது.''

''அடே வெங்கன்னு! அந்த ராஜுப்பய கோயில்லேதான் இருக்கான் போல இருக்குடா'' என்றார் தாட்டிச் சந்து வழியாகத் தர்மராஜு.

''இன்ஸ்பெக்டரே பாத்தாரே?'' என்றார் வெங்கன்னு.

''எதுக்கும் நல்லது. நீ போய்ப் பாரு. போத்துக்காடு, நீ போயி ஒரு பத்துப் பேரு நம்ம ஆளுகளைத் தயார் பண்ணு. அவன் சரியான போக்கிரி. சுலபத்திலெ மசியமாட்டான். தெரியுமா, ஜாக்கிரதை?''

''நீ ஒருத்தனே கூட்டிட்டுப் போறியா புடத்தடெ?'' என்று கேட்டார் வெங்கன்னு.

''இந்த வேலைக்கு எத்தனை பேர் வேணும்டா? மீரா, வெங்கடேசு, பென்டையா எல்லாரும் இருக்காங்க. அங்கே போனதும் நம்ம காவல்காரங்க இருக்காங்க. சீக்கிரமாப் போ!'' என்று எச்சரித்தார் தர்மராஜு. பென்டையாவும், வெங்கடேசுவும் முன்பக்கம் ஏறினார்கள். வண்டி நகர்ந்தது. வெங்கன்னுவும் போத்துக்காடுவும் ஊரை நோக்கித் திரும்பினார்கள்.

வண்டியைக் காத தூரத்தில் பார்த்தவுடனே ஓட்டமாக ஓடினாள் புல்லி, ''என் சின்ன துரெ, என் புடத்தய்யா!'' என்று சொல்லிக்கொண்டே. இதெல்லாம் நாடகத்தில் ஒரு கட்டந்தான். மூன்று ரௌடிகள் அவள் பின்னால் ஓடிப் பிடித்துக் கொண்டார்கள். அவள் திமிறிக்கொண் டிருந்தாள். மீதி இரண்டு பேர் வண்டி அருகே ஓடி, புல்லி வண்டியை நெருங்காதபடி குறுக்கே நின்றார்கள். அந்தச் சமயம் பார்த்து ராஜு ஷெட்டின் பின்னாலிருந்து இருட்டு மறைவில் முன் கதவு அருகில் வந்தான். கருங்கல்லால் பட்டென்று பூட்டை உடைத்து விட்டான்.

கதவை மெதுவாகத் தள்ளி, ''பதாலு'' என்றான்.

''ஐயா?'' என்றான் பதாலு.

''உஷ்!'' என்றான் ராஜு.

ஷெட்டருகே உண்டான சந்தடி என்ன வென்று பார்ப்பதற்கு வண்டிக்குக் குறுக்கே நின்ற ரௌடிகள் ஓடினார்கள். ஷெட்டின் கதவு திறந்திருந்தது. ஆச்சரியத்தோடு உள்ளே பார்த்தார்கள். இரண்டு தலைகள் மீதும் இரண்டு இரும்புத் தடிகள் டப்பென்று மோதின. பொதேரென்று சுருண்டு விழுந்த இரண்டு பேரையும் உள்ளே இழுத்துப் போட்டு, கதவின் வெளிப்பக்கக் கொக்கியை மாட்டிவிட்டார்கள் பதாலுவும் ராஜுவும். ஷெட்டருகே இருட்டில் என்ன நடக்கிறதென்பது வண்டி அருகில் இருந்தவர்களுக்குத் தெரியவில்லை. புல்லியை இழுத்துக் கொண்டே மூன்று ரௌடிகள் ஷெட்டை நோக்கி வந்தார்கள். இதற்குள் பென்டையா இறங்கிப் பின்தட்டியை அவிழ்த்தான். மீரா கீழே குதித்தான். கங்கப்பா பக்கத்திலிருந்த புதர் மறைவிலிருந்து அவர்கள் மேல் பாய்ந்து இருவர் கழுத்தையும் இறுக்கிப் பிடித்துக் கொண்டான். மூன்று பேரும் பக்கத்திலிருந்த வாய்க்காலில் உருண்டு போய்விட்டார்கள். தர்மராஜுவுக்கு அப்போதுதான் புரிந்தது, ஏதோ வம்பு வந்துவிட்டதென்று. புடத்தடுவை வண்டியில் விட்டுவிட்டுக் கீழே குதித்தார். ஷெட்டருகே அடிதடி நடந்துகொண் டிருந்தது. ஒளிந்து கொள்ள ஒரு புதர் பக்கமாகப் போனார். ராமி முன்றானையில் முடிந்திருந்த சிவப்புக் காரத்தை அவர் இரண்டு கண்களிலும் போட்டு விட்டாள். ஓவென்று அலறிக்கொண்டு கீழே விழுந்து துடிதுடிக்கலானார் தர்மராஜு.

மீரா, பென்டையா எவ்வளவு திமிறினாலும், தன்னை எவ்வளவு தான் அடித்தாலும் தன் யானைப் பிடியை மட்டும் விடவில்லை கங்கப்பா. ராமி விடுவிடென்று வந்து சிவப்புக் கார வைத்தியத்தை மீராவுக்கும் பென்டையாக்குங் கூட நடத்தி வைத்தாள். அதில் கொஞ்சம் காரம் கங்கப்பா மூக்கிலும் பட்டுவிட்டது பெரிய தும்மல் போட்டான். தும்மலில் பிடியை விட்டுவிட்டான். மீராவும் பென்டையாவும் கண்ணுக்குக் குறுக்கே கைகளை வைத்துக் கொண்டு திக்குத் தெரியாமல் ஓட்டம் பிடித்தனர். பென்டையா சரியாக வண்டிச் சக்கரத்தில் முட்டிக் கொண்டான், அந்த வேகத்தில். மறுபடியும் எழுந்திருக்கவில்லை. மீரா கால் தடுமாறிச் சாலைப் பக்கத்தில் வாய்க்காலில் விழுந்து விட்டான். கங்கப்பா தும்மிக்கொண்டே எழுந்தான். மல்லி வண்டியில் ஏறிப் புடத்தடுவின் கட்டுக்களை அவிழ்த்தாள். வாயிலிருந்த துணியை எடுத்து விட்டாள். இதற்குள் ராமியும் புல்லியும் வந்தார்கள். புடத்தடுவை வண்டியிலிருந்து கீழே இறக்கினார்கள். ''என் கண்ணே!''

என்று சொல்லிக்கொண்டே, அழுகையும் சந்தோஷமும் ஒன்று சேரக் கெட்டியாக அவனை அணைத்துக் கொண்டாள் புல்லி.

அதன் பிறகு போராட்டம் அதிக நேரம் நடக்கவில்லை. மீதி ரௌடிகள் கால் வரிசையைக் காட்டத் தொடங்கி விட்டார்கள். கங்கப்பா வண்டியின் முன்பக்கம் ஏறினன். புல்லி, ராமி, மல்லி, புடத்தடு எல்லாரும் வண்டியில் ஏறி உட்கார்ந்தார்கள்.

வண்டி நகர்ந்தது.

ராஜு பதாலுவிடம் சொன்னன்: ''பதாலூ! நீ நேராப் பட்டணம் போலீஸ் ஸ்டேஷனுக்குப் போ. நடந்ததை எல்லாம் இன்ஸ்பெக்டர் கிட்டே சொல்லிடு. நீ எதுக்கும் பயப்பட வேணும்.''

''இப்படியே போறேன், ஐயா! நானு ஒரு சமயம் ஜெயிலுக்குப் போயிட்டா புல்லி, பசங்க...''

''டேய், நீ ஜெயிலுக்குப் போனு, உன்னோடகூட நானும் வர்றேண்டா. அதொண்ணும் நடக்காது. போலீசை நேரா இங்கே கூட்டிக்கிட்டு வா. இவங்க எல்லாரையும் கைது பண்ணச் சொல்லு. இவங்க சாட்சியம் போதும், உன் மேலேயும் என் மேலேயும் உள்ள கேசைத் தள்ளிடறதுக்கு?''

ராஜுவும் பதாலுவும், தர்மராஜு பென்டையா மீரா வெங்க டேசு எல்லார் கையையும் காலையும் கட்டி, ஷெட்டிலே போட்டார்கள். கதவுக்குக் கொக்கியை மாட்டிவிட்டுப் புறப்பட்டார்கள். குறுக்கு வழியில் பதாலு பட்டணத்துக்குப் புறப்பட்டான். ராஜு வண்டியைப் பிடிக்க விடுவிடுவென்று நடந்தான்.

வெங்கன்னவையும் கூடப் பத்துப் பேரையும் பார்த்ததுமே கணச்சாரி மலைத்துவிட்டார். எழுந்து மடமடவென்று கோவில் அருகே போகப் போனர். நாலைந்து பேர் அவரைப் பிடித்துக் கொண்டார்கள். கோவில் முன்னலிருந்த கொடிக் கம்பத்தில் கைகளைப் பின்னல் சுற்றிக் கட்டிவிட்டார்கள். இந்தச் சந்தடியைக் கேட்டுக் கதவைத் திறந்தாள் லட்சுமி. வெங்கண்ண அந்த மங்கலான வெளிச்சத்தில் அவளை முதலில் அடையாளம் கண்டுகொள்ளவில்லை. துணைவர்களோடு விடுவிடுவென்று உள்ளே போனர். லட்சுமி அம்மன் பாதங்களைப் இறுக்கமாகப் பிடித்துக்

கொண்டாள். வெங்கண்ணு விளக்கொளியில் அவளைப் பார்த்தார். அவர் கோபம் எல்லையைக் கடந்துவிட்டது.

''பாழாப் போன பெண்ணே! இந்த ராத்திரி நேரத்திலே கோவில் பக்கம் சுத்திக்கிட்டிருக்கறியா? யாருக்காக வந்தேடி?'' என்று இரைந்தார்.

''எனக்குத் தாலி கட்டிய புருஷனுக்காக'' என்றாள் லட்சுமி நிதானமாக. அம்மன் பாதங்களைப் பிடித்துக்கொண்டு, ''எங்க கல்யாணத்துக்கு அம்மனே சாட்சி'' என்றாள்.

''என்னது? கல்யாணமா? நட வீட்டுக்கு. உன் தோலே உரிக்க லேன்னு, நானு ராமையா பண்ணையார் மகனே இல்லே. வாடி!'' வெங்கண்ணு பலத்தையெல்லாம் உபயோகித்து லட்சுமியை இழுத்தார் இந்தப் பக்கம்.

''என்னை விட்டுடு, நான் வரமாட்டேன்'' என்று திமிறிக் கொண்டிருந்தாள் லட்சுமி. வெங்கன்னு விடவில்லை. துணைவர்கள் கோவிலுக்குள்ளே எல்லாம் தேடினார்கள். ராஜுவைக் காணவே காணோம்.

''எங்கேடி உன் கள்ளப் புருஷன்?'' என்று கேட்டார் வெங்கன்னு. லட்சுமி பதில் சொல்லவில்லை. அலட்சியமாக அவரைப் பார்த்துக் கொண்டே திமிறுவதை நிறுத்திக் கொண்டாள். வெங்கன்னு அவளை வீட்டுக்கு இழுத்துக்கொண்டு போனார்.

சரசரவென்று லட்சுமியை இழுத்து வந்து மாடிப்படிக்குக் கீழுள்ள அறையில் தள்ளிக் கதவுக் கொக்கியை மாட்டிவிட்டார் வெங்கன்னு. லட்சுமியின் அழுகையையும், வெங்கன்னுவின் அதட்டல்களையும் கேட்டு எழுந்து வந்தாள் சூராலு.

''என்னடா இது?'' என்று கேட்டாள்.

''என்னவா? உன் செல்லப் பொண்ணு என்ன பண்ணியிருக்கா தெரியுமா? ராத்திரியே போயி அந்த லுச்சாப் பய கையாலே அம்மன் கோயில்லே தாலி கட்டிக்கிட்டாளாம். அவன் அங்கே வராமப் போகமாட்டான் இல்லே. அவனை ரெங்கன்கிட்டெ வழி கூட்டி அனுப்பிச்சிட்டு வர்றேன்'' என்று சொல்லிக் கொண்டே போய்விட்டார் வெங்கன்னு.

சூராலுவுக்குத் தலை சுற்றியது. ஆவேசம், பயம், துக்கம் எல்லாம் சேர்ந்து அழுத்தி விட்டன.

''எவ்வளவு பெரிய தப்பைப் பண்ணிட்டேடி?'' என்று சொல்லிக் கொண்டே கீழே விழுந்துட்டாள் சூராலு.

''அத்தே!'' என்று அழைத்துக் கொண்டே வந்து பிடித்துக் கொண்டாள் அதுவரை அறை வாயிற்படியில் வந்து நின்று

கொண்டிருந்த மருமகள். லட்சுமி ஜன்னல் கதவைத் திறந்தாள்.

'அம்மா, அம்மா! கதவைத் திற. நான் அங்கே போவணும். அவரை என்ன பண்ணிடுவாரோ அண்ணன்? அம்மா, அப்பாவுக்கு ஏதாவது ஆச்சின்னு உனக்கு எப்படி இருக்குமோ நினைச்சிப் பாரு! நானும் உன்னை மாதிரி பெண்தானே அம்மா. புருஷன் உயிருக்கு ஆபத்து வந்தா, எந்தப் பெண்ணுக்கும் எப்படி இருக்கும்னு உனக்குத் தெரியாதா? அம்மா, கதவைத் திற! திறக்கலேன்னு என்னைக் கொன்று தின்ன மாதிரி. அம்மா, அம்மா!''

சூராலுவால் இந்த ஓலத்தைத் தாங்க முடியவில்லை. மகளைக் கண்டிக்கவோ, சும்மா இருக்கச் சொல்லவோகூட அவளுக்கு மனம் வரவில்லை. சொல்லப் போனால், என்ன நடந்ததோ, இந்தத் தகராறெல்லாம் எதுக்காக என்பதுகூட அவளுக்குப் புரியவில்லை. ரங்கன் சாவிலேயே பாதி நினைவிழந்து திரிந்து கொண்டிருந்த சூராலு, பொல பொலவென்று கண்ணீர் விட்டுக்கொண்டே அப்படியே உட்கார்ந்திருந்தாள்.

''அண்ணீ, நீயாவது கதவு திறக்கமாட்டியா? அண்ணீ! அண்ணீ!'' என்று நெஞ்சு வெடிப்பதுபோல் அழுதாள் லட்சுமி. வெங்கன்னுவிடம் தனக்கு எவ்வளவு பயம் இருந்தாலும், இந்திராவுக்கு லட்சுமியென்றால் மிகவும் ஆசை. அவள் பெண் இதயம் இளகிவிட்டது. என்ன ஆனாலும் ஆகட்டும் என்று கதவைத் திறந்து விட்டாள்.

கூண்டைத் திறந்தால் பறவை பறந்துபோவது போல் பறந்து விட்டாள் லட்சுமி.

வண்டி ஏரிகரை மேல் வரும்போது, பொலபொலவென்று பொழுது விடிந்து கொண்டிருந்தது. ராஜு கங்கப்பாவிடம், ''டேய், புல்லி ராமி புடத்தடு மூன்று பேரையும் அவங்க வீட்லே வுட்டுட்டுவா'' என்றான். மல்லி வண்டியிலிருந்து இறங்கினாள். வண்டி நகர்ந்தது. ராஜு கோவில் மதில் கதவைத் தள்ளினான். கதிகலங்கி விட்டான்.

கணுச்சாரி கொடிக் கம்பத்தில் கட்டப்பட்டிருந்தார். வாயில் துணி திணிக்கப்பட்டிருந்தது. கர்ப்பக் கிருகக் கதவு திறந்தே கிடந்தது. விர்ரென்று மல்லி உள்ளே ஓடினாள். அவர் கட்டுகளை அவிழ்த்தாள். ராஜு கோவில் மதிலுக்குள் காலை வைத்தான். அப்போது கணுச்சாரி வாயிலிருந்த துணியை எடுத்து விட்டாள் மல்லி.

''அப்பா, வராதே!'' என்று கத்தினார் கணுச்சாரி. இதற்குள் பத்துப் பேர் ராஜுமேல் விழுந்தனர். ஒரே உலுப்பில் அத்தனைப்

பேரையும் ஒரு பக்கத்தில் தள்ளிவிட்டான் ராஜு. மல்லி மேலே பார்த்தாள். மதிற் சுவர் மேல் நின்றுகொண்டு வெங்கன்ன பெரிய கல்லைத் தூக்கிக்கொண்டு ராஜு மேல் குறி பார்த்துக் கொண்டிருந்தார். காற்றுப் போல ஓடி, ராஜுவை ஒரு பக்கத்தில் தள்ளிவிட்டாள். மல்லியின் உச்சந் தலையில் அந்தக் கல் விழுந்தது. மல்லி சுருண்டு விழுந்து விட்டாள். வெங்கன்ன ஏரிகரை மேல் குதித்துவிட்டார். மல்லி கீழே விழுந்ததும், பயந்து போய் அவர் துணைவர்கள் ஓட்டம் பிடித்தனர்.

வெள்ளம் போல வந்து விழுந்தாள் லட்சுமி. வாயிற்படியில் வந்ததுமே கீழே இரத்த மடுவில் விழுந்து கிடந்த மல்லியைப் பார்த்தாள்.

''மல்லி!'' என்று கதறிக்கொண்டே மேலே விழுந்து விட்டாள் லட்சுமி. ராஜுவுக்கு நடந்தது புரிவதற்கு ஒரு நொடி பிடித்தது. கீழே உட்கார்ந்து மல்லியின் தலையைத் தன் மடியில் வைத்துக் கொண்டான். கணுச்சாரி அம்மன் பாதங்கள் அருகிலிருந்த கலசத்தைக் கொண்டு வந்து இரத்தத்தைக் கழுவினர். ராஜுவுக்குத் துக்கம் கரை புரண்டது.

''மல்லீ! மல்லீ!'' என்று கதறி அழுதான்.

வெங்கன்னவுக்கு மூளை கலங்கிவிட்டது. போன வண்டி திரும்பி வந்தது. அதிலிருந்து மல்லி இறங்கினள். அதில், ராமி, புல்லி, புடத்தடு இருந்தார்கள். 'தர்மராஜுவும் மத்தவங்களும் என்ன ஆனுங்க? தங்கள் திட்டம் சுக்குநூருகப் போய்விட்டதா? பதாலு, வெளியே வந்துவிட்டானு? தங்களோட ஆட்டம் முடிஞ்சி போச்சா?' அந்தச் சமயத்தில் பொறுக்க முடியாத கோபத்தோடு மதிற்சுவரில் ஏறி அந்தக் கல்லை வீசினர் வெங்கன்ன. அது மல்லியின் மேல் பட்டது.

பட்டணத்திலிருந்து கார் வந்துகொண் டிருந்தது. அப்பாவுக்கு இதெல்லாம் தெரிந்து போய்விடும். வெங்கன்ன ஓட்டம் பிடித்தார், கார் ஏரிகரை நோக்கித் திரும்புவதற்கு முன்னடியே.

கார் கோவிலைத் தாண்டும்போது சாலைக்குக் குறுக்கே நின்று நிறுத்தினர் கணுச்சாரி. ராமையாவைப் பார்த்தார். ஒரு நிமிஷம் தடுமாறிப் போனர். தைரியத்தை வரவழைத்துக் கொண்டு, பின் கதவுப் பக்கத்தில் போனர். ராமையாப் பண்ணையார் ஆச்சரியத்தோடு அவரைப் பார்த்தார்.

''ஐயா! நீங்கதான் காப்பாத்தணும். உயிருக்கு ஊசலாடிக்கிட்டிருக்குது குழந்தை. கார்லே பட்ணம் ஆஸ்பத்திரிக்குக் கொண்டு போகலேன்ன நமக்குத் தக்காது'' என்ருர்.

''யாரு?'' என்று கேட்டார் ராமையா.

''மல்லம்மா.''

''மல்லியா?''

ராமையா காரிலிருந்து இறங்கினர். அதற்குள் கோவில் வாயிற் படியில் மக்கள் குழுமி விட்டார்கள். ராமையா பண்ணையாரைப் பார்த்ததும் வழிவிட்டார்கள். ராமையா உள்ளே போனர்.

ராஜு மடியில் மல்லி! மல்லி மேலே விழுந்து அழுது கொண்டே தன் மகள்! ராமையாவுக்குத் தலைகால் புரியவில்லை. அருகில் போனர். ராஜு அவரைப் பார்த்து, ''மாமா! நம்ம பகைக்குப் பலியாயிட்டா மல்லி'' என்றன்.

ராஜு தன்னை 'மாமா' என்று கூப்பிட்டதுமே, ராமையா மனத்தில் எங்கோ சுருக்கென்றது. லட்சுமி எழுந்து உட்கார்ந்தாள். அப்பாவைப் பார்த்தாள். விஷயம் எல்லாம் அப்பாவுக்குத் தெரிந்தால் தன்னை என்ன செய்வாரோ என்ற கலக்கங்கூட அவள் மனத்தில் இல்லை.

''நாமெல்லாம் சேந்து கொண்ணுட்டோம், தெய்வம் மாதிரி பொண்ணை. நீ, நானு, அண்ணன், எல்லாரும்!'' என்றுள் லட்சுமி அழுகைகளுக்கிடையே.

ராமையா மெள்ள வந்து நிம்மதியாகத் தூங்குவது போலிருந்த மல்லி முகத்தைப் பார்த்தார். கனுச்சாரி மறுபடியும் தண்ணீர் தெளித்தார்.

''டேய், சும்மா பாத்துக்கிட்டிருக்கறீங்களே, கார்லெ ஏத்துங்க குழந்தையெ'' என்றுர், கொஞ்சம் பயந்த குரலில்.

மல்லி கொஞ்சம் அசைந்தாள். கண்ணைத் திறந்தாள்.

''வேணும் சித்தப்பா? பட்டணம் சேர்றவரைக்கும் இந்த உயிரு நிக்காது!'' என்றுள் மெல்லிய குரலில்.

''மல்லீ!'' என்று கத்தினன் ராஜு.

''உன்னைப் பொழைக்க வெச்சிடறோம். உன்னைச் சாக விட மாட்டோம்'' என்றுள் லட்சுமி.

மெள்ளப் புன்முறுவல் பூத்தபடி குறுக்கே தலையாட்டினுள் மல்லி.

''அக்கா! எனக்கு மட்டும் உங்களை எல்லாம் விட்டுட்டுப் போவணும்னு இருக்குதா? அத்தான்! என்னை அம்மன் கிட்டெ கொண்டு போ!'' என்றுள் மெதுவாக.

ராஜு அவளை இரண்டு கையாலும் தூக்கிக் கொண்டு, அம்மன் சந்நிதானத்துக்குக் கொண்டு போனன்.

''கோவில் தீட்டுப் பட்டுடும்'' என்ருர் யாரோ, வாயிற்படி அருகில் இருந்த கும்பலிலிருந்து.

''தீட்டா! அம்மனுக்குத் தீட்டேது? தீட்டுப் பட்றது மனுஷங்களுக்குத்தான்!'' என்ருர் கணுச்சாரி. ராமையாவும் உள்ளே சென்ருர்.

கீழே படுக்க வைத்ததும், ''அப்பா!'' என்ருள் மல்லி வேதனையோடு.

''என்ன மல்லீ?'' என்று கேட்டாள் லட்சுமி.

''அக்கா! நெஞ்சிலெ ஏதோ கனமா இருக்குது. ரவிக்கை முடியை அவிழ்த்துடேன்'' என்ருள் மல்லி. லட்சுமி முன்ருனையின் உள்ளே கையைவிட்டு அவிழ்த்தாள். ரவிக்கை தளர்ந்ததுமே பழைய கவரொன்று, நசுங்கிப் போனது நழுவிக் கீழே விழுந்தது.

''என்னது அது?'' என்ருள் லட்சுமி. மல்லி சட்டென்று இழுத்துக் கொண்டாள். அத்தானுக்கு எழுதிய கடிதங்களின் இரகசியம் அம்பலமாகிவிட்டதென்ற நாணத்தால் அவள் முகம் சிவந்தது. ஒரு விநாடி நாணத்திலிருந்து மெள்ளச் சிரிப்பு பிறந்து வந்தது. கடிதங்களைக் கையில் பிடித்துக் கொண்டு சொன்ருள்: ''கடைசிக் கடுதாசி—இன்னைக்கு எழுத வேண்டியது. இனிமே எழுத முடியாது. அத்தானுக்கு எழுதின அசட்டுக் கடுதாசிங்க.''

ராஜு நடுங்கும் கைகளோடு அவற்றை வாங்கிக் கொண்டான். காராப் பசு கன்று போட்ட நாளன்று எழுதிய கடிதம் முதலில் அவன் கையில் வந்தது.

''மல்லீ! மல்லீ!'' என்று கதறிக் கடிதங்களைக் கண்ணீரில் நனைத்து விட்டான்.

கங்கப்பா வந்து விழுந்தான். மல்லியின் நிலையைப் பார்த்து, தன் தலையைக் கல்தூணில் மோதிக் கொள்ளப் போனுன். நாலு பேர் பிடித்துக் கொண்டாலும் நிற்கவில்லை. மல்லி மெதுவாகக் கூப்பிட்டாள்.

''நீ இப்படி ஆர்ப்பாட்டம் பண்ணிஞ, நான் சொல்றது உனக்கு எப்படிக் கேக்கப் போவுது? அழாமக் கேளு. இனிமே லச்சிமி அக்காதான் உனக்குத் தங்கச்சி. அழாதே அண்ணு! அழுதா என் உயிரு நிம்மதியாப் போவாது.''

''நிம்மதியா வாழ வேண்டிய பொண்ணு—நிம்மதியா உயிரெ வுட்டுட்றியா?'' என்ருன் கங்கப்பா, தழுதழுக்கும் குரலில். சாந்தப்படுத்த மல்லி அவன் தலையை நீவிஞள். அதன் பிறகு எல்லாரையும் பார்த்தாள். கொஞ்சம் பின்ஞல் இருந்தார் ராமையா.

''சித்தப்பா!'' என்று கூப்பிட்டாள். அருகில் வந்தார் ராமையா. அவர் கையைத் தன் கையால் பிடித்துக் கொண்டாள்.

''சித்தப்பா, ராத்திரி—நேத்து ராத்திரி—அம்மன் முன்னுல் அத்தானுக்கும் லச்சிமி அக்காவுக்கும் கல்யாணம் ஆயிட்டுது. லச்சிமி அக்காவை ஏதாவது ஒரு வார்த்தெ சொன்னீன்ன அம்மன் மேலெ ஆணே. வெங்கன்ன அண்ணு அவசரப்பட்டுட்டார். அவரை ஒண்ணும் சொல்லாதே. அம்மன் முகத்தைப் பாத்து என் கையிலெ சத்தியம் பண்ணு.''

ராமையாவுக்கு இவை எல்லாம் ஒரே குழப்பமாக இருந்தது. இருந்தாலும் அம்மன் முகத்தைப் பார்த்துக் கொண்டே, அவள் கையில் அடித்துச் சத்தியம் பண்ணினுர். மல்லி மெள்ள அம்மன் பக்கம் திரும்பிப் பார்த்தாள். அந்தப் பார்வையை அதற்குப் பிறகு திருப்பவே இல்லே.

சுப்பையா, புன்னேயா, சேஷம்மா, சுந்து எல்லாரும் ஓட்டமாக ஓடி வந்தார்கள்.

கணுச்சாரி மல்லம்மாவைக் காட்டினுர்.

''மல்லீ!'' என்று கதறினுர்கள் எல்லாரும்.

கணுச்சாரி தனக்குத் தானே சொல்லிக் கொண்டார் :

''அம்மன் அம்மன்லே கலந்து போயிட்டா. நம்ம மத்தியிலியே அம்மன் அவதரிச்சிக்கிட்டிருக்கா. நம்ம பகைங்களுக்கு அந்தத் தாயைப் பழிவாங்கிடறேம், புத்தியில்லாதவங்க ஆனதுனுலே. அம்மன் வாழறதுக்கு ஏத்தா மாதிரி என்னேக்காவது நம்ம ஊர் திருந்துமா? அம்மனேப் பாத்தா அடையாளம் கண்டுக்கக்கூடிய அறிவு மக்களுக்கு வருமா?''

— முற்றும் —